# மாணிக்கத் தமிழ்

விடுதலைப் பொன்விழா ஆண்டு வெளியீடு

467

முனைவர் தமிழண்ணல்

மணிவாசகர் பதிப்பகம்
9/7 சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை-600108.

முதல்பதிப்பு : அக்டோபர், 1997
திருவள்ளுவர் ஆண்டு : 2028

விலை ரூ. 35-00
மணிவாசகர் வெளியீட்டு எண் : 595

கிடைக்குமிடம் :

மணிவாசகர் நூலகம்

12-B, மேல சன்னதி, சிதம்பரம் - 608 001.

8/7, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை - 600 108.

28-A, வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை - 625 001.

15, ராஜ வீதி, கோயமுத்தூர் - 641 001.

28, நந்தி கோயில் தெரு, திருச்சி - 620 002.

தொலைபேசி :

சிதம்பரம் : 23069 சென்னை : 561039

மதுரை : 622853 கோயமுத்தூர் : 397155

திருச்சி : 706450

ஒளி அச்சு : லட்சுமி லேசர், சென்னை - 600 0108.

அச்சிட்டோர் : பாரி ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை - 600 013.

## பதிப்பாசிரியர்
### டாக்டர் ச. மெய்யப்பன்

டாக்டர் ச. மெய்யப்பன் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராகப் பணியாற்றியவர்; திருக்குறள் இயக்கம், திருமுறை இயக்கம், தமிழிசை இயக்கம், தமிழ்வழிக்கல்வி இயக்கம் முதலிய தமிழியக்கங்களில் முழுமூச்சுடன் ஈடுபட்டு உழைப்பவர்; தமிழகப் புலவர் குழுவின் துணைத் தலைவர். பல்கலைக் கழகங்களின் பதிப்புக்குழு உறுப்பினராகச் சிறப்பாகச் செயலாற்றி வருபவர். இவர், தமிழ் நாட்டில் பல பல்கலைக் கழகங்களில் அறக்கட்டளைகள் நிறுவியுள்ளார்; பதினாறு நூல்களின் ஆசிரியர். இவர் எழுதிய 'தாகூர்' நூல் தமிழக அரசின் முதற் பரிசு பெற்றது. தமிழ் நூல் வெளியீட்டுத் துறையில் சாதனைகள் பல புரிந்த செம்மலாகிய இவர், துறைதோறும் தமிழுக்கு ஆக்கம் தரும் நல்ல நூல்களைச் செம்பதிப்பாக வெளியிடுவதைத் தம் வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டுள்ளார். இவருடைய தமிழ்ப் பணியைப் பாராட்டிக் குன்றக்குடி அடிகளார், 'தமிழவேள்' என்னும் விருதினை வழங்கியுள்ளார். குளித்தலை கா.சு. பிள்ளை இலக்கியக்குழு, 'தமிழ் நெறிக் காவலர்' என்னும் விருதினை அளித்து இவரைச் சிறப்பித்துள்ளது. பதிப்புச் செம்மல் என அறிஞர்கள் இவரைப் பாராட்டுவர்.



# மாணிக்க ஒளி

பதிப்புச்செம்மல் தமிழவேள் ச. மெய்யப்பன்

'ஏறத்தாழ நாற்பது ஆண்டுகளாகத் தமிழ்ப் படிப்பு வட்டத்தில் முதல்நிலைக் கருத்தாளராக மாணிக்கனார் இருந்தார். இவர் ஆய்வுப் பயிற்சி தன் முயற்சியால் பெற்றது. தமிழ் ஆசிரியர்கள் பின்னிற்பதை விரும்பாதவர். எதிலும் முன்னிற்க வேண்டும் என்று விரும்பினார். தானே எடுத்துக்காட்டாக இருக்கவும் முயன்றார்'.

ஆராய்ச்சி அறிஞரும், தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் முதல் துணைவேந்தருமான வ. அய் சுப்பிரமணியம் அவர்களின் மதிப்பீடு. இம்மதிப்பீடே அறிஞர்கள் பலரின் கருத்தாகும்.

மூதறிஞர் மாணிக்கனார் ஆராய்ச்சி உலகில் பேரொளியாய் விளங்கியவர்கள். அவர்கள் ஆய்வுநெறி தமிழ்மரபு சார்ந்தது. தொல்காப்பியத்தின்

புதுமைக்கூறுகளையும் பாரதியின் பழமைக் கூறுகளையும் கண்டு நிறுவியவர். உரையாசிரியர்களைப் பற்றி நிரம்பச் சிந்தித்த உரையாசிரியர். தொல்காப்பியம் எழுத்ததிகாரம் மூன்றியலுக்கு உரை கண்டவர். திருக்குறளுக்கும் தெளிவுரை கண்டவர். மரபுவழிப்புலமைச் சங்கிலியின் கடைசி வளையமாகத் திகழ்ந்தவர். ஒய்வென்று அறியாது உழைத்த உரம் சான்ற பேராசிரியர்.

மாணிக்கனார் கண்ட இலக்கியத் தளங்களும் சிந்தனைக் களங்களும், காப்பியக் களங்களும் பல. தொல்காப்பியமும் சங்க இலக்கியமும் திருக்குறளும் ஆகிய முப்பெரும் நிலத்தில், இவர் கண்ட விளைச்சல்கள் பல.

பழம்போலும் சங்கப் பனுவலைக் கற்றால்
கிழம்போகும் கீழ்மையும் போம்

*– மாணிக்கக் குறள் 461*

சங்க இலக்கியத்தில் மாளாத காதல் கொண்ட இவர்கள் இயற்றிய அரியபெரிய ஆராய்ச்சிநூல் தமிழ்க்காதல். ஆய்வு வன்மைக்குத் 'தமிழ்க்காதல்', சிந்தனைத் தெளிவிற்கு 'வள்ளுவம்', புலமை நலத்திற்குக் 'கம்பர்' ஆகிய நூல்களை அறிஞர்கள் இனங்காட்டி மகிழ்வர்.

20ஆம் நூற்றாண்டு உரைநடை வரலாற்றில் இவருக்கொரு சிறப்பிடமுண்டு. இவருடைய மூன்றுவரிகளே இவரை அடையாளம் காட்டிவிடும். தூய செந்தமிழ் நடை, செறிவான நடை, கற்கத்தக்க பெருமிதநடை, பீடுநடை, பேராசிரியர்நடை, சொல்லாக்கம் இவருக்குக் கைவந்த கலை. இந்தத் தலைமுறையில் இவரைப் போல் சொல்லாக்கம் செய்தவர் இலர்.

தமிழின் தனித்தூய்மை அறியவும், வளர்க்கவும் சான்றோராகவும் தொல்காப்பிய அறிவு வேண்டுமென்பது இவர்கள் கருத்து.

வளர்ந்து வரும் தமிழ் ஆய்வில் மாணிக்கனார் பதித்த சுவடுகள் பல. புதிய கருத்துச் சூறாவளிகள் அழிக்க முடியாதவை. அவை ஆழமாகப் பதிந்தவை.

'இலக்கியச் சாறு' என்னும் நூலில் புதிய புதிய தலைப்புகளில் பாடுவோர் பாட்டாண்மை, திருக்கோவைப் புரட்சி, தேவர்கள் படும்பாடு, தற்சிறுமை, இலக்கிய முத்திறன், இலக்கிய வெள்ளம் என்னும் தலைப்புகளில் தமிழ் இலக்கிய வெள்ளத்தினைத் தம் கூர்த்த மதியால் அளந்து காட்டி உள்ளார். தமிழ் இலக்கியக் கனிகளில் சாறு வடித்த நூல் இலக்கியச்சாறு.

புதுவைப் பல்கலைக்கழகத்தில் மெய்யப்பன் – மாணிக்கனார் அறக்கட்டளையில் மாணிக்கனார் பற்றி அரிய சொற்பொழிவை தமிழண்ணல் ஆற்றினார்கள். மாணிக்கனாரின் பழுத்த புலமையையும் விரிந்த கல்விப்பரப்பையும் நுண்மாண் நுழைபுலத்தையும் அந்தப் பொழிவு அறிவுலகிற்கு அடையாளம் காட்டிற்று. பொருள் பொதிந்த பொழிவென அறிஞர்கள் போற்றினர். மாணிக்கனார் நூல்கள் அனைத்தையும் ஆராய்ந்து பெருநூல் ஒன்று தருதல் வேண்டுமென கூடியிருந்தோர் அனைவரும் வேண்டுகோள் விடுத்தனர். அதன் விளைவே இந்நூல்.

தமிழண்ணல் புகழ்மிக்க காமராசர் பல்கலைக்கழகத்தில் பெருமை மிகு தமிழ்த்துறையில் பணியாற்றிய புகழ்ச் செல்வர். நல்லாசிரியர் விருதுபெற்ற பேராசிரியர். அரசின் திரு.வி.க. விருதும் இவரைத் தேடி வந்தது. என்றும் வாடி வதங்காதவை இவர் உருவாக்கிய மலர்கள். தமிழ் நலமே தன்னலமாகக் கொண்டு தன்னை முன்னிருத்தாமல் தமிழை முன்நிறுத்தும் தமிழ்ப் பேராசிரியர் வரிசையில் முதல் வரிசையர்.

மாணிக்கனார் கொள்கைகளை உணர்ந்தவர். அவர்தம் வாழ்வியல் அறங்களை நாற்பதாண்டுகள் நேரே கண்டுணர்ந்தவர் தமிழண்ணல். நூல் ஆராய்ச்சியில் வல்ல இந்நூலாசிரியர் மாணிக்கனார் நூல்கள் அனைத்தையும்

தெளிவுறக் கற்று, தெளிவுற அறிந்து, பன்முக நலன்களைத் தெளிவுற மொழிந்துள்ள திறம் இந்நூலுக்கு நிலைபேறு அளிக்கிறது.

மூதறிஞர் நூல் முழுவதையும் கற்று, மூல இழைகளைக் கண்டு மாணிக்கத் தமிழாக நெய்துள்ள பேராசிரியருக்குத் தமிழ் கூறு நல்லுலகம் என்றும் கடமைப்பட்டுள்ளது. மூதறிஞர் அனைத்து நூல்களின் செவ்வியையும் ஒரு குடத்துள் நிறைத்துப் படைத்த அருங்கலச் செப்பாக இந்நூல் அமைந்துள்ளது.

மாணிக்கனார் நூல்களை மணிவாசகர் பதிப்பகம் வெளியிடத் தொடங்கியது முதல் அதன் வேர்கள் ஆழங் கண்டன; அதன் விழுதுகள் புதிய வலிமை பெற்றன. பதிப்பகத்தின் புகழ் பன்மடங்கு பெருகிற்று. நூலாசிரியருக்கும் பதிப்பாசிரியருக்கும் உள்ள உறவு தாய் தந்தையர் உறவு. மாணிக்கனார் கொள்கைகளைப் பரப்புவதைப் பதிப்பாசிரியர் தம் வாழ்வுக் கடமையாகக் கொண்டுள்ளார். அவ்வகையில் இந்நூற் பணி அவரின் பதிப்புக் கடமையாகும்.

மூதறிஞர் மாணிக்கனார் வாய்மையில் வழுவாது வாழ்ந்தவர். வாய்மை அறத்தைத் தாய்மை அறமாகக் கொண்டு ஒழுகியவர். அவர்தம் வாழ்வியல் கோட்பாடுகள், அவர் தலைமை ஏற்ற அமைப்புகள், நிறுவனங்கள் சீர்மையும் செழுமையும் கொண்டன. அவர்தம் தமிழாக்க நெறிகள், அவர் பெற்ற தமிழியக்க வெற்றிகள், அவர்தம் கல்விப் பணிகள், பண்புகள், திட்டங்கள், அவர் மேற்கொண்ட செவ்வறங்கள் முதலியவற்றை என் பேராசிரியர் இரா. சாரங்கபாணி அவர்கள் மாணிக்கச் செம்மல் என்னும் நூலில் பல சொல்லோவியங்களைக் கொண்டு அழகு மிளிரும் உயிரோவியமாக்கி உள்ளார். அந்நூல் கற்கத்தகுந்த நூல்.

காந்தி அண்ணல் தோன்றிய அக்டோபர்த் திங்களில் மாணிக்கனார் பற்றிய வாழ்க்கை வரலாறு, அவர் நூல்கள் பற்றிய திறனாய்வு ஆகிய இரு நூல்களையும் ஒரு சேர ஒரே நேரத்தில் வெளியிடுவதைப் பெரும் பேறாகக் கருதி பெருமிதம் அடைகிறேன்.

மாணிக்கக் குறள்
மாணிக்க உரை
மாணிக்கத் தமிழ்

என மாணிக்கனார் தமிழாற்றல் சங்கத்தமிழ் போல பன்முக நலன்களைக் கொண்டது.

மணிவாசகர் பதிப்பகம் பற்றி மாணிக்கனார் பகர்வன:

'என் நாற்பதாண்டுக் கால எழுத்துத்தொகுதிகளை மறித்து நோக்கி, ஒரினப்பதிப்புக்களாகக் கொண்டு வரும் வாய்ப்பினை மணிவாசகர் பதிப்பகம் எனக்கு வழங்கியுள்ளது. எந்தப் பதிப்பகத்தாரிடமிருந்தும் யாருக்கும் கிட்டாத இனிய வாய்ப்பினை நான் பெறுகின்றேன். இஃது அறிவறிந்த பேறன்றோ!'

– மூதறிஞர் வ.சுப. மாணிக்கனார்

'தொல்காப்பியக்கடல்' நூலில் இருந்து – சூன் 1987.

# நூன் முகம்

**மாணிக்கத் தமிழ்** என நூலொன்று எழுதுமாறு பதிப்புச் செம்மல் ச. மெய்யப்பனாரும், வ.சுப.மா. தம்பி வ.சுப. சொக்க லிங்கம் அவர்களும் கூறினர். ஒவ்வோராண்டும் செம்மல் மாணிக்கனாரின் நினைவு நாளில் எழுதி முடித்துக் கொண்டு வந்துவிடலாமென நானும் எண்ணுவதுண்டு.

ஒய்வு பெற்ற பிற்பாடு எனக்கு ஓய்வில்லை. ஏதாவது வேலை குறுக்கிடும். வெளிநாட்டுப் பயணம் வாய்க்கும். ஒரு நூல் படிப்பது; ஒரு கட்டுரை முடிப்பது; பிறகு இடையீடு எனக் கழிந்தது. வ.சுப. சொக்கலிங்கம் அவர்கள் யான் அயர்ந்தாலும் தாம் அயர்வதில்லை. என் மனைவியிடம் 'நீங்கள் தூண்டினால் நடக்குமோ?' என்றும் கூறிவிட்டார்கள். அவ்வளவுதான்! வீட்டுத் தூண்டுதல் வேறு. பதிப்புச் செம்மல், 'மாணிக்கத் தமிழ்' வருகிற தென்று, விலைப்பட்டியல் முதல் விளம்பரப்படுத்தி விட்டார்!

இப்பெருமக்கள் இருவருக்கும் நான் மிகவும் கடமைப்பட்டுள்ளேன். எதற்கு? மூதறிஞர் வ.சுப. மாணிக்கனாரின் பனிரண்டு நூல்களை யான் மீண்டும் கற்றேன்; பயின்றேன் என்றுதான் கூற வேண்டும். என் எண்ணம் இது. இந்நூல் மாணிக்கனார் தம் நூல்களைப் பிறரும் பயில, ஓர் அறிமுக நூலாதல் வேண்டும்; ஒரு சிலரேனும் என்போல, மாணிக்கத் தமிழ் நூல்களைப் பயிலுமாறு, ஆர்வத்தூண்டலாய், வழிகாட்டியாய் ஆதல் வேண்டும்.

தமிழ்க் கல்விக்கு மாணிக்கத்தமிழ் வளம் சேர்க்கும். 'மாணிக்கத் தமிழ்' என்ற தலைப்பிற்கேற்ப, மூதறிஞர் வ.சுப. மாணிக்கம் அவர்களின் தனித்தன்மைகளையும் அவரிடமிருந்த எழுத்துத்துறை சார்ந்த சிறப்புக் கூறுகளையும் எவற்றைச் சொன்னால் அவரை இனங்காட்டலாமோ அவற்றை மட்டும் எடுத்து, இந்நூலாக வடித்துள்ளேன். அவற்றையும் முழுமையாகத் தராமல், கோடிகாட்டிப் படிப்பவர்க்கு மேலும் தேடும் அவாவை விளைவிக்க முயன்றுள்ளேன்.

எதிர்காலத் தமிழ்க் கல்வி சிறக்கப் பலவழிகள் உள. எத்தனையோ சான்றோர்தம் நூல்கள் உள. என் நெஞ்சில் நிறைந்திருக்கும் பேரறிஞர் மு. வரதராசனார்; என் பேராசான்மார், முனைவர் பட்ட வழிகாட்டிகள் சி. இலக்குவனார், அ. சிதம்பரநாதனார் எனப் பலரை அடுக்கிக் கூறமுடியும். சங்க இலக்கியம் தொல்காப்பியம் திருக்குறள் ஆகிய மூன்றின் கல்விக்கும் ஆய்வுக்கும் பரப்புதலுக்கும் ஒரு 'கலங்கரை விளக்கம்' இம் மாணிக்கத் தமிழ் என்பதைப் பொறுப்புணர்ச்சியோடு கூற விழைகின்றேன். பிறவற்றை யெல்லாம் கற்பவர்கள், இம் மாணிக்கத் தமிழ் நூல்களைத் தவறவிடுவரேல், பழந்தமிழ்க் கடலில் கரையேறுதல் கடினப்படும். இடைக்கால நிகழ்வுகளால் 'தமிழ்மை' எனத்தகும் தமிழ் மொழி இலக்கியப் பண்பாடுகள் குழம்பிக் கிடக்கின்றன. அதனால் தமிழ் கற்பார் திசைமாறிப் போகக்கூடாது என்பதற்காகவே இதனை வற்புறுத்தவும் விழைகின்றேன். ஏனெனில், சரியான திசைகாட்டும் மாலுமியாக அதற்காகவே பிறப்பெடுத்தவர் செம்மல் மாணிக்கனார் என்று எனக்குத் தோற்றுகிறது.

என் தாய் வழிப் பாட்டனார் மேலைச்சிவபுரி மு.கும. குமரப்ப ஐயாவும் பாட்டி உண்ணாமலை ஆயாளும் அம்மான் மு.கும. நடராசரும் யான் தமிழ் படிக்கத் தூண்டுகோலாகவும் துணையாகவும் இருந்தனர்.

குழந்தைப் பருவத்திலேயே பெற்றோரை இழந்து, தாய்வழிப் பாட்டனார் இல்லத்தில் வளர்ந்து ஆளான மூதறிஞருக்கும் எனக்கும் இதில் ஓர் ஒற்றுமை கண்டேன். தன் கண்ணுள்ளிருக்கும் கருமணியாய் எண்ணி எனை வளர்த்த கலியாணித்தாயின் பெற்றோருக்கு இந்நூலை அன்புரிமையாக்கி நினைவு கூர்வதில் என் நெஞ்சம் நெகிழ்கிறது!

தமிழண்ணல்

'கல்யாணி'
நெற்குப்பை
சிவகங்கை மாவட்டம் 630 205

# உள்ளுறை



## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

வள்ளுவம் (வ), தமிழ்க்காதல் (த.கா), தொல்காப்பியக் கடல் (தொ), சங்கநெறி (ச), திருக்குறட் சுடர் (தி), காப்பியப் பார்வை (கா), இலக்கியச்சாறு (இ), தொல்காப்பிய எழுத்ததிகாரம் - நூன்மரபும், மொழிமரபும் - மாணிக்கவுரை (மா.உரை), கம்பர் (க), தலைவர்களுக்கு (த), மாமலர்கள், கொடை விளக்கு.

## பாயிரம்

தாயை மறந்த
　　தமிழர் தமைப் பிடித்த
பேயை விரட்டும்
　　பெருந்திறல்காண் - மாயையினால்
கோணிக் கிடப்பாரின்
　　கூன்நிமிர்த்த வந்த தமிழ்
மாணிக்கச் செம்மலவன்
　　மாண்பு

ஆணிப்பொன் போல
　　அருமைமிகு செந்தமிழைப்
பேணிப் புரந்த
　　பெருமகனார் - மாணிக்கம்
சொல்நடை பாஉவமை
　　நுண்புலத்தால் தந்ததமிழ்
நல்வழியைக் காண்பீர்
　　நயந்து

பண்பார்ந்த செம்மல்
　　பதிப்பாளர் மெய்யப்பர்
நண்பு மிகப் பெருக்கும்
　　வ.சுப. சொக்கலிங்கர்
அன்புமொழி தூண்ட
　　அருமை மிகு மாணிக்கப்
பொன்தமிழைத் தந்தேன்
　　பொலிந்து!

# 1

# கொள்கை தவறாக் குறிக்கோள் நெஞ்சினர்

மூதறிஞர் வ.சுப. மாணிக்கம் ஒரு கொள்கைச் செம்மல். குறிக்கோள் நெஞ்சமொன்று இயல்பாக வாய்க்கப் பெற்றவர். அதனால் தம்மை இனங்காட்டும் தனியியல்பு கள் பல உடையவராயினார்.

அவரது வாழ்க்கையின் முதலிலிருந்து முடிவு வரை படைத்த முதல் நூலிலிருந்து இறுதி மாணிக்கவுரை வரை, என் அதிராத் துணிபு என அவர் அடிக்கடி தம் ஆய்வுரை களில் சுட்டுவதுபோல, அசையாத் திண்ணிய எண்ணம் உடையவராய் விளங்கினார். ஒரே சீரான பார்வை, திறமை, முதிர்ச்சி, செம்மை, செறிவு. அவரது வாழ்விலும் பணியிலும் எழுத்திலும் இவற்றைக் கண்டு தெளியலாம்.

'அதூஉம் சாலும் நற்றமிழ் முழுதறிதல்' என்றனர் சங்ககால மோசிகீரனார். இவரும் அந்நெறி கடைப் பிடித்தனர். தொல்காப்பியரை இப்பெருமகனார் 'தமிழ் அளந்த பெருமாள்' எனச் சிறப்பிப்பர். இவரும் 'தமிழ்மை'யை - தமிழ்ப்பண்பை - 'தமிழ் தழீஇய சாயலை' முழுவதும் அறிந்த, அளந்த, வெளிப்படுத்திய பெருமகன் ஆவார்.

ஒருவரை அறிமுகப்படுத்த அவரது வாழ்க்கை வரலாற்றை, பழகும் பண்பு நலன்களை, விட்டுச் சென்ற எழுத்தைச் சான்றாகக் கொள்ளலாம். இவற்றுள் முன்னைய

இரண்டும் கடந்த காலத்தவை. 'என்றுமுள தென்தமிழ்' என்பது போல, 'எழுத்து' என்றுமிருக்கும். எனவே, மாணிக்கனாரை எதிர்காலத் தமிழ் உலகிற்கு அறிமுகப் படுத்தி, அவரது தமிழ் மாளிகைக்கு ஓர் எளிய நுழைவு வாயில் அமைக்க அவரது எழுத்தே துணையாகக் கொள்ளப் பெறுகிறது. இவ் வகையில் 'மாணிக்கத் தமிழின்' வீறுமிக்க சிறப்புக்களை, தனித்தன்மைகளை, பெருமிதப் பண்புகளை மட்டும் இங்கு நினைவுபடுத்துதல் தகும். இதனால் பிற்காலத்தார் அம்மாணிக்க மாளிகையினுட் புகுந்து தமிழின்பம் துய்ப்பர்; மாணிக்கச் சுரங்கத்தில் இறங்கி நன்மணிகளைக் கண்டு எடுத்து அணிந்து மகிழ்வர்; மாணிக்கக் கடலில் நீந்தித் தமிழ்க்கரை ஏறுவர்.

செந்தமிழ், நற்றமிழ், ஒண்தீந்தமிழ் என்பனபோல, 'மாணிக்கத் தமிழ்' என்பது பொதுப்பட வந்த அடைமொழி அன்று. ஒரு பெருமகனாரது தனியியல்புகளெல்லாம் படிந்த 'தமிழ்மை' பற்றிய குறியீடு அது.

'மாணிக்கத் தமிழ்' என்று கேட்டதும் இச் செம்மலைத் தமிழ்ப் ட்ற்றாளர், தமிழ் ஆர்வலர், தமிழ்த் தொண்டர் என்றெல்லாம் பலபடப் புகழ்ந்தெழுதும் நினைவு வரும். இன்றையச் சூழல் அது.

தமிழர்களாகிய நாம் ஒருவரைச் சுட்டிக்காட்டி 'இவர் தமிழ்ப் பற்றுடையவர்', 'இவர் தமிழ் ஆர்வலர்', 'இவர் தமிழ்த் தொண்டர்' என்றெல்லாம் கூறுவன நகைப்புக் குரியன. ஆங்கிலத்தைக் கண்ணிமையிலும் கருத்தாக வளர்க்கும் ஆங்கிலேயரிடம் இப்பழக்கத்தைக் காண முடியாது. பற்று, ஆர்வமெல்லாம் இயல்பாக இருக்க வேண்டியவை. அவ்வாறு விதந்து சொல்லும்போது, தமிழ ராகிய நாம் அனைவரும் இப் பற்று, பாசத்தை இழந்துள்ளோம் என்ற உண்மையே வெளிப்படுகிறது.

மேலும் 'வெற்றுப் புகழோசைகள்' எழுப்புவது வளர்ச்சித் தடையாகிறது. 'உடல் பொருள் ஆவி'யைத் தமிழுக்குத் தரப் போவதாக மார் தட்டுவதும் தமிழை

வானளாவப் பாராட்டிப் பேசுவதும் தேவையற்ற, கேலிக் கூச்சல்களாகிவிட்டன. 'தமிழ் வாழ்க' என்பதே, ஒருவித மயக்கம் தந்துவிட்டது; தமிழ் அழிவதைக் கண்டும் தெளியாதிருக்கும் மந்த நிலையைத் தோற்றுவித்து விட்டது. 'தாயே உயிரே தமிழே என் செல்வமே' என்றெல்லாம் மேடை ஏறி ஒருவன் வெறுமனே பாராட்டினால், அவனுக்கு ஆறு மாதமும் அந்த உணர்ச்சி பொங்கும் பேச்சைக் கேட்டுக் கைதட்டினால் அங்ஙனம் தட்டிய வனுக்கு ஓராண்டும் சிறைத்தண்டனை விதிக்கவேண்டும். இதனால் தமிழ் வளரப் போவதில்லை. இவர்கள் அனைவரும் மேடையில் மட்டுமே தமிழை வளர்க்கும் வித்தை காட்டிகள் ஆகிவிட்டனர்.

'மாணிக்கத் தமிழ்' என்று புகழுரையாக அடைமொழி புணர்க்கவில்லை. பிறிதொன்றற் கில்லாத வீறு - தனி இயல்பு - என்பதன் குறியீடாகவே கொள்கின்றோம்.

**என்னென்று சொல்வேன், என்னென்று சொல்வேன்**
**தமிழால் பாரதி தகுதி பெற்றதும்**
**தமிழ் பாரதியால் தகுதி பெற்றதும்**
**எவ்வாறென்பதை எடுத்துரைக் கின்றேன்**

என்பது பாவேந்தன் பாரதிதாசனின் பாரதி பற்றிய திருவாய்மொழி. 'பாரதி' என்ற சொல்லுக்குப் பதிலாக, 'மாணிக்கம்' என்ற சொல்லைப் பெய்தால், இந்த நான்கு அடிகளும் இந்நூலுக்கு இசைந்த பாயிரம் ஆகும். மாணிக்கம் தாம் ஆழப் பதியக் கற்ற தமிழ்க் கல்வியால் முழுமை பெற்ற தமிழராயினார்; அவரால் தமிழைப் பற்றிய ஒரு முழுமையான பார்வை உலகிற்குக் கிடைத்துளது. அதனைத்தான் நாம் இவண் கண்டு கொள்ள வேண்டும். இடருற்று நின்ற காலை அவர் தமிழ்க்கல்வியாலேதான் உய்தி கண்டார். பின்னரும் தமிழால்தான் வாழ்ந்தார்; வளர்ந்தார்; உயர்ந்தார். இந் நன்றியறிவு மிக்க தமிழ் மகனால், நம் தமிழ்த்தாயும் இடர்களின் நீங்கி ஏற்றம் பெறுகிறாள்!

நீங்கள் யாரேனும் தமிழ்க் கல்வியில் ஆழங்காற்பட விரும்பினால், மாணிக்கத்தை முழுவதும் கற்கவேண்டும். அது ஒரு நல்ல தொடக்கமாக அமைந்து உங்களுக்கு வெற்றி தரும்.

மனிதர்கள் எல்லோரும் மனிதர்கள்தானா? முழுமை பெற மனிதர் எனச் சுட்டத் தக்கவர் மிகச் சிலரே. அரைகுறை மனிதர்களே பலராவர். அறுபது எழுபது எண்பது விழுக்காட்டளவு மனிதர்களை விரல் விட்டு எண்ணிவிடலாம். 'மக்களே போல்வர் கயவர்', 'விலங்கொடு மக்கள் அனையர்', 'உறுப்பொத்தல் மக்கள் ஒப்பு அன்றால்' என வரும் குறள்களை எண்ணிப் பாருங்கள்!

தமிழர்கள் எல்லோரும் தமிழர்கள்தானா? முழுமை பெறத் 'தமிழர்' எனச் சுட்டிக்காட்டத் தக்கவர் மிகச் சிலரே. பெரும்பான்மையினர் அரைகுறைத் தமிழர்களாகவே உள்ளனர். 'புதரில் மறைந்து வேட்டுவன் புள் சிமிழ்த்தலைப் போல'த் 'தமிழர்' என்ற போர்வையில் — தமிழ்ப் பற்றுப் போல் பேசிக்கொண்டு - தம்மையே முன்னிலைப்படுத்தி வெளிப்படுத்திக்கொண்டு — தமிழை வளரவிடாமல் அடிக்கின்றவர்களே இங்கு பலராவர். 'தமிழ் தமிழ்' எனக் கூவிக்கொண்டு, தன்னல வேட்டையாடும் இவர்கள் தமிழின் உட்பகைவர்களாவர். இச் சூழலில்

**மக்களே போல்வர் கயவர் அவரன்ன**
**ஒப்பாரி யாம்கண்டது இல் (1071)**

என்று மக்களையும், கயவரையும் பிரித்தறிய இயலாமையை எண்ணிப் பார்த்த திருவள்ளுவர் நிலைதான் நம்மிடையே யும் உளது. இங்கு தமிழராய்ப் பிறந்ததாலேயே அனைவரும் தமிழராகிவிடார். மனிதர்களிலே நாயும் நரியும், புலியும் சிங்கமும், குள்ளநரியும் காட்டு விலங்கும் காணப்படுதல் போலத் தமிழர்களிலும் தமிழுக்கே குழி பறிக்கும் விலங்கினத்தின் தொகை கூடிவிட்டது. இனம் பிரித்தறிய வழியில்லை. 'மக்களே போல்வர் கயவர்' என்ற தேற்றேகார

நிலைதான்! இத்தகைய கால கட்டத்தில், ஒருவர் முழுமைத் தமிழராக மலரவேண்டுமேல், மாணிக்கத்தைக் கற்றாக வேண்டும்! மாணிக்க நூல்கள் ஒருவரை முழுமையான தமிழராக ஆக்கும் வலிமை சான்றன! அவர்தம் எழுத்தில் ஒவ்வொரு சொல்லும் தொடரும் உங்களைத் 'தமிழ்மை'யை நோக்கிக் கொண்டு செலுத்தும் பேராற்றலுடையன. உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை!

### தடை கடந்த தமிழ்க்கல்வி

இன்று தமிழைக் கற்க வருவார் பலர் நுனிப்புல் மேய்வதோடு நின்றுவிடுகின்றனர். வேலை வாய்ப்பில்லை; வாழ்க்கைக்கு வழி வகுக்கவில்லை என எண்ணுகின்றனர். 'பற்றுக்கோடாகுமெனப் பற்றி நின்று' ஆழப் பயிலாமல் பற்றின்றியே படித்துப் பாழாகின்றனர்; தமிழையும் பாழாக்குகின்றனர்.

மாணிக்கம் இளம் வயதில் பெற்றோரை இழந்து, தாய் வழிப் பாட்டனார் வீட்டில் வளர்ந்து, திண்ணைப் பள்ளிப் படிப்புடன் நின்று பருமாவிற்குப் பெட்டியடிப் பையனாய்க் கைபழகச் சென்றவர். அங்கு ஒரு குறிப்பிட்ட சூழலில், மேலாளர் சொல்லியபடி பொய் சொல்ல மறுத்ததால், வேலையை விட்டு விலகித் தமிழகம் திரும்பியவர். இவர் பிறந்தவூர் 'சைவமும் தமிழும் தழைத்திடத்' தோன்றிய சன்மார்க்க சபை விளங்கும் மேலைச் சிவபுரியாதலின் தமிழ் படிக்கும் ஆர்வம் தோன்றி, அண்ணாமலை நகர் சென்று, பண்டிதமணி முதலாய சான்றோர் வழிகாட்ட, அவர்தம் உதவியுடன் அங்கு தமிழ் பயிலத் தொடங்கியுள்ளார்.

> சிலம்பு முதலாகச் சென்ற கலனோடு
> உலந்த பொருள் ஈட்டுதலுற்றேன் **(9 : 74–75)**

எனக் கண்ணகியுடன் புறப்பட்ட கோவலன், கடமை மறந்ததால் கொண்ட கருத்தில் வெற்றி பெற்றானில்லை.

இவரோ வெளிநாட்டிலிருந்து வந்தபின், தம் கைவசம் இருந்த ஒரே ஒரு கைப்பொற் சங்கிலியை விற்று, அண்ணாமலை நகர் சென்றார் என்று கூறுவர். அங்கு 'இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க' என்பது போல, ஐந்தாண்டுகளும் இமைப்பொழுதும் சோராது கற்று, தமிழ்ப்படிப்பில் முழுமை பெறத் தேறினார். ஒவ்வொரு தேர்விலும் முதல் மாணவராகவே தலை நின்றார்.

வெளிநாட்டில் பார்த்த வேலையை விட்டு வந்த, மானவுணர்வு மிக்க இப் பெருந்தகைக்கு அவ்விளம் அகவையில் ஏதோ நங்கூரம் அறுந்த படகு புயலில் தத்தளிப்பது போன்ற ஏக்கம் நிறைந்த மனநிலை இருந்துளது. அச்சமயத்தில் வாய்த்த 'தமிழ்க் கல்வி' அலைந்தாடும் கொடிக்குக் கொழுகொம்பு போலவும் கடலில் தத்தளிப்பவனுக்குக் கிடைத்த தெப்பம் போலவும் 'பசித்த மகன் தேடுங்கால், பானையாரக் கனத்திருந்த வெண்சோறு காண்பது' போலவும் கைகொடுத்துதவியுளது. அதனால் அதனைப் 'பருகுவன் அன்ன ஆர்வத்தனாய்ப்' பழுதறக் கற்றுள்ளார். வாழ்வில் ஒரு தடை ஏற்பட்டு, அத்தடையை உடைத்து எழுந்ததால், இவர் தமிழ்க் கல்வி பலமடங்கு எழுச்சி பெற்றுள்ளது.

இவர் படிக்கும்போது முழுவதும் நிறைவுறக் கற்றார்; நூற்றுக்கு நூறு மதிப்பெண் பெறுமாறு கற்றார்; மதிப்பெண் வழங்குங்கால் கையைச் சுருக்கிக்கொள்ளும் சிக்கனச் செல்வர்களிடமும் நிறை மதிப்பெண் பெற்றுக் குறைவறக் கற்றார். இவர்தம் எழுத்திற்காணும் ஆழம் இவரது புலமையின் ஆழம். அப்புலமையின் ஆழமோ இவர் கற்ற கல்வியின் ஆழம் ஆகும்.

இற்றை நம் மாணவர்கள் இதனைத் தம் வழிகாட்டி யாகக் கோடல் தகும். குறைவறக் கற்றவரே நிறைவுறச் சிறக்க முடியுமென்பது மாணிக்கப் பாடம்.

ஒருவர் இளமையில் சேர்த்த செல்வம் பிற்காலமனைத்துக்கும் பயன்படுகிறது. வாணிகத்தில், கடன் வாங்காமல் தானே போட்ட முதல், பிறகு இரட்டிப்பு இலாபம் தருகிறது. முயன்று கட்டிய வளமனை, நெடுங்காலம் வசதியாய் வாழப் பயன்படுகிறது.

மாணிக்கம் முன்னதாக அண்ணாமலை நகரில் கணக்கற்ற தமிழ்ச் செல்வத்தை, பெரும் பேராசிரியர்களின் துணையோடு தேடிக்கொண்டார். தாமே முயன்று கற்ற மனத்துக்கு வரப் பண்ணிய பாடம் அனைத்தையும் பயின்ற காரணங்களால், அவை அவர் தாமே முயன்று போட்ட மூலதனமாய் நின்று, பின்பு பலமடங்கு ஊதியம் தந்தன.

தாமே கட்டிய ஐந்தடுக்கு வளமனையில் வாழ்வது போன்ற பெருமிதத்தை அவர் கற்ற கல்வியே நல்கியது.

## மொழி ஒழுக்கம்

தமிழர்கள் மொழி ஒழுக்கம் உடையவர்களாக வாழ வேண்டும் என்பது மாணிக்கக் கருத்து. தாய் மொழியின் இயல்பறிந்து பயன்படுத்தி, அதைச் சிதையாது போற்றுதலையே அவர் **'மொழி ஒழுக்கம்'** எனக் கருதினார். ஆங்கிலேயர்களிடம் மரபு மாறாது பேணும் மொழி ஒழுக்கம் இயல்பாக அமைந்ததால் பதினேழாம் நூற்றாண்டு முடிய இலத்தீன், பிரஞ்சு மொழிகளால் தனது நாட்டிலேயே அழுத்தப்பட்டுக் கிடந்த ஆங்கிலம் இன்று உலகை ஆள்கிறது.

ஆங்கிலர் தமது 26 எழுத்துக்களை வைத்துக் கொண்டே உலகை ஆளும் தகுதியை, அம் மொழிக்குத் தந்துள்ளனர். ழ,ள,ற எழுத்து இல்லையே? க்ஷ,ஷ இல்லையே? தமிழை, Tamil - (டமில்) எனலாமா? எதற்கும் கவலைப்படாமல் அவர்கள் தம் ஒலி வரம்பையே பேணினர். இத்தகைய ஒலி வரம்பு கடவா **'மொழிக் கற்பு'** தமிழர்களுக்கு வேண்டும். தமிழர்கள் மொழிக் கற்பை இழந்து, கண்ட கண்ட ஒலிகளையெல்லாம் தமிழிற் கலந்து

கெடுப்பது தவறு, தொல்காப்பியம், வள்ளுவம், பேராசிரியம், நச்சினார்க்கினியம், சேனாவரையம் வழி வந்த 'மாணிக்கத்'திற்கு அவ் வழிவழி வந்த மொழிப் பண்பாட்டைப் போற்றிக் காப்பதே கடனாகிறது.

மாணிக்கத்தைக் கற்பார் இம்மொழி ஒழுக்கமும் மொழிக் கற்பும் மொழிப் பண்பாடும் பெறுவர்.

தொன்மை மிக்கதாய தமிழ்மொழியில் இயற்கையான பல பண்புகள் ஒட்டிக் கிடக்கின்றன. அதனால்தான் கடந்த இருபது நூற்றாண்டுகளில், அயன்மொழியாளர்களால் ஆளப்பட்டும் அயன் மொழிகட்குக் கீழ்ப்பட்டும் அயற் சமயப் படையெடுப்புகட்கு அடிப்பட்டும் நாட்டுப் பரப்பையும் மக்கள் தொகையையும் மிகச் சிறந்த நூல் தொகுதிகளையும் இழந்தும் வேண்டுமென்றும் அறியாமை யாலும் தீங்கு செய்வார் தொகை பெருகிக் காணப்பட்டும் தமிழ் நிலைத்து வாழ்கிறது.

தமிழில் இயல்பான உயிராற்றல் ஏதோ இருக்கிறது. ஆயினும் இருபத்தொன்றாம் நூற்றாண்டில் தமிழ் அழிந்துவிடும் என்று பலர் உள்ளூற எதிர்பார்த்திருக்கின் றனர். 'மெல்லத் தமிழினிச் சாகும்' என்று, பேதை ஒருவன் கூறியதாகத்தான் பாரதி பாடினான். இன்றோ அப் பேதையர்கள் தொகையே மிகுந்துவரக் காண்கின்றோம்.

இருவழக்கு மொழியாகிய தமிழை, வெறும் பேச்சு வழக்கு மொழியாகவே எழுதி, கொச்சைப்படுத்தி, ஒலித் திரிபையும் சொல்திரிபையும் நிலைபெறுத்தித் தமிழைச் சிதைத்துவிட எழுத்தாளர் பலரும் ஒரு சிறு கூட்டத்தை உருவாக்கி வருகின்றனர். "நான் எழுதுவது தமிழா, மலையாளமா, ஆங்கிலமா எல்லாம் கலந்ததா, வேறா எதுவென்று தெரியாது. அதுதான் என்னுடைய மொழி; அதில்தான் நான் எழுதுவேன்" என்று இவர்களில் ஒருவர் பேசுகிறார். மனித நேயம் பதிந்திருக்கவேண்டிய படைப்பாளி ஒருவரிடமிருந்து இத்தகைய ஆணவக் குரலொன்று எதிரொலிக்கின்றது. இத் 'தமிழ்க்

கொலைக்குத்' தமிழ் வார, மாத இதழ்கள் சிலவும் சில நாளேடுகளும் பரிசு கொடுத்தும் பெருமளவு இடங் கொடுத்தும் வளர்த்து வருகின்றன. தமிழ்த் திரைப்படம், தொலைக்காட்சி, வானொலி அனைய மக்கள் தொடர்புக் கருவிகள் அனைத்தும் 'மக்கள் தமிழ்' என்று கூறி, கொச்சைத் தமிழையே மக்கள் தமிழ் எனவும் கலப்புத் தமிழையே 'வெகுசனமொழி' எனவும் நம்பி, 'என்றுமுள தென்தமிழாய்' இருந்து வந்ததை இன்றுடன் ஒழிக்க முற்பட்டு விட்டனர்.

அறிவியலை வென்று அதற்கும் ஈடுகொடுக்கத் தமிழ் போராடி வரும் இன்று, அதற்குக் கைகொடுத்து உதவாமல், உட்பகையாய் - உடனிருந்தே கொல்லும் நோயாய் இவர்கள் உள்ளனர்; உடம்பில் பரவும் ஒருவிதச் சொறி நோய்போல், மேகப் படையாய்ப் பரவி வருகின்றனர். தமிழைக் கொச்சைப்படுத்துகின்றனர்.

ஆட்கொல்லி நோய்போல் மொழிக்கொல்லிகள் தொகை பெருகிவருவது உண்மையில் அச்சத்தைத் தருகிறது.

இச் சூழலில் மாணிக்க மருந்து மிகவும் பயன்படும்.

மக்கள் மொழி வட்டார வழக்கு; கலைஞர்கள், தொழிலாளர்கள், கைவினைஞர்கள், கட்டிடத் தச்சர்கள் எனப் பலரும் பயன்படுத்தும் மொழி அது. அவர்களுடைய வழக்கில் காணப்படும் முழுமையான, நல்ல, பயனுள்ள சொற்கள் — ஏட்டிலேறாதவை பல நூறாயிரம் உள.

'வளர்த்த ஓவியம்' என்பார் மூதறிஞர். 'ஓவியம்' — புதியதொரு பொருளில் பேச்சில் - வட்டார வழக்கில் உலவுகிறது. வாய்ப்பட்டி, குளிர்ப்பாட்டல், எட்டாக்கை (தூரம்), இறவாரம், கழிசடை, எதிர்குதிராக, வாட்டசாட்ட மாக, கேதம் (இழவு), களவு சாட்டிவிடுதல், அட்டூழியம், அம்மணம், வீறாப்பு, பலிதம் என நூற்றுக்கணக்கான வட்டாரச் சொற்களை மாணிக்கத் தமிழிற் காணலாம்.

கொத்தனார் வாணம் தோண்டி, 'கட்டாயக் கல்' வைத்து, கட்டிடம் எழுப்புகிறார்; மட்டப் பலகை வைத்து மட்டந்தட்டித் தளம் போடுகிறார். மேடு பள்ளம் தெரிந்தால் முனை நீட்டிக் கொண்டிருந்தால் கொத்துக் கரண்டியை வைத்து நன்கு மழுப்பி விடுகிறார். கட்டாயம், மட்டந்தட்டல், மழுப்புதல் அனைய சொற்களை அவரிடமிருந்து பெற்று வழங்குகிறோமே அதுதான் மக்கள் தமிழ் - வட்டார வழக்கு - வெகுசனமொழி.

ஒலித்திரிபுகளும் மொழிச்சிதைவுகளும் கொச்சையும் மக்கள் தமிழ் எனல் பெரும் பிழை. பிழைபட எழுதுவோர்க்கு இது தம் குறை மறைக்கும் திரையாகிறது.

பெருந்தகை மு.வ. எடுத்துக்காட்டுவதுபோல் ஒரே சொல் பல திரிபுகளுடன் நாடு முழுவதும் வழங்கும். சேஞ்சிட்டார், செஞ்சிட்டார், சேஞ்சுப்பிட்டார், செஞ் சூட்டார் என்பன எல்லாம் செய்து விட்டார் என்ற மூலச் சொல் எழுத்துவழக்கில் இருப்பதனாலேதான் விளங்கு கின்றன.

நாம் பேசுவதுபோல் எழுதுவதில்லை; எழுதுவது போல் பேசுவதில்லை. அஃது தமிழின் இயல்பு. தமிழ் இரு வழக்கு மொழி. இரண்டுமே தனித்தனி பேணப்பட வேண்டும். எழுத்து வழக்கே கட்டளை மொழி; பொது மொழி. பேச்சு வழக்கு என்றும் எப்போதும் எழுத்து வழக்கை நோக்கியே அமையவேண்டும். தமிழ் தோன்றிய காலந்தொட்டே, இருவழக்காக வழங்கி வந்திருக்கிறது என்பர் கால்டுவெல். செந்தமிழுக்கும் கொடுந்தமிழுக்கும் தனித்தனி இலக்கணம் எழுதினார், வீரமாமுனிவர். இவ் வேறுபாடு வெளிநாட்டுத் தமிழறிஞர்களுக்கு விளங்கிய அளவுகூட, இங்குள்ள சிலருக்கு விளங்கவில்லை. பேச்சு நடையை எங்கு பயன்படுத்தலாம்; எந்த அளவு பயன் படுத்தலாம்; எவ் வகையில் எழுத்து நடையுடன் கலக்கலாம் என்ற அறிவு நம் காலம் வரை எல்லோர்க்கும் தெரிந்தே இருந்தது. இம் மொழிக் கொல்லிகள்தான் ஓர் ஆசிரியன்

கதையைச் சொல்லத் தொடங்கும்போதே - ஆசிரியர் கூற்றிலேயே பேச்சு நடையைப் புகுத்தலாயினர். உரையாடலில் பேச்சுநடை, வட்டாரத் திரிபுட்பட வந்தே தீரும். அதை விடுத்து இவ் அறிவுவாணர்கள் உரையாடல் பேச்சையும், நாம் செந்தமிழில் எழுதச் சொல்வதாகக் கூறி நம்மைக் கிண்டல் பேசி மகிழ்வர்.

முன்பு வடமொழிச் சொற்களைச் செம்பாகம் கலந்து 'மணிப் பிரவாளம்' எனப் புதுமொழி படைக்க முனைந்தனர்; நூல்கள் எழுதினர்; நாடெங்கும் பரப்ப முயன்றனர். ஆயினும் அவர்களும் அவர்தம் முயற்சிகளும் புதைகுழி புக்கன. இன்று ஆங்கிலச் சொற்களைக் கலக்கப் பார்ப்பாரும், உரோமன் எழுத்துக்களிலேயே அயற்சொல் தொடர்களைக் கலக்கப் பார்ப்பாருமாகத் தமிழைக் கெடுக்கப் பார்ப்பார் தொகை கூடிவருகிறது. இவர்தம் முயற்சிகளையும் புதை குழிக்கனுப்ப வேண்டுமேல், மாணிக்கத் தமிழ் மேலெழவேண்டும்.

> "தமிழ் பகுத்தறிவு மொழி, இயற்கை மொழியாதலின் கால வீழ்ச்சி அதற்கில்லை. அதனாற்றான் 'என்றும் உளதென்தமிழ்' என்று உண்மை காட்டினார் கம்பர்."

என்று மூதறிஞர் மொழிகுவர். (தொ. முன்னுரை) பழந்தமிழ் இன்றும் செம்பாகத்திற்குமேல் விளங்குகிறது. இன்று வந்த மொழிகளில் கூடப் பழையமொழி, புதியது என இரண்டுபடுவதைக் காண்கின்றோம். தமிழ், ஈராயிரம் ஆண்டுகளுக்கு மேலாகியும் அந்த அளவு இரண்டுபட வில்லையே என்ற வருத்தம் பலரை வாட்டுகிறது. சேக்சிபியரைப் படிக்கும் ஆங்கிலேயன் அகரமுதலியைத் துணைக்கொள்கிற அளவே, இங்கு சங்க இலக்கியத்திற்குத் துணை தேவைப்படுகிறது. இதைக் கண்டு மாணிக்கச் செம்மலுக்குப் பெருமிதம் தோன்றுகிறது. இளங்கோ வடிகளின் சிலப்பதிகாரத்தைத் திறனாடும் பொழுது,

> "அடிகளைப் பெற்றெடுத்த மொழித் தாய்க்கு நாமும் பிறந்தோம்; அவர் நூலை எழுதிய மொழியிலேயே

> படிக்கும் பேறு பெற்றோம் எனப் பெருமிதம் கொள்கின்றோம்"

என மொழிகுவர். (கா. 62) தொல்காப்பியம் இன்றும் படித்ததும் கருத்து யாதென விளங்குமாறு, மிக எளிய நடையில் நூற்பிக்கப் பட்டிருப்பதை இவர் விளக்கிக் காட்டுவார். "தொல்காப்பியம் விளங்கவேண்டும் எனின் நம் விளங்காமை ஒழியவேண்டும்" என்பார் (தொ. 59) சிறு முயற்சியும் செய்யாது, பழந்தமிழ் நூல்களை விளங்க வில்லை என ஒதுக்கத் தூண்டுவது குற்றமல்லவா?

இத்தகைய தமிழைத் தமது தாய்மொழியாகப் பெற்றும் அதனை மறந்து வருவதைக் கண்டு இவர் மனம் வருந்துமிடங்கள் பலவாகும்.

தமிழ்நாட்டு மழலையர் அனைவருக்கும் தமிழை அறவே விடுத்து இன்று பள்ளியிற் சேர்க்கும் மூன்றாண்டு அகவை முதல் ஆங்கிலத்தையே பயிற்று வித்து அழிவதுதான் அவர் நெஞ்சை மிகவும் உறுத்திக் கொண்டிருந்தது.

> "பால்குடி மறவா வரியிளஞ் செங்காற் குழவிகளைத் தாய்ப்பால் உண்ணவிடாது ஆங்கிலம் முதலான அயல்மடிப் பால்களை வலிந்து, மயங்கி ஊட்டும் கடும் கொடும் போக்கினைக் கண்டு கையாறு எய்தியிருக்கின்றோம்."

என இவர் மாணிக்கவுரையில், 'கையறுநிலை' யாகச் சுட்டியிருப்பது தமிழராய்ப் பிறந்தார் உள்ளங்களில் சென்று தைக்கவேண்டும். (முன்னுரை)

## தமிழின் இயற்கைத் தன்மையை அழிக்கும் முயற்சிகள்

இன்று எங்கு நோக்கினும் தமிழின் இயற்கைத் தன்மையை அழிக்கும் முயற்சி கூடி வருகிறது. தமிழின் இயல்புகளை அறிந்து நாம் போற்றவேண்டும். ஒருவருடன் பழகுங்கால், அவருடைய இயல்பறிந்து பழகுகிறோம்

அல்லவா? 'பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகுதல்' அல்லவா? தமிழ் தற்காப்புத்தன்மையுடையது. அது இயற்கையோடு இயைந்து பிறந்த மொழி. அதன் நிலைபேற்றுக்கு, வேறு எவ்வித இடர்கள் நேரினும், இயல்பறிந்து போற்றிய பாங்கே அடித்தளமாகும். இன்றைய தமிழார்வலர்களேனும் இவ் விவரங்களைக் கண்டு கொள்ள வேண்டும்.

> "தமிழ் ஆழமான பழமையும் உயரமான புதுமையும் வாய்ந்தது; தோண்டத் தோண்ட ஒளிதரும்; வளர்க்க வளர்க்க நிழல்தரும்.
>
> எக் காலத்தையும் தழுவிக் கொண்டு வாழும் தற் காப்புத் தன்மை தமிழுக்கு உண்டு.
>
> எவ்வளவு கடல்கோள்கள், எவ்வளவு சமயப் பூசல்கள், எவ்வளவு அயல்மொழித் தாக்குதல்கள், எவ்வளவு தமிழ் மக்களின் அறியாமைகள், எவ்வளவு மறைந்த சிறுபெரு நூல்கள்! இவ்வளவு இடையறாத் தொல்லைக் குண்டுகளிலிருந்தும் தப்பிப் பிழைத்து வருகின்ற தமிழ்த்தன்மையை - இன்றும் பிழைத்து வருகின்ற தமிழின் தனியாற்றலை - நாம் காண்கின்றோம்." *(ச. 54)*

இன்று, முற்சுட்டியாங்கு தமிழை வளர்ப்பது போல் காட்டி, அழிவுகண்டும் அதனையே ஆக்கம்போல் சொல்லித் தீங்குகட்கே துணைபோகும் தமிழர் அனைவ ராலும் தமிழின் இயற்கை நாளும் சிதைக்கப்பட்டு வருகிறது.

இதனை மாற்ற 'வீறுடைய நல்லிளைஞர்கள் பெருக வேண்டும்' என்பது மாணிக்கனாரின் வேணவா.

தமிழில் வேற்றுச் சொற்களும் வேற்று ஒலிகளும் அளவு கடந்து கலப்பது தமிழின் இயற்கைக்கு முரணாகும். அது தமிழை அழித்துவிடும்.

> "ஒலிக் கலப்பு என்பது தமிழ்க் கலைப்பாகும். ஒலிப் பிறழ்ச்சி என்பது தமிழ் உயிர்ப் பிறழ்ச்சியாகும்." *(இ. 49)*

இடைக் காலத்தில் சிலேடை, யமகம், திரிபு என்று பிற மொழிச் சொற்களை அளவு கடந்து கடன் பெற்ற போதும், அவற்றைத் தமிழ்ப்படுத்தியே எடுத்தாண்டனர். ஜ,ஸ,ஷ,க்ஷ,ஹ என்ற கிரந்த எழுத்துக்களையும் அவர் தமிழிற் புகவிடவில்லை.

"ஒலிக் கற்பில் நல்லிடைக் காலத்தார் பிறழவில்லை. இந் நிலையை நாம் உணர வேண்டும்."

"யா காவாராயினும் நா காக்க என்பதுபோல யா கலந்தாலும் ஒலி கலவாது தமிழ் காக்க" என மாணிக்கச் செம்மல் வேண்டுகின்றார். நமக்குள்ள உயிர் 12, மெய் 18, ஆய்தம் 1 என்ற 31 ஒலி வரம்புக்குள்ளேயே, உலக மொழி, ஒலி மாற்றங்களையெல்லாம் கொண்டுவர வேண்டும்.

ஆங்கிலமொழி உலகமொழிகட்கெல்லாம் கடன் பட்டுள்ளது. அதிலுள்ள மூலச் சொற்கள் குறைவே; கிரேக்கம், இலத்தீன் கலைச் சொற்கள் கணக்கில; தமிழ்ச் சொற்கள் கூடக் கலந்துள என்று மேடைக்கு மேடை பேசுவர்; எழுத்துக்கு எழுத்துக் கூறுவர். ஆனால் அவர்கள் ஒன்றை மட்டும் மறந்து விடுவர். ஆங்கிலம் அனைத்துச் சொற்களையும் ஆங்கில வடிவப்படுத்தியே எடுத்தாளும். மிசியோனாரீஸ் எனப்படும் இலத்தீனை அது 'மிஷனரீஸ்' என்று மாற்றியே ஆளும். திருவையாறு - ட்ருவாடி ஆகும். மதுரை மெஜூரா ஆகும். தமிழ்மைப்படுத்தி ஆளும் மரபு தமிழிலும் உண்டு. பாட்டிலைப் போத்தலென்றும் பட்டனைப் பொத்தானென்றும், டேவிட்டைத் தாவீது என்றும் இதுபோல் மாற்றி வழங்கிய நூற்றுக்கணக்கான சொற்களைப் பட்டியலிட்டு, இன்றையத் தலைமுறைக்குக் கற்பிக்க வேண்டும். மொழியில் மாறுதல் வராமல் இராது. பேச்சு வழக்கிலுள்ள உயிருள்ள மொழியில், மாறுதல்களும் பிறமொழிச் சொற்கலப்பும் நேர்வது இயற்கை. ஆனால் அவை மொழியின் இயல்புக்கு மாறாவாறு புகுத்தப் படவோ, கலக்கவோ வேண்டும். ஒவ்வாதவை தாமே

விலகிப் போகும்; அல்லது மொழியை அழித்துப் பாழாக்கி விடும்.

குழந்தைக்குப் பிறந்த காலத்து உடனமைந்த சில அடிப்படை உடற்கூறுகள் பிறகு மாறுவதில்லை. "மொழிக்கும் மாறாத சில பிறப்பியற்கைகள் உண்டு. அந்த இயற்கையில் கைவைப்பின் அம்மொழி கெட்டுவிடும். வருகின்ற வேறுபாடுகள் மாறுபாடுகளெல்லாம் அவ் வியற்கையை ஒட்டியே அமையவேண்டும்." *(தொ. 17)*

தமிழ்மொழி இயல்பான உரமும் ஊட்டமும் ஊற்றமும் உடையது. அது தன்னையும் காப்பாற்றிக் கொண்டு தமிழனையும் காப்பாற்றுகிறதென்பது புனைந் துரையன்று. இதனையும் மூதறிஞர் நன்கு எடுத்துக் காட்டுகிறார்.

> "தமிழ் மொழியின் நீண்ட வரலாற்றைக் கூர்ந்து அறிந்தவர்கள் அயலொலியை எவ்வளவு வற்புறுத்தித் திணிப்பினும் தமிழ் ஏற்றுக்கொள்வதுபோல் காட்டித் தள்ளிவிடுவதை அறிவர். வாயுட் புகுந்து ஒட்டிய ஒரு சிறு வேற்றுப் பொருளையும் நா வளைத்துத் துளைத்து உராய்ந்து எப்படியும் வெளியேற்றுவது போல, தமிழும் சிலர் செய்யுட்களில் சிலர் உரைநடைகளில் அவ்வப்போது புகுந்த வேற்றொலி களைக் காலப் போக்கில் ஓதுக்கி விட்டுவிடக் காண்கிறோம்." *(தொ. 108)*

இங்ஙனம் வட ஒலிகள் தமிழிற் புகும்போது இவ்விவ் வகைப்படி தமிழ் வடிவம் பெறவேண்டுமென, முதன் முதலாக மணிமேகலையில் சாத்தனார் வழிகாட்டினார். புத்த சமய நூலாதலின் அளவு கடந்த பிறமொழிச் சொல் வடிவங்களைத் தமிழ்மைப் படுத்த வேண்டிய கட்டாயம் அவருக்கு ஏற்பட்டது. "சாத்தனார் ஒலி வரம்புக்கு முதல் வழிகாட்டி" எனச் சான்று பல காட்டி விளக்குவர் நம் மாணிக்கச் செம்மல். *(இ. 200)* இதனை வழிகாட்டியாகக் கொண்டு, பவணந்தி முனிவர் வடசொற்களைத் தமிழ்மைப்

படுத்தும் பல விதிகளை, இலக்கணமாக வகுத்துத் தந்தனர். “நாயன்மார்கள் ஆழ்வார்கள், கம்பர், வில்லிபுத்தூரார், பரஞ்சோதியார் என்ற பெருமக்கள் எல்லாம் தமிழ்மை குன்றாத பாடல்கள் ஆயிரமாயிரம் எழுதினர்.” (தொ. 108)

‘தமிழ்மை’ கெடாது தமிழைப் பேணவேண்டிய வழி வகைகளை இவர்தம் நூல்களனைத்தும் வலியுறுத்தும். மாணிக்கனாரது புலமையின் ஆழமும் தமிழ் இலக்கிய இலக்கணம் பற்றிய முழுமைப் பார்வையும் ஆய்வுக் களங்களைத் தேர்ந்தெடுக்கும் முறையும் அவற்றை வடிவப் படுத்தி எழுதும் பாங்கும் வளரும் தமிழ் ஆய்வாளர்கள் கற்றுக்கொள்ள வேண்டிய பாடங்களாம்.

## நடைச் செறிவும் சீர்மையும்

மாணிக்கத் தமிழ் நடைச்செறிவு, பொருட்செறிவு, சொற்செறிவை நோக்கியது. அவர் சொல்லாக்கம், சொற் படைப்பு என்பதை, மொழியறிஞன் ஒவ்வொருவனும் தனது மொழிக்குச் சேர்க்கவேண்டிய பெருஞ்செல்வமெனக் கருதினார். சொற்களைக் கூடியமட்டும் சுருக்கி எழுதிப் போதலையே முதற்செறிவாகக் கருதினார்.

‘மறித்து நோக்கும்’ பார்வையே அவரது ஆய்வுப் போக்காகும். ஏன்? இவ்வாறு இருப்பதை வேறு பார்வையில் பார்த்தாலன்றோ உண்மை புலப்படும்? முன்னோர் மொழி பொருள்களைப் பொன்னேபோல் போற்ற வேண்டுமெனினும், அவற்றில் நேர்ந்துவிட்ட தவறுகள் எங்கெங்குள? இவ்வாறு செம்மை நோக்கிச் செலுத்துவதாக, இவரின் ‘மறித்த பார்வைகள்’ அமைவதால், நமக்கு அவை நல்வழிகாட்டிகளாகின்றன. இவர்தம் கருத்துடன் நாம் வேறுபடக் கூடிய இடங்களும் உள. எனினும் அவர் போக்கிலேயே - செம்மையும் சீர்மையும் நோக்கியே செல்ல நம்மை அவை தூண்டுவதால், பயனுடையன ஆகின்றன.

ஒருவர்தம் உள்ளத்தையும் வாழ்க்கை நடைகளையும் அவர்தம் உவமைகளைக் கொண்டு அறியலாம் எனத்

தேடுவர் மேலை நாட்டார். அறிஞர் மாணிக்கனார் கூறும் உவமைகள் சில, அவர்தம் கூரிய எளிய ஈடுபாடான அனுபவமிக்க வாழ்க்கை நடையை நமக்கு விளக்குவன. மாணிக்கத் தமிழின் சிறப்பியல்புகள் அவர் தேர்வு செய்த ஆய்வுக்களங்களால், அவற்றை மறித்து நோக்கிய பார்வை களால், தீர்வுக்கு வழிகாட்டும் புலமை ஆழத்தால், தமிழ் இலக்கிய இலக்கண முழுமை நோக்கால், பக்கத்திற்குப் பக்கம் காணப்படும் புதுப்புதுச் சொல்லாக்கத்தால், நடைச் செறிவால், வெளியீட்டழகால், என்றென்றும் மாறாத தமிழ்க் கொள்கை நெஞ்சால் அறியப்படுகின்றன. அவரது பாப்புனை திறன் ஈடுஇணை அற்றது. எனினும் ஆய்வுப் பகுதி மேலோங்கி நிற்பதால், அவர்தம் கவிதை புனை அழகு இன்றும் பலரால் கண்டுகொள்ளப் படாதிருக் கின்றது.

## சிறப்புக் கல்வித் துறைகள்

தொல்காப்பியம், திருக்குறள், சங்க இலக்கியம் மூன்றையும் கற்க மாணிக்கத் தமிழே முறையான - நெறி பிறழாத வழிகாட்டி எனல் முற்றிலும் சாலும். இதுகாறும் தொல்காப்பிய அறிஞர்கள் பலர் வாழ்ந்துள்ளனர். எனினும் அவர் அனைவரையும் மறவாது உளங்கொண்டு, தொல்காப்பியத்தின்பால் பேரார்வம் வைத்து, அக்கடலுள் மூழ்கி முத்தெடுத்த பெருமை, மாணிக்கத் தமிழில் பல இடங்களில் வெளிப்படக் காணலாம்.

தொல்காப்பியம் தனித்தமிழ் நாகரிகக் களஞ்சியம். 'தொல்காப்பியம் என்பதனை ஆங்கிலத்தில் எழுதினால் தோல்காப்பியம் என்று படிப்பார்கள் என்று இத்தமிழ் முதல் நூலை நகையாடிய ஒரு காலத்தை நினைக்கும்போது இரக்கம் தோன்றுகிறது. இவ்வாண்டில் எடுத்த (1973) இராச ராச சோழன் திரைப்படத்தில் 'மணி முடியில் தொல்காப்பியம் வீற்றிருக்கும்' என்று இராசராச சோழனே பாடுவதைக் கேட்கும்போது நமக்கு உயிர் குளிர்கிறது; உடல்

சிலிர்க்கிறது. இன்று தமிழுக்கு ஒரு நற்காலம். காரணம் தொல்காப்பியம் என்பதை அறியாதார் இலர். அயல் அறிஞர்கள் இந்நூலை மதிக்க மதிக்க நம்மவர்க்கும் அதன்பால் மதிப்புப் பெருகுகின்றது."

"தமிழின் எதிர்காலம் தொல்காப்பிய மறுமலர்ச்சிக் காலமாகும்." *(தொ. 193)*

இவ்வாறு கூறுவதற்கான காரணம் தொல்காப்பியப் பற்று, ஆர்வம் என்பதன்று. தொல்காப்பியத்தை ஆழக் கற்றதன் பயனாக, அதன் நிலைபேறான தன்மையை இன்றைய வளர்ச்சி நிலை வரை ஒப்பிட்டு நுட்பமாக அறிந்ததன் பயனாகவே இவ்வாறு அழுத்தமாகக் கூறுகிறார். தொல்காப்பியத்தின் பிற்கால வீச்சினை இச்செம்மலைப் போல காரண காரியத்துடன் எடுத்துக் காட்டியவர் வேறு எவருமிலர்.

> "தொல்காப்பியம் சங்க இலக்கியம் திருக்குறள் முதலாய நூல்கள் இயற்கையோடு இயைந்தன. ஆதலால் அவை ஞாயிறு திங்கள் போல என்றும் புத்தொளி தரவல்லன.
>
> திருக்குறள் மக்கட்கு உயிர் நூலாவது போலத் தொல் காப்பியம் தமிழுக்கு உயிர் நூலாகும்." *(தொ. 45)*

தொல்காப்பியம் பெருங்காப்பியமனைய கட்டமைப் புடையது. புறநிலைக்கட்டமைப்பு, அகநிலைக் கட்டமைப்பு என இருகூறாகப் பிரித்துக் காணலாம். காப்பியங்களில் சிலப்பதிகாரம் வியக்கத் தக்க கட்டமைப்பு உடையது. இவற்றின் உட்புகுந்து, திட்பநுட்பங்களை முழுவதும் கண்டறிந்து விளக்கி விட்டோமென எண்ணுதற்கில்லை. இதனை நன்குணர்ந்த இப்பேராசான், "இலக்கண நூலாக இருந்தபோதிலும் இலக்கிய வனப்புடையதாக இந்நூல் இலங்குகின்றது. ஒரு பெருநூலை எப்படி அமைப்பது தொகுப்பது வகுப்பது விரிப்பது நிலைபெறுத்துவது என்ற கூறுகட்கெல்லாம் எடுத்துக்காட்டாக விளங்குவது தொல்

காப்பியம்'' என்று எடுத்துரைக்கக் காண்கின்றோம் (தொ. 30). இவ்வாறு படிப்பார் எவரும் மேலே தொடரத் தூண்டுமாறு, இவர் ஆங்காங்கு சுட்டிக் கூறுவன பலவாகும்.

"நயம் பிலிற்றும் இலக்கியங்கட்கெல்லாம் நயம் ஊட்டிய தேனிறால் தொல்காப்பியம்." (தொ. 5)

தொல்காப்பியம் எளிதாக, இனிதாக, இலக்கண விலக்கியம் என்னுமாறு எழுதப்பட்டுள்ளதை, அவரே முன்னோடியாகச் சில காட்டுக்களால் நிறுவுவதுடன், பிற்கால இலக்கிய நூல்களும் தொல்காப்பியத்திற்குக் கடன் பட்டிருப்பதை நன்கு தெளிவுபடுத்தியுள்ளார்.

தொல்காப்பியம் ஒருமொழிக்குரிய அத்தனை இலக்கணக்கூறுகளையும் விரித்துக் கூறிவிடவில்லை; அஃது இயல்வதுமன்று. தமிழ் மொழியின் இன்றியமையாக் கூறுகளைத் தேர்ந்தெடுத்து, விதி வரையறைகளை அது தருகிறது. கூறுவன கொண்டு கூறாதன கொள்ளுமாறும், தன் நூற்பாக்களிலேயே 'உடம்பொடு புணர்த்தல்' போலக் கூறியவற்றுக்கான உதாரணங்களைத் தருவதுடன், கூறாத பல இலக்கணங்களைக் கற்பவர் உய்த்துணருமாறும் தருகின்றது. இவ்வாறு ஆராய்வதுடன், தொல் விளக்கங் காண்பதற்குக் கருவி நூலாகப் பயன்படக் கூடியன சங்க இலக்கியங்களும் திருக்குறளும் சிலப்பதிகாரமும் ஆகும். எனினும் இப் பேரறிஞர் கருத்தின்படி தொல்காப்பிய இலக்கணத்தைக் காண்பதற்குத் தொல்காப்பியத்தையே இலக்கியமாகக் கொள்ள வேண்டும். பிற நூலெல்லாம் பன்னூறாண்டு பிற்பட்டன. தொல்காப்பிய ஆய்வாளர் முதற்கண் தொல்காப்பியத்தையே அதற்குக் கருவி நூலாக மதித்துப் பல்லாற்றானும் ஆராயத் தலைப்பட வேண்டும். (தொ. 95)

ஆய்வுக்களம் தேர்வதில் மட்டுமன்றி, தலைப்பிடலி லும் வல்லவர் இப்பேராசான். முற்கால இலக்கியங்களை ஓர் எண்ணிக்கையுள் அடக்கலாம்; இடைக்காலச்

சிற்றிலக்கியங்களோ எண்ணிலடங்கா. இதையுணர்ந்த இவர் 'இலக்கிய வெள்ளம்' எனத் தலைப்பிடுவார். 'தொல் காப்பியப் புதுமை' என்றும் 'பாரதியின் பழமை' என்றும் தலைப்பிடுவதோடு, அவ்வாறு சுட்டுதற்கான சான்றா தாரங்களை அடுக்கியும் காட்டுவார்.

தொல்காப்பியம் மன்னர்களைப் பாடும் மரபு களையே கூறும் நூலன்று. ஐந்திணை மக்கள் வாழ்வைப் புனையும் மரபுகள் பற்றியது. 'மக்கள் நுதலிய அகன் ஐந்திணை' என்பதே அவர் வாக்கு. திணை மக்கள் இரு வகைப்படுவர்; தலைமக்கள், நிலமக்கள் என. அடியோரும், வினை வல்லாரும் அன்று காணப்பட்டனர். இம்மன்னாயச் சூழலுக்கு ஏற்ப, இவர்கள் அனைவருமே பாடுதற்குரிய ராயினர். "இடையரும் குறவரும் மறவரும் பாணரும் கூத்தரும் விறலியரும் கலைஞரும் இசைஞரும் படைஞரும் ஆகிய இன்ன பொதுவான மக்களின் வாழ்க்கைகளைப் பாடலாம்; புனையலாம்; எழுதலாம் என்று காட்டுவர் தொல்காப்பியர். கிராம இலக்கியம் என்று சொல்லத்தகும் ஊரிலக்கியமே இத் தமிழ் நூலின் எழுத்து நோக்கமாகும்" என்று மேலும் ஆராய வழிவகுக்கும் போக்குச் சிந்திக்கத் தகுந்ததாகும். *(தொ. 83)*

தொல்காப்பியம் பற்றிய மாணிக்க ஆராமையனைத் தும் அந் நூலுக்கு முற்றிலும் தகுதியுடையதென்பதும் அம் மாணிக்கக் கட்டுரைகளாலேயே விளங்குகிறது. தமிழினத்தின் பொதுச் சொத்தாக்கிவிடவேண்டும்; பிற சில நூல்களைப் போல மேடைதோறும் முழங்கும் நூலாக்கி விட வேண்டும்; தொல்காப்பியக் கல்வி யாண்டும் பரவி நிலை பெறவேண்டுமென அவர் பேரார்வத்தோடு மொழிபவை அவர்தம் கனவென்றே தோன்றும். அது நனவாகும் காலமே, தமிழின் மறுமலர்ச்சி நிலைபெறுங் காலமாகும். அதற்கான நெறிமுறைகள், வழிவகைகள் அனைத்தையும் நீங்கள் மாணிக்கத் தமிழில் கண்டு கொள்ளலாம்.

"தொல்காப்பியம் சென்ற கால நிகழ்கால வருங்காலத் தமிழினத்தின் பொதுவுடைமை. தமிழர் பெற்றிருக்கும் தொல்பெருஞ் செல்வங்களுள் தலையானதும் முதன்மையானதும் தகுதியானதும் தொல்காப்பியமே. இது உண்மை; வெறும் புகழ்ச்சி யில்லை." *(தொ. 264)*

சென்னைப் பல்கலைக் கழகத்தில், இம் மூதறிஞர் 'சேதுப்பிள்ளை வெள்ளி விழா நினைவுச் சொற் பொழி'வாற்றுகின்றார். *(1978)* அவருக்கு எதிரே கடற் கரையில் வரிசையாக நிற்கும் சிலைகள் நினைவிற்கு வருகின்றன. இயல்பாக, இச்சிலை வைப்பிலெல்லாம் நாட்டமில்லாத இப் பண்பாளருக்கு, தொல்காப்பியருக் கன்றோ அங்கு சிலை வைத்திருக்க வேண்டுமென்ற எண்ணம் எழுகிறது.

"நான் இங்கு நின்று பேசும்போது அதோ கடற் கரையில் உள்ள தமிழ்ப் புலவர்களின் கற்சிலைகள் என் கண்ணே தோன்றுகின்றன. அப் புகழ் வரிசை யில் தமிழ் முன்னோரான தொல்காப்பியரின் சிலை வைக்கப்படவில்லையே என்ற ஓர் ஏக்கம் என் உள்ளத்தில் குமுறாமல் இல்லை. தமிழ் மக்கள் அச் சிலையை ஒருநாள் நிறுவுவார்கள்; நிறுவி முழு மன நிறைவு பெறுவார்கள் என்ற நம்பிக்கை உடையேன். *(தொ. 280)*

தொல்காப்பியத்துடன், சங்க நூல்களிலும் திருக் குறளிலும் இப் பேராசானுக்கிருந்த கல்வியின் நுட்பமும் திட்பமும் கருதற்பாலன. 'தமிழ்க் காதல்' எனும் இவர்தம் முனைவர் பட்ட ஆய்வேடும் 'வள்ளுவம்' பற்றிய இவர் தம் புகழ்நூலும் இவரது கல்வியின் ஆழத்தைப் பறைசாற்றுவன.

"தமிழ்ப்பிறப்பு எடுத்த தமிழர்கள் தங்கள் வாழ் நாளில் ஒரு திங்கள் சங்க இலக்கியக் கல்விக்குப் பயன்படுத்தக் கூடாதா?"

மா. 3.

"குறுந்தொகை ஒன்றோடு உறவு கொண்டாலே, சங்கத் தமிழ் நாகரிகம் நம்மோடு படிந்துவிடும்."

"சங்கக் கல்வி பெறாவிட்டால் தமிழனுக்கு ஏனைக் கல்வியால் இனப்பெருமை இல்லை என்று கூறுவேன்." (ச. ix)

இவ்வாறு சிலப்பதிகாரம் மணிமேகலை உட்படப் பழந்தமிழ் நூல்களில் ஆழப் பதிந்த புலமையும் பரந்த ஆய்வும் கொண்ட இப் பேரறிஞர் 'கம்பர்' என்ற சிறு நூலில், அப் பெரிய காப்பியம் பற்றிய தம் முழுமையறிவை வெளிப்படுத்திக் காட்டுகின்றார்; இலக்கியச் சாறு என்ற நூலில் உள்ள கட்டுரைகள் அன்னவர்க்கு இக்கால இலக்கியங்களிலும் பற்றும் பாசமும் படிப்பறிவும் இருந்தமையைத் தெற்றெனப் புலனாக்குகின்றன. பாரதியார் பற்றி நன்மதிப்பும் ஈடுபாடும் கொண்டு பல ஆய்வுரைகள் வழங்கியிருப்பதோடு, இவரது எழுத்தில் ஆங்காங்குப் பாரதியச் சொல்லும் சிந்தனையும் விரவி வரக் காணலாம். வேறுபட்ட காதலிணைவுகளைக் கதையாக்கிய கு.ப. இராவை இவர் படித்திருப்பதுடன் திறனாடுகின்றார்.

பச்சையான சிவப்பு வருணனை மிக்க புதுக்கவிதை; 'எங்கே போகிறோம்' என்ற புதினம்; பிச்சை மூர்த்தியின் 'கலையும் பெண்ணும்' என்ற கதை, புதுமைப் பித்தனின் 'சாப விமோசனம்', மௌனியின் 'அழியாச்சுடர்' என இவர் பல்வேறு படைப்புக்கள் பற்றிக் கருத்துரை கூறுவதும் இராசாசி, சீவானந்தனார் போல்வார் இக்கால இலக்கியப் போக்கு பற்றிக் கூறியவற்றை எடுத்தாள்வதும் சிந்தனை விருந்தாகவுள்ளன.

'பூவிழி வாசலிலே' என்ற திரைப்படக் காட்சி ஒன்றைச் சிலப்பதிகாரக் காட்சியுடன் ஒப்பிடுகிறார் இவர். இக்காலத் திரைப்படப் பாடல் சிறு நூல்களைத் தேடித் தொகுப்பதில் ஆர்வம் காட்டியுள்ளார்.

இக்கால இலக்கியங்களுள் 'குறிக்கோள்' உடையவை என இவர் சில நூல்களைப் பட்டியலிடுகிறார். "மு.வ. வின் அகல்விளக்கு, கல்கியின் அலையோசை, பார்த்தசாரதியின் குறிஞ்சிமலர், செயகாந்தனின் ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம், இந்திரா பார்த்தசாரதியின் குருதிப்புனல், அகிலனின் எங்கே போகிறோம் என்ற புதினங்களும்; அண்ணாவின் நல்லதம்பி, கலைஞரின் தூக்குமேடை, இராமையாவின் பூவிலங்கு, மணிசேகரனின் பிறவிக்கடல், அழகப்பனின் முத்துச் சிற்பி, கோராவின் பெண்சாதி, வீராசாமியின் பொன்குஞ்சு முதலிய நாடகங்களும் குறிக்கோள் இலக்கியங்களாகப் படைக்கப்பட்டுள". (இ. 11)

இங்ஙனம் இக் காலப் படைப்புக்களையும் எடை போடும் இவர், தமிழ் எழுத்தாளர்கள் நல்ல மொழி நடையில் எழுதவேண்டிய மொழிக் கடமையும் உடையவர் கள் என வற்புறுத்தத் தயங்கவில்லை.

தமிழில் ஆங்கிலத்தை அளவிறந்து கலப்பது பெருந்தவறு. வாசகர்களைத் தவறான கலப்பு மொழி வழியில் இவர்கள்தான் பழக்கிவிடுகிறார்கள். பிறகு அவர் கட்கு அதுதான் எளிதாகப் புரிகிறது என்றும் காரணம் சொல்கிறார்கள். 'மொழி ஒரு கருவிதானே' என இவ் 'எழுத்தர்கள்' சொல்வதைக் கேட்டு மிகவும் வருந்துகிறார்.

மொழிக் காப்பும் மொழியாக்கமும் கூட எழுத்தாளர் தம் கடமையே. அவ்வாறு கட்டுப்பட்டு நடப்பது தான், படைப்பையும் படைப்பு எழுந்த தமிழையும் நிலைக்க வைக்கும்.

ஒரு படைப்பில் பாத்திரங்கள் பேசும்போது, அப் பேச்சுநடை வட்டார வழக்குக்கு ஏற்ப அமையலாம். அதற்காக நூல் முழுவதும் வட்டார மொழியாக மாறுவது தவறு. அவ் வட்டார நடையும் கூட எழுத்து வழக்கை நோக்கியதாகவே எழுதப்படவேண்டும். இன்றேல் ஒரு மொழி, அனைவருக்கும் பொதுவாகாமல், பலருக்கு விளங்காதொழிந்துபடும். வ.வே.சு. ஐயர் தமது கதை

குளத்தங்கரை அரச மரத்தால் சொல்லப்பட்டாலும், ஓரளவு அனைவருக்கும் விளங்கும் பொது மொழியிலேயே தாம் அதை எழுதியிருப்பதாக முன்னுரையில் சுட்டியிருப் பதை இப்பேராசான் மிகப் பொருத்தமாக எடுத்துக் காட்டுகிறார். "இருப்பினும் அது (அரச மரம்) பேசிய படியே எழுதினால் 'இன்று', 'போதும்' என்பன போன்ற வார்த்தை களை இன்னு, போரும் என்று எழுதவேண்டிவரும். படிப்போர் பொருள் கண்டுபிடிப்பது கஷ்டமாய்ப் போய் விடும் என நினைத்து அவை போன்ற மொழிகளை இலக்கணப்படுத்தியே எழுதியிருக்கிறேன்."

எந்த அளவு வழக்குச் சொற்களை ஆளலாம்; எவ்வாறு ஆளலாம் என்பதற்கும் ஓர் எல்லையுளது. வட்டாரச் சொற்களை, வடிவங்களை அம் மாந்தர் பேசுவதாக எழுதுவதில் தவறின்று என உடன்படும் இப் பேரறிஞர், 'தமிழ் நூலில் மொழியே மாறும்' என்பது - கொச்சைப்படுமென்பது உடன்படத்தக்கதன்று என அன்பு கலந்த மறுப்பைத் தெரிவிக்கின்றார். இதை இக்கால எழுத்தாளிகள் எண்ணிப் பார்க்கவேண்டும்.

> "குறிஞ்சித்தேன் என்ற புதினம் படக மொழியிலும் புத்தம் வீடு, தலைமுறைகள், தலைகீழ் விகிதங்கள் என்ற புதினங்கள் வட்டார மொழிகளிலும் இருந்தாலும் மொழி எல்லைக்குள் அமைந்தவை,"

எனச் சான்று காட்டி, வழிப்படுத்தவும் காண்கின்றோம். எழுத்தாளர்களையும் மொழித் தொழிலாளர்களாகக் காணும் இவர் அவர்களும் தங்கள் சிந்தனைத் தொழில், எழுது தொழிலுக்குத் தக்க வருவாய் பெற்றுத் தம் பொருட் காலில் நிற்கவேண்டும்; அப்போது தான் 'சந்தை நோக்கமும்', 'தொழு நோயுமின்றிச்' சிந்தனையுரிமையோடு அவர்கள் வாழ முடியுமென்பார் இப் பெருமகனார். (இ. 3)

இத்தகைய மதிப்புக்குரியவர்களை, 'எழுத்துச் சான்றோர்களே!' என அழைத்து இவர் விடுக்கும் வேண்டு கோள் கல்லையும் கரைக்கும் தகையதாகும். முடிந்தவரை

தமிழ்ச் சொற்களைக் கூடுதலாகப் பயன்படுத்த வேண்டுகின்றார். "எழுத்தாளர்களாகிய நமக்குத் தமிழாக எழுதும் ஆற்றலும் வேண்டும். தவறான மொழிக் கொள்கைப் போக்கால் நம் படைப்புக்கள் வலுவிழக் கின்றன. நம் படைப்புக்கு நிலைபேறு தருவது உயர் கருத்து மட்டுமன்று; உயர்தனிச் செம்மொழியும் ஆகும்." (இ. 22)

இவ்வறிவுரையை, தமிழில் எழுதும் ஒவ்வொருவரும் சற்றே நினைத்துப் பார்க்கவேண்டும்.

மூதறிஞர் வ.சுப. மாணிக்கம் தமிழ்மை போற்றும் தகைஞராக விளங்கியதற்கு, அவர்தம் தமிழ்க் கல்வியே அடிப்படையாகும் என இதனாலும் அறியலாம். தொடர்ந்து தமிழ் மாணவனாய் விளங்கியதையே அவர் தம் எழுத்துக்கள் பறை சாற்றுகின்றன. அண்ணாமலை நகரில் நடந்த, தமிழ் எழுத்தாளர் மாநாட்டில் (1987) அவர் ஆற்றிய முதன்மையுரை, அவர் இக்கால இலக்கியமாயினும் கூடுமானவரை நன்கு கற்று, முழுமைப் பார்வை பெற்ற பிறகே, அதன் சிறு கூறையும் ஆராய முற்படுவார் என்பதை மெய்ப்பிக்கின்றது. அதனோடு, தொடக்ககாலம் முதல் அவர் இத் தமிழ் மொழிப்பாடும், தமிழ்ப் பண்பாடும் போற்றும், மாறா நெஞ்சினராக - மொழிக் கொள்கையாள ராக விளங்கியமையையே இவர்தம் எழுத்தும் வாழ்வும் நமக்கு எடுத்தியம்புகின்றன.

அப்பெருந்தகைச் செல்வரது கனவுகள் நனவுகளாக மாறவே போகின்றன. வாய்மை நெஞ்சம் உடையவராய், வள்ளுவர் நெஞ்சம் உணர்ந்தவராய் வாழ்க்கை நெறி போற்றியதோர் செம்மலாரின் கனவுகள், பொய்க்குமேல் உலகம் உருண்டுபடும். நனவாகும் கனவே அவர் கனவு.

செய்தித்தாள், படக்காட்சி, கட்சியாளர் முழக்கம் யாவும் தமிழை மக்களிடம் நாளும் கொண்டு வரச் செய்கின்றன. இதனால் 'தமிழ் உயிர்' நீடித்துவிட்டதாம்!

"உயர்நிலைப் பள்ளிவரை தமிழ்மொழி கல்வி மொழியாய் அமைந்த நாள்தொட்டு, அதன் செல்வாக்கு,

'தமிழில் முடியுமா?' என்று இடையூறாய்க் கிடந்த ஒரு சாராரை அஞ்சி வியக்கும்படி செய்தது.

> தமிழகக் கல்லூரிகளும் பல்கலைக் கழகங்களும் நிலத்துத் தமிழினைக் கருத்து வாயிலாகக் கொள்ளும் காலம் ஒன்று வரும்; அக்காலம் அணித்து வருவது அறிவுக் கண்ணுக்கு அதோ தோன்றுகிறது!
>
> அஞ்ஞான்று தமிழ் — உடன் வாழ்ந்த உலகத் தொன் மொழியெல்லாம் வழக்கொழியவும் ஒழியா உயிர்த் தமிழ் - ஞால அரங்கில் நடப்புரியக் காண்போம்!" *(தொ. 119,120)*

கொள்கை நெஞ்சம் அணுவளவும் மாறாத ஒரு பேரறிஞரின் கனவை நனவாக்க வேண்டும்; குறிக்கோளை அடையவேண்டும்! அதற்கு மாணிக்கத் தமிழ் நூல்கள் கையேடாகத் திகழும்; ஒளிவிளக்காக வழிகாட்டும்.

2

# நடையில் நின்றுயர் நாயகர்

இது உரைநடைக் காலம். பண்டு பா நடையில் ஆயிரம் வகைமை இருந்தமை போல, இன்று உரையிலும் கணக்கற்ற நடைவகைகள் பல்கி வளர்ந்துள்ளன.

மறைமலையடிகள், கணக்காயர் நாவலர் ச.சோ. பாரதியார், பண்டிதமணி மு. கதிரேசர் எனவும் உ.வே. சாமி நாதையர், திரு. வி.க., கல்கி எனவும் ரா.பி. சேதுப்பிள்ளை, அறிஞர் அண்ணா, மு.வ. எனவும் தமிழில் நடைவேறுபாடு காட்டித் தனித்தன்மை பொருந்த எழுதியவர்கள் பலராவர்.

ஆங்கிலவுரைநடை படிநிலை வளர்ச்சியாய் மேனிலையாக்கம் கண்டது. பாசுவெல், கிப்பன் போல்வார் நடைகள் கற்பாரை, நின்று கருதிப் படிக்க வைக்கும் திறத்தன. நம் நாட்டு ஆங்கில நாளேட்டு ஆசிரியவுரைகள் மேன்மேலும் செம்மையும் செறிவும் நோக்கியனவாய் அமைதல் காணலாம்.

தமிழில் இருபதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியும் பிற் பகுதியும், ஆங்கிலம்போல் செவ்விய மொழி நடை போற்றக் காண்கின்றோம்.

இன்று நம் இதழாசிரியர்களும் பிறரும் எளிய நடை என்றும் எல்லோர்க்கும் விளங்கும் நடை என்றும் கவர்ச்சி யான பெயர்ப்படுத்தி, தமிழ் உரைநடையை எவ்வளவு தரந் தாழ்த்தக் கூடுமோ அத்துணையளவு தாழ்த்தி விட்டனர். மக்களுக்குக் கல்வி தந்து மேன்மேலும் செவ்விய இனிய

செறிவுள்ள மொழி நடைகளிற் பழக்கி, அறிவு நுட்பம் பெற வழிவகுக்காமல் மக்களைத் தரந்தாழ்த்தித் தாமும் கீழ்நிலை நோக்கித் தாழ்ந்து தாழ்ந்து கெட்டொழியலாயினர். அரசியலார், இன்று மக்களைத் தன் முயற்சியுடையவர் களாய் முன்னேற்றாமல், அவர்கட்கு வேட்டி சேலை முதலான அனைத்து இலவச வசதிகளையும் தந்து, என்றென்றும் கையேந்தி வாழவைக்கும் நிலையையே இதற்கு ஒப்பிடலாம்.

சற்றுச் சீரிய கூரிய செந்தமிழ் நடையில் யாரும் எழுதி விட்டால், 'பண்டித நடை' என்று பழித்து, நகையாடுவர். இப் பழிப்பிற்கும் நகைப்பிற்கும் அஞ்சியே செம்மை சான்ற நடையெழுத வல்லவர்களும் நழுவியும் தழுவியும் கீழிறங்க லாயினர். சொல்லிலே கூர்மையின்றி அறிவுக் கூர்மை எங்ஙனம் வளரும்? "சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம்" என்று கம்பர், ஏழு மராமரங்களைத் துளைத்த இராம பாணத்திற்குச் சொல்லை உவமை சொல்வார். நடையிலே செம்மையிலதேல், அறிவை வளர்க்கும் மொழி மழுங்கி, அதனால் அறிவும் மழுங்கிப் போகாதா?

மொழி ஒரு தகவல் பரிமாற்றக் கருவிதான்! ஆனால் அது உணர்ச்சியைப் பதப்படுத்தும் கருவியல்லவா? அறிவை வளப்படுத்தும் கருவியல்லவா? அதனை நலமும் வளமும் செம்மையும் சீர்மையும் பதமும் இதமும் திட்பமும் நுட்பமும் ஆழமும் அகலமும் பெருமிதமும் விம்மிதமு முடைய கருவியாக்கினாலன்றி, நம் அறிவும் உணர்வும் இந் நலன்களெல்லாம் அடைதல் அரிதாகிப் போகுமே?

தமிழரை முன்னேறவிடாமல் மட்டம் தட்ட விரும்பும் ஒரு குழுவினரே, சூத்திரக் கயிறாக இவ் 'எளிமை' என்ற மாய மந்திரத்தைப் பரப்பி, தமிழ் இனத்தையே கீழ் நோக்கிய பார்வையினராக்கி விட்டனர்.

இன்று, அதனிலும் கேடாய், வட்டார மொழி, 'வெகுசன மொழி' என்றும் 'மக்கள் தமிழ்' என்றும் சொல்லி, முற்றிலும் கொச்சை மொழி, ஒலித்திரிபு, வட்டாரச் சிதைவு,

குறுமொழி, பிழைபட்ட மொழி என இவற்றையே 'எழுத்து மொழி'யாக்கப் பெருமுயற்சி செய்து வருகின்றனர். 'தாமிருந்த கோடு குறைத்துவிடல்' என்பதற்கு ஒப்ப, தாம் தமிழில் எழுதிப் பிழைப்பதையும் மறந்து, அத் தமிழையே சிதைக்கும் இப் 'பாவிகள்' 'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்' என்றபடி, தம்குலம் குடி சார்ந்த அனைவ ரோடும் கொடுநரகடைவரோ என அஞ்சுகின்றேன்.

மூதறிஞர் வ.சுப. மாணிக்கம் மொழி நடை என்பது செம்மையும் செறிவும் சீர்மையும் நோக்கியதாகவே இருக்க வேண்டுமென்ற கோட்பாடுடையவர். அதனின்றும் அணுவளவும் பிசகாத உறுதி மிக்கவர். அதனால் தமது அரும்பெரும் கருத்துச் செல்வங்களனைத்தையும், செறிவு நிறைந்த செம்மை சான்ற நயமும் சுவையும் கலந்த சீரியதொரு நடையிலேயே எழுதிச் சென்றுள்ளார். அவர் கருத்துப்படி, அரிய கருத்துக் கருவூலங்களைப் பெறவேண்டு மேல், மொழித்திறனைப் படிப்பவரும் உழைத்துப் பெற வேண்டும். வாசகனை மேல் நிலை நோக்கிக் கைதூக்கி விடும் நடையாகவே, எழுத்தாளன் நடைஇருக்கவேண்டும். மொழிவளம் என்பது சொல்வளமே ஆகும். ஆங்கிலக் கல்வியில் இத்தனைச் சொற்கூட்டம் அமைந்த பாடம் என்றும், இத்தனைச் சொல்வளமுள்ள எழுத்தாளனென்றும் மேன்மேலும் தரம் உயர்த்துக்கொண்டே செல்வர். இளம் அகவை முதலே, அகரமுதலி வைத்துப் படிக்கும் பழக்கத்தை ஏற்படுத்தி வளர்ப்பர்.

'ரீடர்ஸ் டைஜஸ்ட்' எனப்படும், உலகளாவிய ஆங்கிலத் திங்களிதழ், மாதந் தவறாது 'சொல்லாற்றலைப் பெருக்க' இரண்டு பக்கம் ஒதுக்குவதையும், இலக்கியத் திற்குக் கூடுதல் பக்கம் ஒதுக்குவதையும் இன்றும் காண்கின்றோம். தமிழில் இதழ் நடத்துவோர், ஓரிரு பக்கமேனும் நல்ல சுவைமிக்க தரமான இலக்கியப் பகுதி என ஒதுக்குவதில்லை. வாசகனின் சொல்வளம் பெருக ஏதும் செய்வதில்லை. பிற பக்கங்கள் அனைத்தாலும்

செய்யும் மொழிப் பாவத்தை, சில இலக்கியப் பக்கங்களால் கழுவிக்கொள்ளும் நினைப்பும் இல்லை. தமிழ் செய்த தவப் பயன் இதுவா?

இச் சூழலில் 'மாணிக்கத் தமிழின்' நடையழகையும் சொல்வளத்தையும் சிந்திப்பது மிகு பயன் தரும்.

## மொழி நடை பற்றிய சிந்தனை

பா நடை பற்றிய சிந்தனையில் முகிழ்த்து, பொதுவாக மொழிநடை பற்றி மலர்ந்த செம்மலின் கருத்துக்கள் நடையில் இவருக்கிருந்த ஆர்வத்தைப் புலப்படுத்துவன. 'நடை' என்ற சொல்லுக்கு ஒழுக்கம் என்றும் பொருளுண்டு. ஒழுக்கமாவது ஒரு சீராக நடப்பது. செம்மலிடம் வாழ்க்கையிலும், மொழிப்படைப்பிலும் இந் நடை யொழுங்கு உண்டு. இம்மியளவும் அவ் ஒழுங்கை விட்டுக் கொடாப் பண்பே — ஒழுக்கம் தவறாச் சீர்மையே இவரது பெருமையாகும்.

அறிவியலாக எழுதுவன ஒருவகை. இல்கியமாக எழுதுவன கலைச் சிறப்புடையன. பின்னதில் நயமும் இனிமையும் சுவையும் வேண்டும். ''இலக்கியத்தின் அடிப்படை வேறு. கருத்துப்போல் செம்பாக மதிப்பு நடை வண்ணத்துக்கும் உண்டு. கருத்தால் அறிவும் நடையால் சுவையும் பெறுகின்றோம். நடையழகு இல்லா இலக்கியம் நிறவண்ணம் இல்லாச் சோலையையும், மெய்ப்பாடில்லா நடிகனையும் வெள்ளாடை உடுத்திய பெண்ணையும் ஒக்கும்'' என்பது இவர் கருத்து. (வ.262) இவர் தமது ஆய்வுரைகளையும் இலக்கிய நயம்படவே எழுதுகிறார். தொல்காப்பியத்தை 'இலக்கண இலக்கியம்' எனப் பாராட்டும் இவர், அறிவியலாய்வாக மேற்கொண்ட கட்டுரைகளையும் சுவை பொருந்தவே எழுதியுள்ளார். இலக்கியச் சார்பான எழுத்துக்களும் நடைவண்ணம் பெற வேண்டும் என்ற இவரது நாட்டம் இவர் படைப்புக்களில் பளிச்சிடக் காண்கின்றோம்.

கடுநடை, பண்டிதநடை, பழநடை என்று புறக்கணிப்பது எவ்வளவு தவறு என்பதைச் செம்மலார் அடிக்கடி இடித்துக் காட்டுவார். "சங்கப் பனுவல்கள் விளங்காதவை என்று சொல்வது மாபெருந் தவறு. அவற்றை விளங்கிக் கொள்பவர்களாக நாம் வளரவில்லை என்பதுவே மாபெரும் உண்மை" என அழுத்தமாய்க் கூறும் இவர், ஆங்கில மொழிப் படிப்பாளிகளை உதாரணம் காட்டுகிறார். *(ச. 175)* அம் மொழிப் படிப்பாளர்கள், எவ்வளவு கற்றறிந்தவராயினும் அகராதியைப் பக்கத்தில் வைத்துக்கொண்டே படிப்பர். அதை அவமானமாகக் கருதுவதில்லை. சொற் செல்வப் பேரறிவை வளர்த்துக் கொள்ளத் துணையென அப் பழக்கத்தைக் கருதி, வகுப்பறைகளிலும் அவ்வாறு அகராதி வைத்து விளங்கிப் படிக்கும் பழக்கத்தை வளர்ப்பிப்பர். புதுச் சொற்கள் காணக் காணச் செல்வம் சேர்ந்ததுபோல் மனம் மகிழ்வர். இங்கோ வாசகனுக்குத் தெரிந்த சொற்களிலேயே எழுதவேண்டுமெனக் கூறிவிட்டு, அவன் கனவிலும் கேட்டறியாத வடமொழி, ஆங்கிலச் சொற்களைப் புகுத்தியும் எழுதுவர். இங்ஙனம் மொழி வளர்ச்சியைக் கெடுக்கப் பார்ப்பார் இருக்கும்வரை, உடன் பிறந்தே கொல்லும் நோயுடன் போராடியே தீரவேண்டும்.

> "உலகம் ஒருபடி ஏணியில் தெரியுமா? கடல் கலயத்துள் அடங்குமா? சொற்செல்வம் பெருகாத போது, அறிவுச் செல்வம் யாண்டுப் பெருக்கெடுத்து ஓடும்? இன்று தமிழ் குன்றியிருப்பதற்கு ஒரு பெருங் காரணம் மாணவர்கள் சொல் வறியவர்கள் என்பது என் கருத்து" *(ச. 174)*

என்பார் செம்மலார். தமிழில் சொல்வளம் பெருக வேண்டும். ஆங்கிலத்திற்போல, தமிழ்ப் படைப்பாளிகளும் தமிழ் கற்றிருக்கவேண்டும். தமிழில் புலமையும் திறமையும் வேண்டும். தமிழ்ச் சிறுகதை ஒன்றைப் படிப்பதும் நல்ல தமிழ்க் கல்வியாகும் காலமே, தமிழின் பொற்காலமாகும். இன்று தமிழில் கதை, நாடகம் எழுதுவார்; இதழ்கள்

நடத்துவார் அனைவரும் தமிழ் நெறியைப் புறக்கணிக்கப் பார்ப்பாராகவே இருத்தலால், மா கவிஞன் பாரதிபோல் தமிழுக்கும் ஒரு விடுதலை மறவன் தோன்றும்வரை இந் நிலை நீடிக்கவே செய்யும். தமிழ்ப் புலவர்களும் ஆர்வலர் களும் பெருந்தகை மு.வ. வைப் போலப் படைப்புத் துறையில் மேலெழுந்தால், தீவினை கீழிறங்கி மறைந் தொழியக் கூடும்.

சங்கப் பாடல்களும் சிலப்பதிகாரமும் அவை தோன்றிய காலத்து இளநீர், குளிர்நீர் போல் இனிதாய் எளிதாய் அனைவருக்கும் விளங்கியிருக்கும். காலந் தோறும் ஏற்பட்ட நெகிழ்ச்சியால், அவை இன்று கடினம்போல் தோற்றுகின்றன.

தமிழ் இலக்கியப் பகுதியில் எதனையும் கடினம், கடு நடை என்று புறக்கணிக்கக் கூடாதென்பதே மாணிக்கச் செம்மல் கருத்து. நம் உழைப்புக் கூட வேண்டுமே தவிர, அவற்றை நம் கல்விச்சூழலை விட்டு அகற்றிவிடுதல் தகாது. பதிற்றுப்பத்தின் பாநடை போர்க்கள யானை போலப் பெருமிதமுடையதெனப் பாராட்டும் இவர், "ஈராயிரம் ஆண்டுப் பிந்திய இன்றுகூடப் பதிற்றுப்பத்துத் தமிழ் பழகு தமிழ் என்பது என்போல்வார் கருத்து" என ஊக்கவுரை கூறுவார். சங்க நூலில் நூறு பாடல்களையோ, பதிற்றுப் பத்தில் இரண்டு மூன்று பத்துக்களையோ பயில் வருத்தம் பாராது சிலமுறை படித்துப் பயிலுங்கள், அருமை எளிமை யாகும். உழைப்பு, மேலும் சங்க இலக்கியம் படிக்கத் தூண்டும் அழைப்பாகும் என்று வழிகாட்டுவார் இவர். *(ச. 144)*

மணிமேகலையில் சாத்தனார் காட்டும் நடைத் திறனும் செம்மல் உள்ளத்தைக் கவர்ந்துளது. சாத்தனார் இடத்திற்கேற்ப நடையெளிமை செய்யும் புதுமனம் படைத்தவர். வழக்குச் சொற்களை எடுத்தாள்பவர். பிற மொழிச் சொற்களை மொழிபெயர்க்க வல்லவர். தமிழ் ஒலி வரம்பிற்குட்படுத்தி அயற்சொற்களை எடுத்தாள்பவர்.

புதுச் சொல்லாக்கம் செய்யும் மொழிவன்மை பெற்றவர். கதை சொல்வது போல் எழுதிப்போதல்; இடையிடையே நினைவுபடுத்திக்கொண்டு பேசுவதுபோல் எழுதுதல் என இவ்வாறு எளிமை நோக்கிப் போவதால் **'சாத்தனார் தமிழ்'** என்றே அதைச் சிறப்பிக்கின்றார்.

தமது மொழி நடை எங்ஙனம் அமையவேண்டுமென மாணிக்கச் செம்மல் ஒரு கருத்துக் கொண்டிருந்தார். அதனை ஒரு பொழுதும் அவர் மாற்றிக்கொள்ளவில்லை. பிறர்தான் தம் நிலைக்கு உயர்ந்து வரவேண்டுமெனச் செம்மலார் செம்மாந்து நின்றாரே தவிரப் பிறருக்காக அவர் கீழிறங்கித் தாழ்ந்து போனதே இல்லை.

> “என் நடை பற்றி ஒரு குறிப்பு:
>
> என் எழுத்துக்கள் கட்டளைச் சொற்களால், கட்டளை நடையால் அமைந்தவை; சொற் பல்குதல் என்ற மிகைக்கு இடமில்லாதவை; செறிவு மிகுந்தவை; வேண்டுங்கால் புதிய சொல்லாக்கங் களும் புதிய சொல் வடிவுகளும் புதிய தொடராட்சி களும் உடையவை.”

இவ்வாறு திருக்குறட்சுடர் முன்னுரையில் எழுதுகிறார். பிழைபட்டது, மரூஉவானது, ஒலி திரிந்தது, குறைபாடுடையது எனக் கூறிய இக்குறைகளின் நீங்கியதே கட்டளைச் சொல்லுடையதாகும்.

வாக்கியப் பிழை, தொடர்ப்பிழை, கலப்படம் எதுவு மற்றதே கட்டளை நடையாகும்.

செம்மலின் நடை செம்மொழி நடை - திருந்திய நடை. பிழைகளின் நீங்கியதும் குறைகளற்றதும் ஆவதுடன் தெளிவாய் விளங்குவதும் பொதுமையுடையதும் ஆகும்.

சொற்கள் எண்ணிக்கையைச் சுருக்குதல், சொல்லையே சுருக்குதல், பல பக்கங்களில் விரிக்கக் கூடியதைச் சில பக்கங்களில் செறிவுபடுத்திக் கூறுதல் என

இவ்வாறு பொருட்செறிவு, தொடர்ச்செறிவு, சொற்செறிவு மூன்றும் அமைந்ததே மாணிக்க நடையாகும்.

பழஞ்சொல் புதுக்குதல், புதுச் சொல்லாக்கம் என்பன மாணிக்கத் தமிழின் தனிச் சீர்மைகளாய்ப் படிந்து கிடப்பனவாம்.

## முழுமைப் பார்வை நடை

எதனையும் முழுவதும் பழுதறக் கற்றவரே அதன் ஓர் உறுப்பினைத் திறம்பட அறிதல் கூடும். அக் கூறினை மட்டும் பயில்வார், முழுமையையும் அறியாமல் அக் கூறின் சிறப்பினையும் தேறாமல் அரைகுறையாய் நிற்பர். இன்று பலர் நேரமின்மை, ஆர்வமின்மை, ஆற்றலின்மை காரணமாக, இம் முழுமையறிவு பெறாமலே, 'தோள் கண்டார் தோளே கண்டார், தாள் கண்டார் தாளே கண்டார்' என நின்றொழிகின்றனர். தொடக்கம் முதலே, முழுமையைக் கற்றுப் பகுதிகளை அணுகும் இக்கல்வி நெறியை இம் மூதறிஞர் பின்பற்றலாயினர். இதனால் இவர் அகலக் கால் வைக்காமல், ஆழக்கால் வைக்கும் திறம் பெற்றனர்.

இவர் எழுதி வெளியிட்டன ஓர் எண்ணிக்கையுள் - சங்க இலக்கியம்போல - அடங்கிவிடும். எனினும் அப் பேரிலக்கியமனைய நிலைபேறு இவர்தம் எழுத்துக்கும் உண்டென்பது எம் துணிபு.

இன்று தம் தகுதிக்குறிப்பில் பலநூறு ஆய்வுக் கட்டுரைகள், பல ஆயிரம் பாடல்கள் எழுதித் தீர்த்துவிட்ட தாகக் குறிப்பவர்கள் இதை நன்கு மனங் கொளல் வேண்டும். பகுதி பகுதியாய் ஆய்வது சில சமயம் குருடன் கண்ட யானையாகிவிடும். பாடத் தொகுப்பிற்கூட, முழுமைப் பகுதிகளாகப் பாடம் அமைக்க வாதிடுவார் இப் பெருமகனார்.

தொல்காப்பியத்தைப் பற்றிப் பனம்பாரனார் தம் பாயிரத்தில், 'மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி'

என்பார். 'எழுத்துமுறை' – நூல் எழுதும் நெறிமுறை என்பது மாணிக்க விளக்கம். ஒரு நூலை எவ்வாறு பகுத்து அமைத்து, முற்ற முடிய நெறிமைப்பட எழுதவேண்டுமென் பதற்குத் தொல்காப்பியம் மிகச் சிறந்த காட்டாகும்.

தொல்காப்பியத்தையும், திருக்குறளையும் பழுதற முழுமை பெறக் கற்றமையால், இவர்தம் தொடக்க ஆய்வுப் படைப்பாகிய வள்ளுவம் முழுமைப் பார்வையுடைய தானது. இவர் தம் 'கம்பர்' முழுமைப் பார்வையை வலியுறுத்தவென்றே எழுந்ததாகும்.

"வள்ளுவம் தொகுப்பு நூலன்று; முதற்கண் முழுதும் வரையறுத்துக் கொண்டு முரணறுத்து எழுதிய முறைநூல்" என்பது வள்ளுவ முகவுரை. இக் கூற்று இவர்தம் அனைத்துக் கட்டுரைகட்கும் நூல்களுக்கும் பொருந்தும்.

இவரைப் படித்துப் போகுங்கால், எந்த ஒரு பொருளாயினும் அதுபற்றி இவர் முழுவதும் கற்றுள்ளார் என்றும் மிகவுழைத்து அது பற்றிய முழுமையறிவைப் பெற முயன்றுள்ளார் என்றும் இவர்தம் நடைப்போக்குச் சான்று காட்டும்.

தொல்காப்பியம் இயல்தோறும், அதிகாரந் தோறும் தனித்தனி அமைப்பை உடையது. சூத்திர வரிசை முறைக்கு ஒரு காரணம் உண்டு. இலக்கண அலகுகள் இங்கும் அங்கும் பிரித்தும் பகுத்தும் இணைத்தும் தொகுத்தும் ஏன் கூறப்பட்டன எனக் காணுமாறு வைப்புமுறையும் அவற்றி டையே இயைபும் இருக்கும். திருக்குறளில் ஓரதிகாரத்துப் பத்துக் குறள்களுக்கும் ஒரு வைப்பு முறை காட்டப் பரிமேலழகர் முயல்வது, தமிழ் முதனூல் தொட்டு வந்த மரபேயாகும்.

> "எழுத்ததிகாரத்திற்கு மாட்டேறு ஒரு பொது வமைப்பு. சொல்லதிகாரத்திற்குத் தொகையும் வகையும் ஒரு பொதுவமைப்பு. பொருளதி காரத்திற்குக் கூற்றுக்களும் அவற்றின் விளக்கமும் ஒரு பொதுவமைப்பு." *(தொ. 33)*

இந்நடைப் போக்கால், இதை எழுதியவர்க்கு அந் நூலிலிருந்த 'பயில்வு' புலனாகிறதன்றோ?

'இளங்கோ' பற்றிய கட்டுரையில், அவர் அரசத் துறவி யாதலின், அரசியல்சார் பட்டறிவுகளுடனும் நாட்டுப் பற்றுடனும் காப்பியம் யாத்துள்ளார் என விளக்கி வருமிடத்து, இத்தமிழ்ச் செம்மலார் சாற்றும் கருத்து இது: "பல்வேறு மக்களும் களியாட்டெய்தும் கானல்வரியாயினும், பாலை மறவர்கள் கொண்டாடும் வேட்டுவ வரியாயினும், முல்லை நிலத்தோர் பாடிப் பரவும் ஆய்ச்சியர் குரவையாயினும், குறிஞ்சி மக்கள் போற்றித் தொழும் குன்றக் குரவையாயினும் வஞ்சி மகளிர் கூடியாடும் வாழ்த்தியலாயினும் விழா அரச வாழ்த்தொடு நிறைவெய்தல் பண்டைத் தமிழ் மரபு". இங்ஙனம் ஆங்காங்கு சுட்டிச்செல்லும் போதெல்லாம், நாம் நூல் முழுதும் தேட வேண்டிய செய்திகள் ஓரிடத்துத் தொகுத்துக் கிடப்பக் காணலாம்.

வள்ளுவ நூலில், திருக்குறள் பற்றிய இவர்தம் முழுமைப் பார்வை நூல் முழுதும் விரவிக் கிடக்கின்றது. ஒரு கருத்தும், ஒத்த கருத்தும் நூல் முழுவதும் எங்ஙனம் விரவிக் கிடக்கின்றன என எடுத்துக்காட்டுவார். "நுழை புலம் இல்லான் எழில் நலம்' (407) என அழகுப் பேதையும், 'கல்லார்கட் பட்டதிரு' (408) எனச் செல்வப் பேதையும் 'மேற்பிறந்தாராயினும் கல்லாதார்' (409) எனக் குடிப் பேதையும், 'கல்லாதான் சொற் காமுறுதல்' (402) என வாய்ப் பேதையும் வள்ளுவர் கண்ட ஞாலப் பேதைகள்." (வ. 34) பேதைகள் பற்றிய வள்ளுவர் கருத்தை ஆராய விரும்புவானுக்கு, இது முன்னோடியாகுமன்றோ?

பேதையர்போல் புலவர்களிலும் எத்தனை வகையினர்? "இந் நிலையினரைக் கண்ட அப் பேராசான், 'இணர் ஊழ்த்தும் நாறா மலரனையர்' (650) எனப் பயனில் புலவரையும், 'அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால்' (720) என அவையறியாப் புலவரையும், 'கற்றறிந்தும் நல்லாரவை

அஞ்சுவார்' என அச்சப் புலவரையும், 'பல நல்ல கற்றக் கடைத்தும்' (823) என மாணாப் புலவரையும், 'கல்லாத மேற்கொண்டாழுகல்' (845) எனப் பிறதுறை விரிக்கும் சிறிய புலவரையும் கண்டவர்" என்று குறள் நுண்பொருளும் தோற்றுமாறு அடுக்கியுரைக்கும் நடையின பலவுள. (வ. 35)

"செல்வர் முன் வறியவர்போல் ஏக்கற்றுக் கற்பாரும், அங்ஙன் கற்க நாணிக் கல்லாதொழிவாரும், கல்வியே கண்ணெனப் பெற்றாரும், கண்ணெனப் பெயரிய புண்ணுடையாரும், செவிக்குணவாகிய கேள்வி இல்லாத போது பசியாற்றிக்கொள்ளும் செல்வமக்களும், செவிச் சுவை சிறிதும் அறியாச் சோற்று மாக்களும் வள்ளுவக் காட்சிகள்". இவ்வாறு வள்ளுவக் கருத்தை உள்ளத்திற் கொண்ட பாங்கு தெள்ளத்தெளிவாய்ப் புறந்தோன்றுமாறு ஓடும் இயல்பு நடைகள் பலவாகும். (வ. 35) வள்ளுவத்தின் ஓரிரு பக்கங்களிலேயே இவ்வாறமையுமாயின், நூல் முழுதும் பயில்வார் திருக்குறள் பற்றிய முழுமையறிவும் நுட்பப் புலமையும் பெறக்கூடும் என்பதற்கு ஐயம் உண்டோ?

இவரது முழுமை நோக்கிலான நடை நலம் அறிய வேண்டின், சிற்றிலக்கிய மாநாட்டில் இவர் நிகழ்த்திய 'கோவைத் திறன்' பற்றிய பொழிவைப் படிக்கவேண்டும்.

இவர் எழுத்து, இவர்தம் புலமையாழம் நுட்பம் கூர்மையை விளக்கியபடி அமைந்திருக்கும்.

> "சங்கநூற் கருத்துக்கள் கோவைகளில் நிரம்பிக் கிடப்பினும், கோவைகள் சங்க நூல்களுக்குக் கிட்ட நிற்கும் தகுதியுடையனவல்ல. இருவகை நூல்களும் அகப் பொருளையே பாடுகின்றன எனினும் இரண்டன் நெறியும் நோக்கும் வேறாயவை. ஒருவனுக்கு மனைவியும் மகளும்போலச் சங்கப் பனுவல்களும் கோவைகளும் ஆம்."
>
> "கோவை என்பது சங்க இலக்கியம் என்னும் பெரிய மாளிகையைக் கண்டு படியெடுத்த ஒரு வரைபட

மாகும்; அம் மாளிகைக்குள் செல்லப் பயன்படும் வழிகாட்டியாகும்; இலக்கியம் தோற்றிய இலக்கிய மாகும்."

இவ்வாறு உணர்ந்து கூறுமிப் பெருமகன், 'இடம் அணித்து என்றல்' என்னும் ஒரு துறையில் கோவைப் புலவர் களின் வேறுபட்ட சிந்தனைகளை நுண்ணியது, இனியது, சிறந்தது எனப் பாராட்டித் தொகுத்துரைக்கும்போது தமது முழுமையானதொரு பார்வையைப் புலப்படுத்துகிறார். சிறிது நீண்ட மேற்கோளாதலால் சிலவற்றைப் பயன் கருதி இவண் காண்போம்:

"திருவாரூர்க் கோவைத் தலைவன் 'நம் இருவர் ஊர்க்கும் நடுவே எல்லைக்கல் உள்ளது. இந்த எல்லைக்கல் இன்றேல், இரண்டு ஊரார்க்கும் எல்லைச் சண்டை ஏற்படும்' என்று மொழிகின்றான்... சிராமலைக் கோவைத் தலைவன் 'என்னூர் மிளகுக்கொடி உன்னூர்ச் சோலையில் படர்கின்றது' என்று சுட்டுகிறான். திருக் கோவைத் தலைவன் 'என்னூர் மாளிகை வெண்சாந்தின் ஒளி நின்னூரின் கருங்குன்றத்தை வெண்குன்றமாக்கும்' என்று உரைக்கின்றான்... ஒரு பழங்கோவைத் தலைவன், 'நின்னுடைய கூந்தல் நிறத்தால் என்னுடைய ஊரும் இருளாகும்' என்று முடிக்கின்றான்." இவ்வாறு மேலும் கலசைக் கோவை, திருவாவடுதுறைக் கோவை, திருவெங்கைக் கோவை, தஞ்சைவாணன் கோவை, மதுரைக் கோவை, வியாசக் கோவை, குளத்தூர்க் கோவை களிலும் 'இடம் அணித்து' என்ற ஒரு துறை பற்பல கற்பனைப்பட்டிருப்பதை இவர் எடுத்துக் காட்டுகிறார். *(இ. 124, 125)*

கம்பரது இராமாயணப் பாடுபொருள் பல வகைப் படும் எனக் காப்பியப் பார்வையில் விளக்கும்போது, அப்பல்வகைப் பொருள் யாவை என அடுக்குமிவர் பாங்கைப் பார்க்கலாம்.

"இராவணனுக்குப் பிறன்மனைக் காமமும், சுக்கிரீவனுக்கு அரசுமனை மீட்சியும், அனுமனுக்கு இராமனது அன்பும், கும்பகருணனுக்கு உடன்பிறப்புப் பற்றும், தயரதனுக்கு இராமன்மேற் காதலும், சீதைக்குத் தவக்கற்பும், இராமனுக்கு மனைமீட்சியும் ஒற்றுமையும் கைகேசிப் பற்றும், பரதனுக்கு இராமப் பற்றும், சூர்ப்பனகைக்குக் காதலும், இலக்குவனுக்குத் தொண்டும், வீடணனுக்கு அரசு வேட்கையும், மேகநாதனுக்கு மாயையும் என்று இவ்வாறு வரும் பாத்திரங்களின் பொருளெல்லாம் ஒன்றிப் பிணைந்த கூட்டுப் பொருளே காப்பியப் பொருளாம்" என்று பாடுபொருள் பற்றி அடுக்குவது அவர் தம் தனிஇயல்பை நினைவூட்டுகிறது. எதனையும் முழுமையாய்ப் பார்த்து, அலசி ஆராய்ந்து, தொகுத்து நிரல் படச் சொல்லுமியல்பு இது.

மாணிக்கத் தமிழின் தனி இயல்புகளுள் முதன்மையானது இது என்பதலாயே, இவை எடுத்துக்காட்டப் படுகின்றன. எதனையும் அடுக்கி அழகுபடக் கூறுவதால் அவரது முழுமைப் பார்வையும் ஆழப் புலமையும் அதிற் புலப்படும். கம்பர் 'மொழி பெயர்ப்புக் காப்பியத்தை மொழிப் பிறப்புக் காப்பியமாகவே உருவாக்கி அருளிய திறம்' என விளக்கி வருமிடத்தில், தமிழ் தமிழகம் பற்றிய கம்பரின் பற்றுதலை ஓர் அடுக்கில் எடுத்துத் தருகிறார். "முத்தமிழ்த் துறையின் முறைபோகிய உத்தமக் கவிகட்கு ஒன்று உணர்த்துவென்" என்னும்போது தமிழன்பும், "வண்டு தமிழ்ப் பாட்டிசைக்கும் தாமரையே" என்னும் போது தமிழ் என்ற சொல்லின் பற்றும், "சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவரி" என்னும்போது பழஞ் சங்கப் புலவர்பால் ஈடுபாடும், "காவிரி நாடன்ன கழனி நாடு" என்னும் போது நாட்டன்பும், "முல்லையைக் குறிஞ்சியாக்கி மருதத்தை முல்லையாக்கி" என்னும்போது தமிழ்க் காட்சியும், "சடையன் வெண்ணெய் நல்லூர் வயின்

தந்ததே" என்னும்போது தமிழ்ப் பிறப்பும் இவ்வாறே தமிழ் மக்களின் அக வழக்கங்களும் புறப் பழக்கங்களும் இராமாயணக் காப்பியத்து மலிந்து கிடக்கின்றன." இந் நடையால், ஒரு கட்டுரை விரிவு ஒரு பத்திச் சுருக்கமாய்ச் செறிவுடன் திகழ்வதை நினைத்துப் பார்க்கவேண்டும். *(க.52)*

## அடுக்கு நடை

செய்திகளை அடுக்கிக் கூறுவது மட்டுமன்றி, நடையே அடுக்காய் மாறி முடிவதையும் பல இடங்களிற் காணலாம். அங்கு கருத்தைவிட அழகுக்கு இடமளிக்க ஆசான் விழைவது புலனாகிறது. தொல்காப்பியம் இலக்கியம் போல நயம் பலவுடையது என்று விளக்க வரும் இடம் இது. "எதுகை மோனை முதலான தொடைநயம், சொன்னயம், தொடர்நயம், உவமைநயம், உணர்ச்சிநயம், காலங்கடந்த உண்மைநயம் காதலும் வீரமும் கூறும் பொருள் நயம் என நன்னயம் பல செறிந்த இந்நூல் எல்லா மாந்தர்க்கும் வேண்டிய வாழ்க்கை நயம் உடையது.'' இங்ஙனம் தொல்காப்பியத்தை ஆராயலாம் என்ற குறிப்புடைய இந் நடையில் அடுக்கு நயமுளது காண்க. *(தொ. 269)*

"உவமை நயம், சொன்னயம், பொருள்நயம், மெய்ப்பாட்டு நயம், இலக்கண நயம், குறிப்பு நயம், தொடை நயம், ஒப்புமை நயம் என்ற பல்வகை நூல் நயம் காட்டும் நோக்கொடு திருக்குறள் நடை பற்றிப் பேசக் கூடும் எனச் சுட்டித் தமது நோக்கம் அதுவன்று என்பார். *(வ. 282)* மானிடப் பிறப்பு உடற்குறையுடையதெனினும் இகழற்பாற்றன்று. "கண்ணறை, செவியறை, வாயறை, மூக்கறை, காலறை, கையறை, அளவறை என்று இன்ன உடலறையாளர் 'வாழ்க்கை இழந்தவர்தாம்' எனக் கருதுவது மானிடப் பிறப்பையே அவமதிப்பது ஆகும்." *(வ. 149)* இவற்றை ஒத்தன மேலும் பலவுள.

"துன்பம் இல்லாதாருக்கு மனவேகம் இராது; மன வேகம் இல்லாதாருக்கு அறிவோட்டம் இராது;

அறிவோட்டம் இல்லாதார்க்கு உயிரோட்டம் இராது". இது போன்ற தொடர் அடுக்குகளிலும் அவருக்கு ஆர்வமுண்டு. (ச. 55) "ஆழ்ந்து அகன்று நுணுகிக் காணும் அறிவுடையார்க்குத் தொல்காப்பியப் பொருளதிகாரம் ஆசிரியப் பாவால் இயன்ற திருக்குறளாகக் காட்சியளிக்கும்; வரலாற்றுப் பெயரில்லாத புறநானூறாகத் தோன்றும்; கதை மாந்தர் இல்லாத சிலப்பதிகாரம் போல ஒலிக்கும்." இங்ஙனம் நுழைபுலம் காட்டும் அடுக்குகளும் பலவுள. (தொ. 71)

சிலபோது சொல்லவந்த கருத்தை, நிரல்நிறைப் படுத்தி அழகுபடுத்திவிடுவார்.

"நீரால் விளைவு உண்டாமோ? நூல் நிலையத்தால் அறிவுண்டாமோ? உண்டாம் என்று சொல்லும் உலகோரின் கருத்து என்னை? விளைவு வேண்டின், நீரினை வயலுக்குப் பாய்ச்சவேண்டும். அறிவு வேண்டின், நிறைய நூலைக் கற்கவேண்டும். செலுத்தா நீர்த்தேக்கத்தால், கல்லா நூற்றொகுதியால், எப்பொருளும் தன் இருப்பளவால் பயன் ஊட்டாது" (வ. 57). துய்த்தலும் கொடுத்தலுமில்லாத நன்றியில் செல்வத்தாற் பயனில்லை என்பதை, இந்நிரல் நடை தெளிவுபடுத்துகிறது.

பசியின் கொடுமையை வள்ளுவவழி விளக்குவதைக் காண்க. "வாழ்வுக்கு முதலெனத் தகும் இவ்வுயிர்மெய், 'இளிவரின் வாழாத மானமுடையார் (970) நாணால் உயிரைத் துறப்பர்' (1017), 'தன்னுயிர் நீப்பினும் செய்யற்க' (327), 'புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின்' (780), 'இழைத்தது இகவாமைச் சாவாரை' (779), 'ஒழுக்கம் உயிரினும் ஓம்பப் படும்' (131) என மானத்துக்கும் நாணத்துக்கும் அருளுக்கும், செய்ந்நன்றிக்கும், கொள்கைக்கும், ஒழுக்கத்துக்கும் இன்ன பிற குணவுயர்வுக்கும் துறக்கத்தகுவதன்றி, ஐயகோ, பசிவாய்ப் பட்டுத் தொலைக்கத் தகுவதோ?" (வ. 125) நின்று நினைந்து படிக்க வைக்கும் நிரல் இது. படிப்பவனைச் சற்றே நிறுத்தினாலும், நயமுடைமையால், நெஞ்சை

ஈர்க்கும் நடைகள் இவை; செறிவு மிகுதியெனினும் அரவணைக்கும் கனிவு தவழ்ந்து வருவன இவை; கற்பவனைக் கைதூக்கி, மேலெழ வைக்க முயலுமிவை சுவைக்கலப்பால் மனக்கலப்பிற்கு வழிவகுப்பன.

**உவமை நடை**

அரிய கருத்து விளக்கங்கட்குத் தெளிவும் சுவையும் பயக்குமாறு இடையிடையே அன்றாடம் பழக்கப்பட்ட செய்திகளை உவமை சொல்வது இவரது இயல்பாகும். இதனால் உவமையே பா வடிவமாகிவிடும் சங்கப்பாடல் போல, இவரிடம் உவமை நடை ஒன்று அமையக் காணலாம்.

காப்பியம் படைப்பவன் உலகச் சூழலைப் பின்புலம் ஆக்கும் கடப்பாடுடையவன். அவன் வெறுங் கதை மட்டும் கூறுபவன் அல்லன். சிறு பாடல்களை எழுதுவார்க்கு இத்துணை விரிக்கவேண்டிய அவசியமிராது எனச் சுட்ட வந்தவர், "கீரை விதைப்பவன் பெருங்குழி தோண்டான்; நீர் விசை வைத்துத் தண்ணீர் பாய்ச்சான்" எனக் கூறி முடிப்பார். (க. 43) காப்பியம் பெரிய தோப்பும் தோட்டமும் வைப்பது போல்வதாகலின், அதைப் படைப்பவர்க்கு அவை இரண்டும் தேவைப்படத்தானே செய்யும் என்பதை நீட்டி முழக்காமல், சுருக்கி மொழியும் நடையிது.

'மனத்துக்கண் மாசிலன் ஆதல்' என்ற குறட்கருத்தை விளக்க வருகிறார் இம் மூதறிஞர். அறத்தில் புறவெளிப்பாடு கள் எவ்வாறு இருப்பினும் மனமாகிய மூலம் தூய்மையாக இருக்கவேண்டும். எதுபோல? "குளத்து நீரை ஒருவர் கையால் அள்ளிக் குடிப்பர், ஒருவர் குவளையில் மொண்டு குடிப்பர், ஒருவர் குழாய் வழிக் குடிப்பர், ஒருவர் குளிரகத்து வைத்துக் குளிரக் குடிப்பர், வாய் வைத்துக் குடிப்பர், ஒரு மொடுக்கில் குடித்து விடுவர். குடிமுறை எதுவாக இருந்தாலும், முதற்கண் நீரிடமும் நீரும் தூய்மையாக இருத்தல் வேண்டும்." அடுக்கிக் கூறும் இயல்புடன்,

அறத்தின் வெளிப்பாடுகளை உவமை வடிவில் கூறுமிது சுவையாக உளதன்றோ?

தலைவியின் கற்பை - பொறுமையை வெளிப்படுத்த வென்று, தலைவனின் பரத்தைமை ஒழுக்கம் புனையப் படுவதில்லை. இவள் ஊடல் கொள்ள வேண்டுமென்றா அவன் பரத்தை வீடு போகின்றான்? அல்லது அவனது இச் செயலை வைத்துத்தான் தலைவி ஊடுகிறாளா? இரண்டுமே 'தனித்தனி இயல்புகள்; சமுதாய நடக்கைகள்' என விளக்க வந்தவர், 'கப்பல் ஓட்டவோ கடல் கிடப்பது? பயிர் தழைக்கவோ மழை பொழிவது? பரத்தைமை பொறுக்கவோ கற்பாயிருப்பது?" என எடுத்துக்காட்டுவமை போலச் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பார்.

**உருவக நடை**

ஆராய்ச்சி மேற்கொண்ட தமிழ்ப் பெரும் புலவோர் பலரும், தமக்குப் படைக்குமாற்றலிருந்தும் சிறந்த இலக்கியப் படைப்புக்களைத் தருவதில் கருத்துச் செலுத்தாது போயினர். அதனால் இற்றைப் புதிய படைப்பிலக்கியத்தில் அவர் பங்கு குறைந்துபோய், "ஈங்கிவற்றில் ஏதுமிலார் தமிழினிலே ஏடெழுதிப் பிழைக்க வந்தார்" எனப் பாவேந்தன் பாரதிதாசன் மொழிந்தது போல், தமிழ் மொழியிலோ, தமிழ் இலக்கியத்திலோ அடிப்படையறிவு மயிரிழையளவுமில்லாதாரும் கலை நுட்பம் அறியாதாரும் புத்திலக்கியப் பெரும் படைப்பாளி களாகித் தமிழ்ப் புத்திலக்கியம் ஒருசார் புற்றிலக்கியம் ஆகிப் போனது. நசிவிலக்கியம் தலைதூக்க, நல்லிலக்கியம் அரிதாகிவிட்டது.

புதிய படைப்புக் கலையில் மொழியறிவும் தேவை என்பதைப் பலர் ஒப்புவதே இல்லை. கல்லில் சிற்பம் வடிப்பவனுக்குக் கல்லின் தரமும் உளியின் கூர்மையும் பார்க்க வேண்டுமென்ற நினைவுளது; அவற்றைப் பேணிப் பயன்படுத்தும் திறமும் உளது. மண்ணை வெட்டித்

தோண்டுபவன் கூட மண்வெட்டியைச் சரிபார்த்துக் கொள்கின்றான். இலக்கியக் கலை நுண்கலைகளுட் சிறந்த நுண்கலை. அது பயன்படுத்தும் மொழியோ, அறிவு வடிவான சீரிய கூரிய செவ்வியதொரு கருவி. ஆனால் ஒருவரைப் பார்த்து ஒருவர் படைக்கும் பழக்கம் ஒன்றே போதுமென எண்ணும், தமிழ்ப் படைப்பாளிகள் மொழி இலக்கியம் பற்றிய சிறு சிந்தனை கூடத் தவறென எண்ணி யொழிகின்றனர். 'பண்டித நடை, பண்டித நடை' என்று கேலி பேசியே தம் தலையில் தாமே மண்ணை வாரிப் போட்டுக் கொள்கின்றனர்.

எதிர்காலத்திலேனும், தமிழ்ப் புலவர்கள், ஆய்வினும் படைப்புக்கு மிகு முக்கியத்துவம் தந்து, அக்கலையில் ஈடுபட வேண்டும்.

செம்மல் வ.சுப. மாணிக்கனார் மிகச் சிறந்த பாவலருமாவார் என்பதை, அவர்தம் கொடை விளக்கும், மாமலர்களும் காலமெல்லாம் பறைசாற்றும். இத்தகைய கவி புனை பேராற்றலும் கற்பனைப் பெருந்திறனும் மூதறிஞரிடம் உள்ளடங்கியிருந்தாலும், அவர்தம் உரை நடையில் இடையிடை அக்கூறுகள் வெளிப்பட்டுச் சுவைதரக் காண்கின்றோம். அவற்றுள் கருத்தை உருவகமாகக் கூறிச் செல்வதில் அவர் காட்டும் பேரார்வம் அவ்வப்போது புதுமை பொலிய வெளிப்படும். புலவர்களை வறுமை வாட்டும்போது அவ்வறுமை சிறந்த கவிதைகளை வெளிப்படுத்தி விடுவதுண்டு. "தமிழிலக்கிய வுலகில் வறுமைத்தாய் கருக்கொண்டவுடனே ஈன்று புறம் விட்ட செய்யுட் குழவிகள் பலப்பல" என இதை அவர் உருவக அழகுபடச் சொல்வார். *(க. 176)* "மொழி என்பது நினைவும் அறிவும் ஆய காதலர்கள் பெற்று விடுத்த நாகரிகக் குழவி'' என்னும் போதும் இவ்வழகைக் காணலாம். *(வ. 334)*

"மொழி என்னும் கட்டிடத்துக்கு இலக்கணம் அடித் தளம் என்றால், காப்பியங்கள் தூண்கள் என்றால், நாடக

நூல்கள் மேன்மாடங்கள் என்றால், நாடோடிப் பாடல்கள் காற்று வரும் காலதர்கள் என்றால், தனிப் பாடல்கள் படிக்கட்டுகள்" என்று, தனிப்பாடல்களின் இன்றியமை யாமையுணர்த்த வந்தவர் மொழி மாளிகையையே முன்னிறுத்திக் காட்டுகின்றார்.

பிறர் நலன் கருதித் தன்னைத் தியாகம் செய்துகொள் பவன் புகழ் பெறுகின்றான். கோவலனுக்கு அப்புகழ் உண்டு. இதனை உணர்த்த வந்தவர், "யாரும் ஒப்புக் கொள்ளத்தக்க இலக்கணப்படி, தற்பலி செய்த இலக்கியப் பெருமக்கள் பலர், தமிழ்ச் சோலையில் சொல் மலரிலிருந்து பரவும் புகழ் மணத்தை மோந்து நீடுவாழ்வதை நாம் கல்விக் கண்ணால் காண்கிறோம்'' என முற்றுருவகமாக்கிக் காட்டப் பார்க்கிறோம். (கா. 106)

இத்தகைய இடங்கள் இவர் நூல்கள் அனைத்திலும் மிகப் பலவுள. காலமும் இடமும் கருதி ஒருசில மட்டுமே காட்டப்படுகின்றன.

முழுமைப் பார்வை, அடுக்குநடை, உருவகம் என இவரது ஆர்வப் பண்புகட்கு ஏற்ப, இவை தனித்தனியே மட்டுமன்றி ஒன்றிரண்டாய்க் கலந்துவரும் நடையழகு களையும் ஆங்காங்குக் காணலாம். 'வள்ளுவத்தில்' ஓரிடம்; குடும்பச் சிறப்பை உணர்த்த வருகிறார்.

> "குடும்பம் என்பது ஆண் பெண்ணாகிய குடியானவர் மக்கட்பயிர் விதைத்து வளர்க்கும் மனைவயல்; குழந்தை மழலை ஒலிக்கும் இன்பக்காடு. சமூகம் கொந்தளித்து மோதும் துன்பக் குன்று; செயலெல் லாம் நினைவெல்லாம் ஓடிவிழும் பற்றுக்கடல்; அன்பு நீரற்ற காலை சினப்பாலை.
>
> குடும்பம் என்பது உலகத்துப் பலர் எண்ணமெலாம் சிறு பேரலையாக வந்து தாக்கும் மண் தீவு; சமூக வழக்கும் புத்தறிவும் பூசலிடும் போர்க்களம்; அரசு காக்கும் நுண்வேர்; நாட்டின் எந்நிலையும் காட்டும்

அறிவுக் கண்ணாடி; முயல்க முயல்க என்று தூண்டும் முள்ளிருக்கை; அச்சமில் ஒழுக்க நிலையம்." (வ. 203)

வள்ளுவப் பேராசானைப் பழுதறப் பயின்ற இம் மூதறிஞர், குடும்ப உருவகங்களாகத் தரும் இவை ஒவ்வொன்றும் தனித்தனிக் கட்டுரைத் தலைப்புக்க ளாதற்குக் தகுதியுடையதாதலை நினைத்துப் பாருங்கள்! அடுக்கும் உருவகமும் இணைந்த நடை இது.

நடைச்செறிவு, கருத்துச் செறிவையே விழையும் இவர்க்கு இவ்வுருவக நடை கை கொடுத்து உதவுகிறது.

## சொல் நய நடை

கருத்துக்களின் வலிமை புலவனது கல்வியின் வலிமையைப் பொறுத்துளது. உள்ளத்தில் ஒளியுண்டாகின் வாக்கினிலே ஒளியுண்டாகுமென்பது பாரதியம். பழுதற முழுமை பெறுமாறு கற்றுப் பின்பு எழுத முற்படுவானுக்குத் தான் எழுதப்போகும் முழுக் கட்டுரையும் - முழு நூலும் வீட்டுமனை வரைபடம் போல் நெஞ்சில் உருவாகி விடும். பின்பு அவன் அதைப் புறத்தே எழுத்தில் பதிவு செய்கிறான். அவ்வளவே!

செம்மல் மாணிக்கனாரின் எழுத்தில் செப்பமும், செறிவும் படிந்து கிடப்பன. அவை நன்கு சிந்தனையில் ஊறி, தேனில் கிடந்தூறிய இஞ்சித்துண்டு போல, நறுக்காக ஒவ்வொரு பத்தியிலும் - ஏன் ஒவ்வொரு தொடரிலும் கூட நயந்தோன்ற வெளிப்படுவன. சிலபோது ஒவ்வொரு வாக்கியமும் சொல் நயமோ, எதுகைமோனைத் தொடை நயமோ வாய்த்த ஆத்திசூடி, கொன்றைவேந்தன் போல நிலைபெறுமாறு வெளிப்படுவன. சிலவற்றைப் பழமொழி போல், தனியே பார்த்துப் படித்து மகிழ்தலும் கூடும்.

கம்பருக்குத் தற்குறிப்பேற்றமாகவும் கவிக்கூற்றாகவும் காப்பியத்திடையே கற்பனையுருக் காட்டுவதில் பெரு விருப்பமுண்டு. கவிக்கூற்றின் சிறப்புணர்த்த வந்த, இத்

தமிழ்க் காதலர், "கவிக் கூற்று இல்லாத காவியம் கவிக்குக் கூற்றான காவியமாகிவிடும்" என முடிப்பர். (கா. 167)

தூதுபோன அனுமன் தூங்கிக் கொண்டிருந்த இராவணன் பக்கம் போய், அந்நிலையில் அவனைக் கொன்றுவிடலாமா என்று எண்ணுகின்றான். தாக்குவதற்கு இரு கைகளையும் பிசைந்து கொல்வதென்று முடிவு செய்து பக்கத்தில் போய் விட்டான். இச் சூழலில், "மெய்ப்பாடுகள் முடிந்துவிட்டன. இனிச் செய்யவேண்டியது இராவணன் மெய்யைப் படுத்தலே," என்பார். இத்தகு சொல்நய நடையில் இப் பேராசானுக்குப் பற்றும் கூடுதல் பயிற்சியும் மிகுதி. இவர்தம் எழுத்தில் முத்தாய்ப்பான இடங்களி லெல்லாம் இம்முத்துத் தொடர்கள் வந்தமையக் காணலாம்.

சமயக் காப்பியங்கள் மனிதப் பிறப்பை ஒரேயடியாக மறுப்பது முறையாகாது. "மனித இயல்பிற்கும் உயிர்ப் பற்றுக்கும் மாறாக முடிக்கும் காப்பியம் ஒட்டாதது மாத்திரமன்று; நாம் வாழ்வாங்கு வாழ்வதற்கு ஒவ்வாதது மாகும்". (கா. 9) தமிழ் 'அகத்திணை' என்பது காமத்துக் காழில் கனியாகும்; மலரினும் மெல்லிய செவ்வியுடைய தாகும். நிலையாமை, இறப்பு முதலிய கையறு நிலைகள் புறத்திணையாகுமேயன்றி அகத்தில் இடம் பெறா. இதை "அகத்திணை காமத் திணையேயன்றிக் கவலைத் திணையன்று" எனச் சூத்திரம் போறச் சுருங்கச் சொல்லும் தமிழ்க்காதல். (282)

தொல்காப்பிய உரையாசிரியர்களின் பணிபற்றி விளக்கி வரும் இடம் ஒன்று.

"செய்யுட்களைப் பிரித்துப் படிக்கக்கூட வல்லாதபடி, நற்றமிழரிடை தமிழ் என்ற ஒன்று வளர்ந்து வரும் இந் நாளில், உரையாசிரியர்கள் ஒதுக்கிடம் பெறுதல் இறும்பூ தன்று; ஒழிவிடம் பெறவில்லை என்பது மகிழ்ச்சிக்கு உரியது." அதாவது நம்மனோர் இன்று இவ்வுரையாசிரியர்

களை, அடியோடு ஒழித்துவிடவில்லை; சற்றே ஒதுக்கி வைத்துள்ளனர். அவ்வளவே, இது மகிழ்ச்சிக்குரியதே என்பதை நயந் தோன்றும் நடைப்படுத்தியிருப்பது காண்க. (தொ. 23)

இன்று கண்ட கண்டவாறு ஆய்த எழுத்துப் பயன் படுத்தப்படுவதை நகையாடுமிடத்தில், "சுருங்கச் சொல்லின் இன்றைய ஆய்தப்போக்கு வயிற்றுப்போக்குப் போல் இருக்கிறதேயன்றி ஓரெல்லையில் நிற்கும் வரம்புப் போக்காகத் தோன்றவில்லை" எனக் கூறிச் சான்று காட்டுவர் இச்சான்றோர். (தொ. 102)

சொல்லாக்கத்தில் பெருவிருப்பமும் பேராற்றலும் படைத்திருந்த இப்பெருமகனுக்கு, சொல் நயத்திலும் காதல் இருந்தது வியப்பன்று. சொற்செல்வத்தையே மொழியின் பெருஞ்செல்வமாகக் கருதிய இவர், அச்சொற்களை இடம் பார்த்து விளையாட வைத்து, அம் மகிழ்ச்சியோ டிணைத்துத் தம் கருத்தைப் பசுமரத்தாணி போல் பதிவு செய்து விடுகின்றார்.

வள்ளுவர் ஆள்பார்த்து, அவர்தம் நிலைபார்த்துத் தனித்தனியே படிநிலையறம், பலநிலையறம் கூறியவர் என்பது இவர் கருத்து. "உடலறிஞன் ஆள்தோறும் கைந்நாடி பார்த்து மருந்தளித்து உடல்நலம் செய்யுமாப் போலே, உள்ளத்தறிஞராகிய வள்ளுவரும் ஆள்தோறும் மனநாடி பார்த்து, நிலைக்கேற்ற அறங்கூறி, அகத்தூய்மை செய்பவர்" என்று இருவகை நாடி காட்டி இது விளக்கப்படும்பொழுது, நயங்காட்டி மனத்தில் பதிவிக்கும் நல்லுள்ளம் புலனாகிற தன்றோ?

## மணிமொழித் தொடர்கள்

மாணிக்கத் தமிழில் மாணிக்கம் பயன்படுத்தும் மாணிக்க மொழிகளும் இதுபோல் மிகப் பலவாகும். அவை ஒவ்வொன்றும் சூல் முதிர்ந்த தாய்போலச் சிந்தனைக் குழவியீனும் திறத்தன.

பழங்கால மன்னர்கள் போர்க்காலப் பாசறைகட்கு, மகளிரை அழைத்துச் சென்றனரா? சென்றனராயின் எது கருதி? - என்பது ஒரு சிக்கல் வினா. ''ஆதலின் பாசறைக்கண் போர்க்காதல் இருக்கவேண்டுமேயன்றிப் புணர்காதலுக்கு இடமோ வாய்ப்போ இருக்கலாகாது'' என்பது இவர்தம் ஆய்வுவிடை. *(தொ. 199)*

''மொழியின் நோக்கம் கருத்துப் பரிமாறிக் கொள்வதன்று, காரியம் பரிமாறிக் கொள்வது.'' *(தி. 31)*

வள்ளுவத்தில் இதுபோன்ற மணிமொழித் தொடர்கள் நிரம்பவுள.

''வள்ளுவம் என்பது வினையறுப்பு அன்று; அவாவறுப்பு.'' *(303)*

"இறையதிகாரம் கேவலம் உலக முதல்வனை விரிக்க வந்ததன்று காண்; உலகத்துட் பிறந்திருக்கும் மக்களுயிரின் முதல்வனாகப் பிரிக்க வந்தது." *(299)*

"ஊடாப் புணர்வால் இன்பம் குறையும்; புணரா ஊடலால் அன்பு குறையும்." *(210)*

''பிறரை நன்கு மதியாது தன்னையே மதித்துக் கொள்வது புன்மை நோக்கம். பிறரையே மதித்துத் தன்னை மதியாமை வாழா நோக்கம். பிறரையும் தன்னையும் மதிப்பது அறிவு நோக்கம்." *(203)*

இங்ஙனம் தொட்ட இடம், விட்ட இடமெல்லாம் நயத் தொடராக, மணிமொழியாக, விரித்தெழுதத் தக்க சிந்தனைத் தொடர்களை; அறுதியிட்டு முடிவு கூறும் அறிவுத் தொடர்களை ஆள்வது மாணிக்கத் தமிழின் மாண்பாகும்.

## எதுகைத் தொடர்கள்

எல்லோரும் எழுதுவதுபோல் எழுதுவது ஒரு வகை. தனக்கென ஒரு திட்டமிட்ட நடையை மேற்கொள்வது ஒரு

வகை. முன்னவர் கருத்தாளர் எனப் பெயர் பெறுவதில் அழுத்தம் வைத்தால், பின்னவர் தாம் ஒரு நடையாளர் என வெளிப்படுவதிலும் விருப்பமுள்ளவர் என்றாகும்.

இலக்கியம் ‘திட்டமிடுவதால்’ பிறக்கிறது என்பர், ஆங்கிலத் திறனிகள். எல்லோரும் சொல்வதைத்தான் இலக்கியக் கலைஞனும் சொல்கின்றான். ஆனால் சிறிது திட்டமிட்டுச் சொல்கின்றான். சாதாரணமானதை மாற்றித் திருத்தி மறுகோலம் செய்கிறான். நம்மை ‘நில் கவனி அசை போட்டுச் செல்’ என்று சற்றே தடுத்து நிறுத்தி விடுகிறான்.

எல்லோருக்கும் தெரிந்ததை அவ்வாறே மாற்றமின்றிச் சொல்லிப் போகின்றவன் ஒன்று செய்தியாளனாக இருப்பான்; அல்லது அறிவியல் அறிஞனாக இருப்பான். அவன் சிந்தனையாளனாகவும் இருத்தல் கூடும்; குறையின்று.

இலக்கியக் கலைஞன் சற்றே நினைக்க வைக்கும் போக்கில், நிற்க வைத்து விடுவதால் நாம் கூற்றை மட்டுமன்று, கூறியவனையும் திரும்பிப் பார்க்கவேண்டியிருக்கிறது. ‘நினைத்தேன் வந்தாய் நூறு வயது’ என்னும் போது தொடரழகையும் ‘பாலும் பழமும் கைகளில் ஏந்தி, பவளவாயில் புன்னகை சிந்தி, கோல மயில்போல் நீ வருவாயே!’ என்னும் போது தொடையழகையும் “மண மகளே மணமகளே வாவா, வலது காலை எடுத்து வைத்து வாவா, குலமகளே குலமகளே வாவா, எங்கள் கோயில் வாசல் திறந்து வைத்தோம் வாவா!’ என்னும் போது கருத்துடன் கூடிய கற்பனையழகையும், திரும்பிப் பார்க்க வைக்க வில்லையா? பாடியவர் கண்ணதாசன் என நினைக்க வைக்க வில்லையா? அற்புதமோ, அழகோ தென்பட்டால் மனிதன் என்ன செய்கின்றான்? திரும்பத் திரும்பப் பார்க்க வைப்பது, இரசிக்க வைப்பதுதான் கலையழகு; கவிதை யழகு. எந்தப் புறவழகுமின்றிச் ‘செய்யாக் கோலம்’ என்பதற்கொப்பச் ‘சிந்தனை யழகோடு’ கூறப்படுவனவும், ஒப்பற்ற கலையழகே யாம்! ‘ஒன்றே

குலமும் ஒருவனே தேவனும்', 'யாதும் ஊரே யாவரும் கேளிர்', 'எதையும் தாங்கும் இதயம் வேண்டும்' - எத்தனை பேர் எத்தனை முறை சொல்லியும் எழுதியும் பார்க்கின்றனர்!

கலையழகு வேண்டுமென நடையழகு காட்ட விழைபவர், சிறப்பாக 'நன்னடையாளர்' ஆகின்றனர். வ.சுப. மாணிக்கனாரின் மாணிக்கத் தமிழ் தனக்கென உரித்தாகக் கொண்ட நடையழகுகள் பலவற்றை உள்ளடக்கியது. 'திட்டமிட்டுச் சொல்லும் கலையழகு' அவர் நடையிலுளது.

'கொன்றை வேந்தனைப் போல்' எதுகை, மோனைத் தொடை நலன்கள் பொருந்த, யாக்கப்பட்ட தொடர்கள் பல இவா உரைநடையில் விரவி வரும். தொல்காப்பியம், சங்கப்பனுவல்கள் செந்தமிழ் நடையால் இயன்றனவாதலின் இன்றும் விளங்குகின்றன. "அவை பிறப்பாற் காலப் பழமை படிந்தனவேயன்றி, மொழி நடையால் இன்றும் சாலப் புதுமை தவழ்வன". (தி. 12) காலப் பழமையும் சாலப் புதுமையும் என்ற எதுகைத் தொடையழகு, இக் கருத்தை நினைவில் நிறுத்தவல்லது; சுவை காரணமாக எளிதில் மனத்தில் புகவல்லது.

பாடுவார் முத்தப்பர் பழங்கதைகளைப் புதுமை பொருந்தத் தம் பாடல்களில் எடுத்தாள்வார். இதனால் அவரைப் பற்றிச் சிறப்பித்தெழுதி முடிக்கும்போது, "முத்தப்பர் பாடுவார் மட்டுமல்லர்; கதைகளின் நுட்பங்களை நாடுவார் என்றும் கண்டு போற்றுகின்றோம்." என்று அழகுபட மொழியக் காண்கின்றோம். (இ. 182). தாயுமானவர் தம் நெஞ்சோடு சினப்பதைக் கூறும்பொழுது, "தாயுமானவர்க்கு எழுந்த சினம் தவச்சினமேயன்றி அவச்சினம் அன்று' என மொழிவார் இப் பேராசான். (இ. 152)

உரையாசிரியர் மூலத்தில் கை வைக்கக் கூடாது. சூத்திரங்களையோ, மூலநூற்பகுதிகளையோ தத்தம்

சிந்தனைக்கேற்ப இடம் மாற்றல், திருத்துதல் கூடாது. அது உரை நெறியன்று. ''இம்முறைதான் முறையென்று முன்னோர் எழுதிய நூலைத் தத்தம் நோக்கிற் பின்பற்றினால் புரிநூல் பிரிநூலாகிப்போம்'. (தொ. 290) புரியும் நூல், சிக்குண்டு புரி பிரிந்த நூல்போலாகி விடும்!

இளங்கோவடிகளின் அரசியலறிவை வியக்குமிடம்.

பொதுவாக அரசியலறிஞருக்கு நாட்டுப்பற்றுத் தேவை என வற்புறுத்த முயல்கிறார். "அவனுடைய அறிவிலும் பொழிவிலும் நாட்டின் நாடி ஓடவேண்டும். நாட்டு நாடி ஓடாத அறிவு நாடிகள் நாட்டுக் கேடிகளாக மாறத் தயங்கார்". இங்ஙனம் எதுகை மோனைகள்பட எழுதுவதிலுள்ள விருப்பத்தால் அவை இயல்பாக வந்து விழுகின்றன. அல்லாமல் செயற்கைத் தன்மைபடச் சுவை ஒன்றே கருதி அவற்றைப் புகுத்தும் பழக்கம் அறவே இல்லை.

## முரண் தொடைத்தொடர்கள்

பலபோது முரண் தொடையாக அமைந்து இன்பம் பயப்பதும் இவர்தம் நடையழகில் உண்டு.

ஆபுத்திரன் "தான் விடாப் பட்டினியொடு உயிர் விட்டதை'' அறிந்த அறவணவடிகள் ''அழிவில் கொள்கைக்கு அழிந்த" ஆபுத்திரன் எனப் போற்றியதாகக் கூறும்போது, முரண்தொடை நயம், இயல்பாக அமைகிறது.

"பகைவர் பகைவராயே இருப்பின் சிறிதும் விட்டுக் கொடான்; பகைவர் பணிந்து இரவலராய் வரின் எதனையும் கொடாது விடான் தமிழ்வள்ளல்" என்று சங்க காலத்தவர் தம் ஈகம் போற்றப்படுகிறது. (கா. 115)

கலைஞரின் உரைநடைச் சிலப்பதிகாரத்தில் கதை மாற்றங்கள் பற்றி ஒப்பிட்டு வருகையில், "இளங்கோ மேற் கொண்ட கட்டுமானப் பொருள்கள் கலைஞர் நாடகத்து

வெட்டுமானப் பொருள்கள்" ஆகிவிடுதலை விளக்குகின்றார். *(கா. 221)*

"காமமாவது ஒரு மனநிலை; விரும்பினோரை அது விடாது; வெறுத்தோரை அது தொடாது" என்று பாங்கன் தலைவனுக்கு இடித்துரைக்கின்றான். *(த.கா. 54)*

பாரியை மூவேந்தரும் 'வஞ்சித்துக்' கொன்றதாக வரும் உரைகாரர் குறிப்பை மறுக்குமிடம். "பாரி பொருது மாய்ந்து வாராச் சேட்புலம் படர்ந்தான் என்று கொள்வோமாக. 'வஞ்சித்துக் கொன்றமையின்' என்ற உரைகாரர் குறிப்பை எவ்வகை மூலமும் இன்மையின் கொள்ளேமாக" என்று முடிக்கின்றார் இப் பேராசான். முரண் தொடையை உரை நடையிலும் அமைக்கலாம். அதை மேன்மேலும் புதுமையாகவும் படைக்கலாம் என்பதற்கு மாணிக்கத் தமிழ் நல்ல ஆய்வுக்களமாகும்.

## அடுக்குத் தொடர்

இலக்கணத்தில் பாம்பு பாம்பு, தீதீ என்று அடுக்குத் தொடருக்கு எடுத்துக்காட்டி அலுத்துப்போனோம். கொண்ட கருத்தில் தெளிவும் உறுதியும் கொண்ட இம் மூதறிஞர் தாம் கூறவந்ததை அடித்துக் கூற நினைக்கும் பொழுது, மிக இயல்பாக அடுக்குத்தொடர்ப் படுத்தி விடுகிறார்.

"இளமை சிறந்ததாயினும் அது சிறக்கச் செல்வம் வேண்டும், வேண்டும்." *(த. கா. 258)*

"அஃறிணைப் பிணையல்களைக் காணும்போது, அவற்றின் புணரொலிகளைக் கேட்கும்போது, இளம் உள்ளங்கள் பாலுணர்வை எண்ணும், எண்ணும்." *(த.கா. 213)*

"வள்ளுவர் தனிப் பொதுநெஞ்சம் செயல்செயல் செயலேயாகும்." *(வ. 28)*

"ஆசான்தன் இறைக்கோள் முதலா எக்கோளும் தூய செயற்கோள் உடையன என்ற நிலைக்களத்தைப் பொச்சாவாதீர்! பொச்சாவாதீர்!" *(வ. 298)*

இதுபோல் அழுத்தி மொழிய எண்ணுமிடங்களில், அடுக்குத் தொடராய் முடித்து, நெஞ்சில் நிறுத்த முயல்வதிவர் இயல்பு.

## வழக்கு நடை

உலக வழக்கிற் பேசிக்கொள்வது போல் அமையும் தமிழ் இலக்கியப் பாங்கு இன்றும் பலரால் கண்டு கொள்ளப் படவில்லை. மணிமேகலைத் திறனை ஆராயுங்கால் இப் பேராசான் கதை சொல்வதுபோல் பேசும் பாங்கு, நினைத்து நினைத்துப் பேசும் பாங்கு இரண்டும் அக்காப்பியத்தில் அமைந்திருப்பதைக் காட்டுவார். சங்கப் பாடல்களின் கூற்றுக்கள், உலகியற் பேச்சு நடையின. அக்காலச் செந்தமிழ் நடையாதலின், பலர் கண்டு கொண்டிலர்.

வழக்கு நடையிலும் ஈடுபாடுண்மையைச் சில காட்டுகளால் அறியலாம்.

"இந் நிலையினளே காமஞ்சாலா இள்மையோள். அவள் தன்பாட்டுக்குப் போவதும் வருவதும் செய்வதும் செய்கின்றாள். இவனாக ஒன்றை நினைத்து அவாவிக் கவல்கின்றான்." *(த.கா. 233)*

பேராசானின் இக் கைக்கிளை விளக்கப் பகுதியில், இது உலகிற் கூறுவதுபோல் அமைகிறது.

"வழிச்செல்வான் ஒருவனது மடி கனமாக இருக்கின்றது என்று வைத்துக்கொள்வோம். களவெண்ணம் உடையவன் என்னவெல்லாம் கருதுவான்?" *(த. கா. 232)*

"வயது வந்த ஒருவனுக்கும் வயது வந்த ஒருத்திக்கும் சிலர் மணம் பேசுவதாக வைத்துக்கொள்வோம். இங்ஙனம் பேசி முடித்தல் நாட்டில் பெருவழக்கு." *(த.கா. 243)*

தன் பாட்டுக்கு, வைத்துக் கொள்வோம் நடைகள் இன்றைய உலக வழக்கிற் காணப்படுவன. மிகவுயர்ந்த செவ்விய நடை பயிலும் தமிழ்க்காதலில் இந்நடையும்

இடம் பெறுதலால் இத்தகையவை செம்மைசால் நடைகளெனப் போற்றப் பெற்றமையை அறியலாம்.

"என்னை விட்டுச் சென்று விட்டால் உங்கட்கு எல்லாம் இன்பம் என்று ஊடலும் ஐயமும் படச் சீதை கோணி மொழியவே, 'பிறிதோர் மாற்றம் பெருந்தகை பேசலன்' என்று கம்பர் நாகரிகமாக இக் களத்தை முடிக்கின்றார்.' *(க. 124)*

திருமணத்தை "எட்டிய சொந்தக்காரர்கள் கூட வந்து கலந்து கொள்ளவேண்டுமென்று, எல்லார்க்கும் பொருத்தமான நாள் பார்த்து நாழிகை பார்த்து வைப்பது சமுதாய முறை." *(க. 120)*

'காப்பியம் அறுத்தோடியாகிவிடும்.' *(க. 24)* 'நெட்டையோ குட்டையோ ஒரு மூலப்பதிப்பே நாட்டிடைப் பரவுதல் வேண்டும் .' *(க. 15)*

தோழி துணையாய் இடித்துரையாவிடில், குடும்பப் பிரிவேற்பட்டுக் குழந்தைகள் கஞ்சிக்கலையும் அன்றோ?" *(ச. 117)*

"தன் கொள்கைகளை ஒத்தூதித் தன்முன் புகழ்பவனே, நன்றியுணர்வினன் எனக் கல்விக்கு உதவினோன் கருதலாமா?' *(வ. 53)*

'அடுப்பும் துடுப்புமாக இருக்கும் நிலையில் உனக்கு அள்ளிப் போடுவது யார்?" *(வ. 131)*

இவை வழக்குச் சொல் பயில்வன மட்டுமல்ல; வழக்குப் பேச்சு நடை தழுவியன. இருவழக்கு மொழியாகிய தமிழில், பேச்சு வழக்கை மதித்து அதனை உயிருள்ள வழக்காகக் கருதுமியல்பையும், அதனைச் செழுந்தமிழ் வழக்காக எடுத்தாளும் திறத்தையும் இவற்றால் அறியலாம். இதனை அறியாதார் தமிழைக் கொச்சை நடைப்படுத்து கின்றனர். வட்டார ஒலித்திரிபுகளைப் புகுத்தித் தமிழை மீண்டும் 'கன்னடமும் களிதெலுங்கும் மலையாளமும்

போல' வேறு பல மொழிகளாகச் சிதைக்க அரும்பாடு படுகின்றனர்.

செந்தமிழறிஞர்கள் வழக்குத் தமிழுக்கும் வழக்கு நடைக்கும் முரண்பட்டவர் என்ற கருத்து இதனால் அடிபட்டுப் போகிறது.

## செறிவும் சுருக்கமும்

இவர்தம் நடையில் மிக நுட்பமாகக் கருதற்பாலது, செறிவு - செறிவு கருதிய சுருக்கம் - சுருக்கியாளும் சொல்லமைப்புகள். இளைஞியர், இலக்கியர், இல்லறப் புதியர், (பாடத்திட்ட) அமைப்பிகள் என இளம்பெண்கள், இலக்கியப் படைப்பாளர், புதிதாகத் திருமணமானோர், பாடத்திட்டம் அமைப்பவர்களை முறையே சுட்டும்போது, அவ் வாக்கியங்களும் செறிவுச் சுவையுடையனவாகின்றன. ஆம். கருத்துச் செறிவும் சொற்செறிவுமே ஒரு சுவையாதலை மாணிக்கத் தமிழில் காணலாம். சங்க நடையல்லாத நடை என்பதை 'அல்சங்க நடை' எனச் சுருக்கிவிடுவார். இத்தன்மைத்தாகும் என்ற நீட்சியை 'இற்றாகும்' என முடித்து விடுவார். நிகழ்காலத்தவரும் எதிர்காலத்தவரும் என்பது, 'நிகழரும் எதிரரும்' எனச் சுருக்கம் பெறும். வரவேற்கமாட்டார் என்பதை 'வரவேலார்' என்பதுடன் சரி. 'வணக்கத்தொடு' என்பதை 'வணக்கொடு' போயினர் என்பார். அத்துச்சாரியையும் எடுப்பதால், சொல் சுருங்குவதில் உள்ள நாட்டம் புலப்படும்.

இவை சொற்களைச் சுருக்கும் இவரியல்பு பற்றியது தானே என்னாதீர்கள்; இவை தொடர்களையும் சேர்த்துச் சுருக்குவதை எண்ணிப் பார்க்கவேண்டும். மணிமேகலை யைப் புத்தசமயக் காப்பியமென்று, ஏனைய சமயத்தவர்கள் புறக்கணிக்கலாகாது; அங்ஙனம் புறக்கணித்தால் அது 'தாய்க்குழி தோண்டுவதாகும்' என்பார் இவர். 'பெற்ற தாய்க்குக் குழி தோண்டுவது போன்றது' என விரிக்குமாறு இத்தொடர்ச் சுருக்கமமைகிறது.

"படிக்கும் நூல் சிலவாயினும், கவிதைகளை ஓடாது நின்று பார்த்துத் தங்கிப் படித்துச் செல்லும் அசை நடையால் ஆழ்பொருள்கள் விளங்கித் தோன்றும்" *(கா. 27)* என்ற வாக்கியத்தைக் கூர்ந்து நோக்குக. அசைநடை - உணவை அசை போடுவது போல, மென்றுதின்பது போலப் படிக்கும் பழக்கத்தால், ஆழமான பொருள்கள் யாவும் விளங்கித் தோன்றும் என்பதாம்.

'இவன் மகனே' என்ற கன்னிவாய்த் தொடருக்கு, 'இவன் என் கணவனே' எனவும் ஈண்டுப் பொருள்படும். *(வ. 19)* ஒரு கன்னிப்பெண் தன் வாயால் ஓராடவனை, 'இவனும் ஓர் ஆண்மகனே' என வியந்து சொல்லி விடுவாளானால் - என நீட்டி முழக்கக்கூடிய ஒன்றைக் 'கன்னிவாய்த் தொடர்' என வண்ணச் சினைச் சொற்போல ஆக்கிவிட்டது, முற்றிலும் மாணிக்கத் தமிழ்ப் பண்பாகும்.

"வரப்புயர என்றாற் போலப் பசியொழிக என்றால் ஏனைத் தீயவையெல்லாம் ஒழியும் என்பதுவே சாத்தனார் உலகறக் கொள்கை". *(கா. 147)* வரப்புயர நீருயரும், நீருயர நெல்லுயரும், நெல்லுயரக் குடியுயரும், குடியுயரக் கோனுயரும் என ஔவை வாக்காகச் சொல்லப்படும் இதனைச் சுருங்கவுணர்த்திப் பசி ஒழிந்தால் பிற தீமையெல்லாம் ஒழியுமென விளக்கும் இம் மாணிக்க நடை 'சுருக்கப் பண்பின்' மணிமுடியாகும்.

தொடை நிரம்பிய தோமறு மாக்கதை படைத்த கம்பர் 'நடையில் நின்றுயர் நாயகன்' என இராமனைப் போற்றினார், அவனது ஒழுக்கப் பண்பாடு கருதி. ஒழுக்க நடையுடன், குறிப்பாக மொழி நடைச் சிறப்பும் கருதி, இம் மூதறிஞரை 'நடையில் நின்றுயர் நாயகர்' எனப் பதிப்புச் செம்மல் ச. மெய்யப்பன் தம் பதிப்புரையில் பாராட்டுவது *(ச. v)* புகழுரையன்று; பொருளுரையாகும்.

3

## மொழிக்கடன் உணர்த்திய மூதறிஞர்

'சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே' எனவும் அதைத் 'தொழுது படித்திடும்படியும்' மாகவிஞன் பாரதி அறிவுறுத்துவர். "இனிமைச் சுவை தரும் சொல்லைத் தமிழ் போல் வேறெங்கும் யாம் கண்டதில்லை'' என்பது பாவேந்தன் பாரதிதாசன் வாக்கு. ஒரு மொழி வளமும் வாழ்வும் பெறுவது அதன்கண் உள்ள சொற் கூட்டத்தாலும் சொற்கட்டமைப்பாலும் காலத்திற்கு ஈடு கொடுக்கும் சொல்லாக்கத் திறனாலுமேயாகும்.

இதனை நன்குணர்ந்து செயற்பட்ட பேரறிஞர் செம்மல் வ.சுப.மா. ஆவர்.

தமிழ்ச் சொற்படைப்பில் பலரும் ஈடுபட்டிருந்தாலும் ஆட்சி மொழிக் காவலர் கி. இராமலிங்கனாரும் மொழி ஞாயிறு ஞா. தேவநேயப்பாவாணரும் மூதறிஞர் செம்மல் வ.சுப. மாணிக்கனாரும் வரலாற்றில் நிலைக்குமளவு பெரும் பணியாற்றியுள்ளனர்.

செம்மல் மாணிக்கனார் போகிறபோக்கிலோ, தற் செயலாகவோ சொல்லாக்கச் சிந்தனையிலும் பணியிலும் ஈடுபடவில்லை. நன்கு உணர்ந்து திட்டமிட்டு, எதிர் காலத்திற்கும் வழிகாட்டும் போக்கில் இப்பணியில் ஈடுபட்டுள்ளமை அவர்தம் நூல்கள், கட்டுரைகள் அனைத்திலும் வெளிப்படுகிறது.

"மொழிக்குப் பொருள்வளம் மாத்திரம் அளித்துச் சொல்வளம் அளிக்காத எழுத்தாளி தன் கடமையில் செம்பாகம் குறையுடையவன்"

என்று இலக்கியப் படைப்பாளிக்குச் சொற்செல்வம் பெருக்குதலை முக்கிய கடமையாக்குகிறார். *(கா. 133)* இதனை இன்னும் விரிவாகவும் விளக்கமாகவும் சொல்லும் இடமும் உண்டு.

"பொருளும் சொல்லும் ஒரு மொழிக்குச் சோறும் நீரும் போல்வன. ஒரு மொழிக்கண்ணே பொருளே மாத்திரம் வளர்க்கும் அறிஞன் உடைமைத்திட்டு இன்றி நிலம் வழங்கும் அன்பனை ஒப்பான். மொழிக்கு உடைமையாவது பண்புடைய சொற்களே; பொருளல்ல. இதனைத் தமிழ் வளர்ப்பிகள் நினைவில் வைக்கவேண்டும். தமிழ்ச் சொற்களையும் சொல்வடிவங்களையும் புதுக்கி ஆக்கிப் படைக்காத புலவன் தமிழ் மொழிக்கு உடைமைச் செல்வம் பெருக்காதவனே என்பது என் துணிபு." *(இ. 125)*

'என் துணிபு' என அறுதியிட்டுச் சொல்வதை நோக்குக. பாடு பொருள், கருத்து உலகப்பொது; அதை வெளியிடும் சொற்களே மொழியின் உடைமை. உடைமை என்பதால் பிரிக்கவொண்ணாத செல்வம் என்பதும் தற்கிழமை என்பதும் பெறப்படும். பத்திரம் பதியாது நிலம் வழங்கி என்ன பயன்? சொற்கள் தான் கருத்துப் பதிவுப்பத்திரங்கள். 'பண்புடைய சொற்கள்' என்ற தொடர் 'அறிவறிந்த மக்கள்' என்பதுபோல நிற்கிறது. செவ்விய, சீரிய கூரிய சொற்களாதல் வேண்டும். பன்றி பல குட்டி போடுவது போலக் கொச்சைகளையும், பிழைபாடுகளையும் பெருக்கிப் பயன் என்ன? புதுச் 'சொல் வடிவ' ஆக்கத்தில் இவருக்குள்ள ஆர்வம் எல்லையற்றது. பழந்தடத்தில் புதிய வடிவங்களைப் படைக்க நல்வழி காட்டுகிறார்.

மொழிவளம் என்பது யாது? தமிழுக்குரிய சிறப்புக்களின் தலையாய சிறப்பு எது? அதன் சொற்

பெருக்கும் வடிவ வகைகளும் சொல்லாக்க வளர்ச்சிகளும் தான் தமிழ்ச் செல்வமாகும். இன்று ஆங்கிலத்தில் ஒரு மூலச் சொல்லிலிருந்து எத்தனையோ புது வடிவங்களைப் பெருக்கிக் கொண்டே போகின்றனர்; ஒப்புமையாக்கம் மூலம் புதியன படைக்கின்றனர். உலகச் சொற்களைத் தன் வயப்படுத்துகின்றனர். இத்திறமெல்லாம் பண்டைத் தமிழில் காணப்பட்டமை வியப்பளிப்பதாகும். பழந்தமிழ்ச் சொல்வடிவ, சொல்லாக்க, சொற்பெயர்ப்புத் திறன்கள் இம் மூதறிஞரால் நன்கு எண்ணிப்பார்க்கப் பெற்றுள்ளன. அதனால் இவர்தம் சொல்லாக்கத் திறன், மரபுத் தடத்தில் அழுத்தமாய்ப் பதிந்து, வழிகாட்டியுமாகிறது.

இன்று இத்தகைய சொற்படைப்பாளர்கள் தமிழுக்குத் தேவை என்று வற்புறுத்திக் கூறுகிறார்.

> "சொல்வளமும் பொருள் வளமும் சேர்ந்தே மொழி வளம் எனப்படும். சொல்வளம் தொடராத பொருள் வளம், உடல் நலம் இல்லா உளநலம் போன்றது. வளம் படைத்த தமிழ் மொழிக்குச் சொல்லாக்கிகள் மிகத் தேவை. அவ்வப்போது சொல்லை வடித்துக் கொடுக்காதவன், வடித்துக் கொள்ளாதவன் மொழிக் கடன் ஆற்றாதவன் ஆகின்றான். வேற்றுச் சொல் வரவுக்கு இடங் கொடுப்பவன் ஆகின்றான்." *(கா. 194)*

இக் கூற்றிலிருந்து அவரது சிந்தனையையும் செயலையும் நன்கறியலாம். "புலவன் இலக்கியப் படைப்பால் மொழிச் செல்வத்தைப் பெருக்குவதுபோல் சொற் படைப்பாலும் அதனைப் பெருக்கவேண்டும்," *(கா. 211)* என்னுமிவர் தாமும் அச் செல்வம் ஈட்டுதலில் பெருமுயற்சி செய்துள்ளார். இதனால் தமிழுக்கு அவரளித்துள்ள மொழிக்கொடை - சொற் செல்வம் அவர் தமக்கும் தம் குடும்பத்திற்குமெனச் சேர்த்த பொருட்செல்வத்தை விடப் பெரிது எனவும் நிலைபேறுடையதெனவும் சொல்லத் தோன்றுகிறது!

இங்ஙனம் தக்க பண்புடைய சொல்லின்பால் காதல் கொண்ட, இத்தமிழ்க் காதலர் பெரிதும் தமது எழுத்துக்களில் பக்கந்தோறும் - பத்தி தோறும் இத்திறனை வெளிப்படுத்தியுள்ளார். "பேராசிரியரின் ஒரு கட்டுரையைக் கூடப் படிப்பவரின் கவனத்தை அவருடைய சொல்லாக்கம் இழுக்காமல் போகாது" என்று மொழியியலறிஞர் முனைவர் செ.வை. சண்முகம் கூறுவது முற்றும் உண்மையாகும்.[1]

தொடக்கத்தில் எழுதிய மனைவியின் உரிமை, வள்ளுவம் முதல் கடைசிவரை இவரது சொல்லாக்கப் படைப்பார்வம் தொடர்ந்து வெளிப்படுதல் ஒரு சிறப்பாகும். இவரைப் பதிப்புச் செம்மல், 'புதுநெறி புகுத்திய புலவர்', 'நடையில் நின்றுயர் நாயகர்', 'வெல்லுஞ் சொல் படைக்கும் வித்தகர்' என்று ஒவ்வொரு தொடரில் வைத்தே, முழுமையான திறனாய்வுக் குறிப்பைத் தருவார். "மாணிக்கனாரின் புதிய சொல்லாக்கங்கள் தமிழுக்குப் புது வரவும் ஆக்கமும் ஆகும். இந்தத் தலைமுறையில் இவரைப் போல் புதிய சொற்களைப் படைத்தவர் இலர். வாழும் சொற்களைப் படைப்பதில் வல்லவர்; பழஞ்சொல் புதுப்பிப்பதிலும் வல்லவர்" என்று பதிப்புச் செம்மல் போற்றிக் கூறுகிறார். (கா. vi)

தமது கருத்தும் எழுத்தும் பற்றி இம் மூதறிஞரே கூறுவனவும் நினைவிற்கொள்ள வேண்டியவை. "என் எழுத்துக்கள் கட்டளைச் சொற்களால் கட்டளை நடையால் அமைந்தவை; சொற் பல்குதல் என்ற மிகைக்கு இடமில்லாதவை; செறிவு மிகுந்தவை; வேண்டுங்கால் புதிய சொல்லாக்கங்களும் புதிய சொல் வடிவுகளும் புதிய தொடராட்சிகளும் உடையவை". (தி. x) எழுத்தாளர்கள் தூய செந்தமிழில் எழுதுவதே, அவர் தம் திறமைக்குச்

1. டாக்டர் பழ. முத்துவீரப்பன், வ.சுப. மாணிக்கனாரின் சொல்லாக்கம், சென்னை, 1982, ப. x

சான்றாகும். தமிழுக்கு எதனையும் பெருமித நடையில் நிறைவாகத் தெளிவாகத் தூயதாகச் சொல்லும் திறனுண்டு. அங்ஙனம் சொல்லவில்லையெனில், அது எழுதுபவர் குறையேயன்றித் தமிழின் குறையன்று. இங்ஙனம் தமக்கு மட்டுமன்றி எழுதுபவர் அனைவருக்கும் இதனை ஒரு கடமையாகக் கூறுவர் இப்பேரறிஞர்.

டாக்டர் பழ. முத்துவீரப்பன் 'வ.சுப. மாணிக்கனாரின் சொல்லாக்கம்' பற்றித் தனி நூலை எழுதி, மொழியியல் பார்வையில் பகுப்பாய்வு செய்து விளக்கியுள்ளார். அஃதொரு தொடக்க நூலேயாயினும் முழுமைப் பார்வையும் அறிவியலணுகு முறையும் உடையது. அதில் "சொல்லாராய்ச்சிக் கலைஞர்களும் வளர் தமிழ் ஆர்வலர்களும், கற்பிகளும் படைப்பிகளும் பிறதுறை வல்லாரும் **மாணிக்கத் தமிழுக்கு** மதிப்பளிப்பர்; மகுடஞ் சூட்டுவர் என்பதில் எனக்கு ஐயமில்லை" என முதற் கட்டுரையை முடிக்கின்றார். (14) இவரது சொற்படைப்பின் தனித்தன்மையைக் கண்ட முனைவர் முத்துவீரப்பன், 'மாணிக்கத் தமிழ்' என்று மகுடஞ் சூட்டுகிறார். மாணிக்கச் செம்மலின் தனித்தன்மை வாய்ந்த மொழிக் கூறுகளெல்லாம் சொல், நடை, உவமை, உருவகம், ஆய்களம், நுழைபுலம், பாநலம் யாவுமே 'மாணிக்கத் தமிழ்' இதுவென இனங்காட்டுகின்றன.

மாணிக்கச் செம்மலின் சொல்லாக்கச் சிந்தனைகள் சில மிக அடிப்படையானவை. மொழி வளர்ச்சிக்குத் திட்டமிடுவார் அறியவேண்டியவை. மொழிசார் படைப்பாளிகள் கைக்கொள்ள வேண்டியவை. நல்ல தமிழ்ச் சொற்கள் பல இருந்தும் இக்காலத் தமிழ் எழுத்தாளர்கள் அவைகட்கு வாழ வாய்ப்பும் உரிமையும் வழங்காதிருப்பது 'அரக்கமாகும்' என்பார் இவர். (இ. 22) தமிழ் மறுமலர்ச்சி கருதிய அச்சிந்தனைகள் சில எண்ணிப் பார்க்க வேண்டியன.

## சொல்லும் பொருளும்

சொற்கள் காலந்தோறும் தொடர்ந்து வந்தாலும், அப் பொருளே தொடர்ந்து வருவதில்லை. நூல்களுக்கே 'காலச் சொற்பொருள் உத்தியை'க் கடைப்பிடித்து விளக்கம் காண வேண்டும். தொல்காப்பியர் காலத்தில் ஒரு சொல்லுக்கு இருந்த பொருள் இன்று மாறி இருக்கலாம். நாம் தொல் காப்பியத்திற்கு உரையெழுதும் பொழுது அவர் காலப் பொருளைக் கண்டறிந்தே எழுதவேண்டும். நம் காலவுரையை எழுதப் புகின் நம் உரை பொலிவிழந்து போகும். இளம்பூரணர் 'மானம்' என்ற சொல்லுக்குக் குற்றம் என்றே பொருள் கண்டார்; நாவலர் பாரதியார் 'அமரர்' என்பதற்குப் போர் மறவர் என உரிய பொருளை உணர்த்தினார்; 'சாதி' என்பது தமிழில் இனத் தொகுதியைக் குறிக்கும். 'நீர் வாழ் சாதி' என்பார் தொல்காப்பியர். வேம்பு, புளி, அரசு, ஆல் இவற்றைச் சாதியொருமை என்பது இலக்கணம். அதாவது 'வேம்பு' என்பது வேப்ப மரம் அனைத்தையும் சுட்டும். பெண்சாதி என்பது கூட இன்றைய வழக்கு. இவ்வாறு காட்டும் மாணிக்கச் செம்மல் இப்போக்கில் மேலும் சிந்திக்கத் தூண்டுகிறார் எனலாம்.

## அருஞ்சொற்களா ?

ஆங்கிலத்தில் ஆயிரம் வகைப்பட்ட உரைநடையை, பக்கத்தில் அகரமுதலி துணையோடு ஆரஅமரக் கற்பவர்கள், தமிழில் சற்றே உயர்ந்த நடையோ, செம்மை சேர் மொழி நடையோ கண்டு விட்டால் வெறி பிடித்தது போல் குலைக்கத் தொடங்கி விடுகின்றனர். நாம் சொல்லும் விளக்கங்களையும் செவி மடுக்காது, பெரு நகையும், கேலியும் கிண்டலுமாய்ப் பேய் பிடித்தவர் வேப்பிலைக்குமுன் தலை விரித்தாடுவதுபோல் ஆடி, "கொண்டு போ, பண்டித நடையை - பண்டிதரை ஒழி!" என்று சாட வேண்டாதவரைச் சாடித் தண்டமிழைத் தாழ்த்திவிட ஆடுவர். அவரைப் பிடித்திருக்கும் பேய்

தமிழை அழிக்கும் பேய். சோ போலும் திறனாளிகளையும் அப்பேய் பிடித்துக் கொண்டுள்ளது. அப்பேயை விரட்டாது நாம் விடப் போவதில்லை. இன்று பேயாட்டம் பலத்துவிட்டது. இனி இந்தப் பேய் மலையேறப் போகிறது என்னவோ நிச்சயம். தமிழறிஞர்கள் கவலைப்படாது, தமது செழுந்தமிழ் நடையாம் வேப்பிலை கொண்டு அடித்தும்; அன்னார் அறிவின்மையாம் மடச்சாம்பிராணியை அறிவுத் தீயிட்டுப் புகைத்தும் ஆடுமளவு ஆடவிடவேண்டும்.

ஒன்றை வாங்கிக் கொள்ள நாமும் சிறிதளவேனும் முயல வேண்டும். தமிழிலும் சொல்வளம் – சொற்செல்வம் உடைய படைப்பாளிகள் வரவேண்டும். உயர்ந்த எதனையும் விளங்கவில்லை எனக் கூறாது நம் விளங்காமை யைத் தீர்க்க முயலவேண்டும். மொழியில் உயர்ந்த நோக்கம் வேண்டும். மேல்நோக்கிய பார்வை வேண்டும். வீட்டில் சேரும் குப்பை கூளங்களை அப்போதைக்கப்போது கூட்டி அகற்றித் தூய்மைப்படுத்துவதுபோலக் கலப்புக்களை அகற்றித் தூய தமிழைக் காக்கவேண்டும். உள்ள குப்பை போக, மேலும் குப்பையைக் கொண்டுவந்து நடுவீட்டில் கொட்டுவார் போலத் தமிழில் வேண்டுமென்றே கலப்படத்தை மிகுப்பதைத் தவிர்க்கவேண்டும். தமிழில் எழுதியும் விற்றும் பிழைக்கும் ஒரு கூட்டமே, தமிழுக்கு மாறாக நாளும் செயற்படுவது கொடுமையிலும் கொடுமையாகும். அறமும் இறையும் இருப்பது உண்மை யானால், இது மாறும். இக்கெடு போக்கு மாறியே தீரும்! நம்பிக்கை அற்றவர்கள் நம்பிக்கையுடையவர்கள்போல் நடிப்பதனால்தான், சமுதாயம், பலூன்போல் பருத்து, வெடித்து வருகிறது. இன்றும் இத்தகைய அறிவறிந்த கொடுமைகள் நடவாது தடுப்பதே அனைவரும் இணைந்து வாழ வழியாகும்.

என்றுமே அருஞ்சொற்கள் என்று ஒரு தனிப்பிரிவு இல்லை. வழக்கிலுள்ளவை இலக்கியத்தும் காணப்படும்; இலக்கியப் படைப்பிலுள்ளவை வழக்கிலும் புழங்கும்.

சொற்களைப் புறக்கணிக்கும் மனப்பான்மை தவிர்க்கப் படவேண்டும்.

"சொற்பயிற்சி இலக்கியப் பயிற்சிக்கும் இலக்கியப் படைப்பிற்கும் நனி இன்றியமையாதது. நீத்துப் பயிற்சி இல்லாதான் நீராழம் காணமாட்டான். ஆதலின் - புதுச் சொல் வரும்போது பொன் பெற்றார் போல விளங்கிப் போற்றிக்கொள்ள வேண்டும்.'' என்று அறிவுரை பகர்கின்றார். (ச. 46)

அகரமுதலி பார்க்கும் பழக்கத்தை வளர்க்க வேண்டும். எந்த அருஞ்சொல்லும் அகரமுதலி பார்த் தளவில் அறி சொல்லாகிவிடும். கல்வியாளர் - படிப்பாளி - வாசகர் சொற்செல்வம் நாளும் பெருகுவது கண்டு மகிழவேண்டும்.

வளி - காற்று. நாம் வழங்கும் சூறாவளியில் வளி உளது. காற்று முன்பு அருஞ்சொல்; வளி இன்று அருஞ் சொல். பொறி - ஒன்றை உள்வாங்கிக் கொள்ளும் ஒரு கருவி. எலிப்பொறியில் உள்ள பொறியே, ஐம் பொறியிலும் உளது. பொறி - நல்வினையும் ஆம். 'உனக்குப் பொறி இல்லை; 'பொறி கெட்டவன்' என வழங்கவில்லையா? மாடு - பக்கம். கால்மாடு, தலைமாடு வழக்கிலில்லையா? முல்லை - இயல்பு, தன்மை, நிலை, 'முல்லைமாறிப் பயலே'யில் முல்லை மொல்லையானாலும் இன்றும் வழக்கில் இல்லையா?

வியுங் சமயத்துக்கு உதவும் - வீயும் சமயம்: சாகும் நேரம். இன்றும் பேசப்படுகிறதே? புரவி - குதிரை. புரவி எடுப்பு கிராமந்தோறும் நடக்கிறதே? உவவு, உவா - பதினைந்தாம் நாள். உவாப் பதினான்கு என்பது இலக்கண மேற்கோள். ஒவ்வொரு பதினான்கு நாள் முடிவிலும் ஒன்று மதிநிறை நாளாய் (பௌர்ணமி) இருக்கும்; அல்லது மதி மறை நாளாய் (அமாவாசை) இருக்கும். முன்பு பள்ளிக்கு இவ்விருநாளும் விடுமுறையாகும். எனவே இதனை 'உவா'

விடுமுறை என்றனர். இன்றும் திண்ணைப் பள்ளி விடுமுறையை 'வாவு' விட்டதாகக் கூறுவர். உவா பேச்சில் வாவு ஆனது.

அவ்வளவு ஏன்? ஞாயிறு போற்றுதும், திங்களைப் போற்றுதும் அருஞ்சொற்கள் என்பார்கள்.

ஞாயிற்றுக்கிழமையில் ஞாயிறும் திங்கட் கிழமையில் திங்களும் இருப்பதை என் செய்ய?

மடைப்பள்ளியில் மடையல் (சமையல்) உளதென்றால், எந்த மடையனும் (சமையற்காரனும்) ஒப்புக் கொள்வானே! அக்கார அடிசிலில் (அடிசில் - சோற்றுணவு) உள்ள சர்க்கரைச் சோற்றைச் சாப்பிடாது விட்டு விடுவோமா? அடிசில் அருஞ்சொல்லா?

இவ்வாறு உதாரணங்களைக் காட்டி, சொற்களில் அருமை இல்லை, பெருமைதான் உண்டு எனப் இப் பெருந் திறலாளர் விளக்குகிறார். (ச. 45-52)

## வந்துபோம் சொற்கள்

ஒருவர் தமிழில் காலந்தோறும் பலமொழிச் சொற்கள் வந்து கலந்ததை ஒரு பெருங்குறையாகச் சொன்னார்; மிகவும் கவலைப்பட்டார். இதற்காக உடம்பைக் கெடுத்துக் கொள்ளாதீர்கள் என்றேன். பாலி, சமஸ்கிருதம், பிராகிருதம், அரபி, இந்துஸ்தானி, பாரசீகம், போர்ச்சுக் கீசியம், பிரஞ்சு, ஆங்கிலம் என எத்தனை மொழிச் சொற்கள் கலந்துவிட்டன என அயர்ச்சியடைவோர், இத்தனை நீண்ட நெடிய காலம் மொழி வாழ்ந்ததாலன்றோ இது சாத்தியமாயிற்று; இன்னும் வாழ்வதாலன்றோ இக் கலப்பு இன்றும் நீடிக்கிறது என எண்ணிப் பார்த்தால் மறுபுறம் அதிர்ச்சியடைவர் போலும்! அவர்களை இறைவன் காப்பாராக! "உயிரோடிருக்கின்றோம் என்பதற்கு வாங்கிவிடும் மூச்சுச் சான்றாதல் போல, வாழும் மொழி என்பதற்கு வந்துபோம் சொற்கள் சான்றாகும் என்பதைக் கண்டு 'கடி சொல் இல்லை' என

வழிகாட்டினார்" எனத் தொல்காப்பியர்தம் மொழியறிவை வியப்பார் நம் மூதறிஞர். முதனூலாசானுக்கே இத் தெளிவிருக்குமாயின், தமிழ் 'பின்னைப் புதுமைக்குப் பெயர்த்தும் அப் பெற்றியதாய்' இன்றும் வாழ்வதில் என்ன வியப்புளது?

வாழ்க்கையில் செல்வம் வரும் போகும். ஒரு மொழியில் சொற்செல்வம் வரும்; போகும். "மொழி நாணயத்தின் உயிரான வரவு செலவுகளை மூவாயிரம் ஆண்டுக் கிழவனான 'தொல்காப்பியர்' நன்னர் அறிந்திருந்தார் என்று நிறுவுவதற்கு 'கடிசொல் இல்லை காலத்துப் படினே' என்ற ஓரடி நூற்பாவே அமையும்" என்ற நம் ஆசான் கருத்துச் சிந்திக்க வேண்டியதன்றோ? (தொ. 54-55)

சொற்கள் நாணயம்போல் மதிக்கப்படும் வரை செல்லுபடியாகும்; புழக்கத்திலிருக்கும். பிறகு மறைந்து போகும். புதிய நாணயப் புழக்கமும் வரும். எனவே நாம் விழிப்போடிருந்தால் மட்டுமே மொழி நாணயம் காக்கப் படும்.

மூச்சுக்காற்று வந்துபோவது உயிரிருப்புக்குச் சான்று. நல்ல உயிர் வளியே உயிரைக் காக்கும். 'கரிவளி' தீது. கரி வளியும் உயிர்வளியாக மாற்றப்படவேண்டும். இன்று "கரியமில வாயு' - கரி வளி கூடி, மூச்சுத்திணறும் நிலை யுளது.

சுற்றுச்சூழல் மாசு நீங்கத் தீமையைச் சுட்டெரிக்க வேண்டும். குப்பையைக் குழிதோண்டிப் புதைக்கவேண்டும்.

## சொல்தேடும் தமிழ்ப்பணி

உயரிய எண்ணங்களை நினைப்பது எளிது; செய்து முடிப்பது அரிது. திருக்குறளை முழுதும் கற்க நினைத்தாலும் கற்கப் புகும்போதுதான் அதன் அருமை புலப்படும். நூறு கல் தொலைவு நடக்கவேண்டும்; இமய மலைச் சிகரத்தில் ஏறவேண்டும் என்பன செயலாகும் போது கடும் முயற்சி தேவைப்படும். தமிழின் தூய்மையைக்

காப்பதும் இவைபோல் அரிய முயற்சியே. இதற்குக் கடும் உழைப்பும் விடா முயற்சியும் பகையையும் எதிர்கொள்ளும் பண்பும் தேவைப்படுகின்றன.

> "தமிழ் எம்மொழிக் கலப்பும் இன்றி உயர் தனிச் செம்மொழியாய் இன்றும் இலங்கல் வேண்டும் எனத் துணிதல் எளிது; பரந்து விரிந்த பல்துறைப் பொருள்களை நம் தாய்மொழிக்கண் எழுதிப் பேசும் போதுதான், பழஞ்சொல் தேடும் முயற்சியும், புதுச் சொல் ஆக்கும் பாடும், பிறவொலி கலவாது மொழி காணும் இடையூறும், குறுகிய நோக்கம் என்னும் பொய்ப்பழியும் உளவாகும்." *(வ. 243)*

ஏறத்தாழ அரை நூற்றாண்டுக்கு முன்பே, தமது முதல் ஆய்வு நூலில் எழுதப்பட்ட வாசகங்கள் இவை. சொல் தேடல் என்பது எளிதானதன்று. இவ் அரிய முயற்சிக்குப் பன்மாணும் வழிகாட்டியுள்ளமை அறிந்து பின்பற்றற்குரியதாகும். தமிழ் கற்கப் புகுவாரனைவரும் ஒருமுகப்பட்டுப் பற்றும் பாசமும் உறுதியும் திறமும் அறமும் மறமும் கைக்கொள்வரேல் தமிழ் காக்கப்படும்.

தமிழ்ப் புலவர்கள் மொழி வளர்ப்பாளர்களாகாமல் மொழிக் காப்பாளர்களாக மட்டுமே உள்ளனர் எனச் சிலர் கூறுகின்றனர். தமிழகச் சூழலில் காப்பாளர் தொகை மிக வேண்டியுளது. இதனை அறியாதார் போலப் புகலுதல், சிலரிடம் தாம் 'நல்ல பிள்ளை'யாக வாழ வழி தேடும் குறுகிய நோக்கமாகும். அவர்க்கு எதிராய்த் தமிழ்ப் புலவோர் மறம் வாய்ந்த காப்பாளராகவும் திறம் நிறைந்த வளர்ப்பாளராகவும் தம்மைத் தகுதிப்படுத்திக் கொள்வார் களாக என்பதே நம் அறவுரையும் அறிவுரையும் ஆகும்.

## இளங்கோவடிகள்

இளங்கோவடிகள் சொல்லாக்கஞ் செய்வதில் வழி காட்டியுள்ளமையை மாணிக்கனார் எடுத்துக்காட்டுகிறார். பெண்பாற் பெயர்ப் படைப்புகளுள்

மாதவத்தாட்டி
ஆரஞுதராட்டி
குலப்பிறப்பாட்டி
மூதறிவாட்டி
குடமலையாட்டி
தொழிலாட்டி

வாய்ச்சி
நகைச்சி
முகத்தி
முதுக்குறைவி
கொள்கை அறிவி

என வருவன பல இளங்கோ படைப்புக்களாகும். சிலப்பதிகாரத்தில் இதுபோன்ற ஆக்கச் சொற்களைத் தேடுமாறு வழிகாட்டுகின்றார். *(கா. 196)* இளங்கோவடிகள் சொல்லாக்கும் முயற்சியுடைய, மொழிக்கடனாற்றிய புலவர் என அறிய வைக்கிறார்.

**சாத்தனார்**

மணிமேகலை புத்தமதச் சார்பு நூலாதலின், சாத்தனார்க்கு மிகப் பலவாகிய வடமொழிச் சொற்களைத் தமிழில் மொழி பெயர்த்தல், தமிழ் வடிவப்படுத்துதல், அவ்வாறே எடுத்தாளல் என்ற தனிக்கடமை - பெருமுயற்சி தேவைப்பட்டது. "மொழியாக்கத் துறையில் முதன்முதற் புகுந்து ஓரளவு வெற்றி கண்டார் - பின்பு சமயக் காப்பியம் செய்தார்க்கெல்லாம் வழிகாட்டியாக நின்றார்" என்பர். *(கா. 132)* "பிறமொழியைத் தமிழ்ப்படுத்தும் மொழித்திறம் பெற்ற சாத்தனார், தமிழிலிருந்தே புத்தாக்கம் செய்தருளிய சொற்களும் பல. 'சாத்தனார் தமிழ்' என்பது ஒரு தனித் திறனாய்வுக்குரியது. *(கா. 133)*

சாத்தனார் தமிழாக்கிய முறைகள் சிலவும் சுட்டிக் காட்டப் பெற்றுள்ளன.

சத்தியம் – வாய்மை

| | | |
|---|---|---|
| துவாதச நிதானம் | – | பன்னிரு சார்புகள் |
| தருமம் | – | அருளறம் |
| தரும சக்கரம் | – | அறக்கதிராழி |
| பிரத்தியக்கப் பிரமாணம் | – | கண்கூடு, காட்சி |
| அனுமானப்பிரமாணம் | – | கருத்தளவு |

இவ்வாறு தமிழ்ச் சொற்கள் ஆளப்பட்டிருப்பதும் அயன் மொழிச்சொற்களைச் சில போது ஆளினும் அவற்றை இயன்றளவு, தமிழ் வடிவாக்கம் செய்திருப்பதும் விளக்கப்பட்டுள்ளன. *(கா. 200)*

சிலப்பதிகாரத்தைப் போல, மணிமேகலையிலும் பெண் மாந்தர் பலருளர். எனவே பெண்பாற் சொற் படைப்பு இங்கும் காணப்படுகிறது. காய்பசியாட்டி, செய்தவத்தாட்டி, பொருள்விலையாட்டி எனவும் மன்னுயிர் முதல்வி, ஆருயிர் மருத்துவி எனவும் தவத்தாள், வாய்மையள் எனவும் வருவன பலவுள.

> "செவ்வனம் நன்கனம் என்ற சொற்களும் அறவி துறவி என்ற வடிவங்களும் திருவன் தவன் கொலைவன் என்ற ஆண்பாற் பெயர்களும் உலகர் தவர் எனப் பலர்பாற் பெயர்களும் புலம்புரிச் சங்கம் வலம்புரிச்சங்கம் போன்ற இரட்டுற மொழிகளும் சாத்தனாரின் மொழிக் கொடைகளாம்." *(கா. 212)*

இங்ஙனம் சாத்தனார் தமிழை ஊன்றிக் கற்றதன் பயனை, மாணிக்கத் தமிழிலும் ஒப்பிட்டுப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். ஏனெனில் இவையனைய ஆக்கங்கள் மாணிக்கனாரிடமும் காணப்படுகின்றன.

## கம்பர்

கம்பர் இலக்கியப் பாடுபொருளை – இதிகாசக் கதையைத் தமிழ் மரபு கெடாது திறம்படப் புனைந்தார்; அந்த அளவு திறனை தமிழ் மொழி மரபிலும் போற்றினார்.

முன்னதை மட்டும் எடுத்து மொழிபவர்கள் பின்னதை இன்று அறவே விட்டுவிடுகின்றனர்.

தமிழ் ஒலி வரம்புடையது. தமிழில் மொழி முதலில், இடையில், இறுதியில் இவ்விவ்வெழுத்துக்களே வரவேண்டு மென்ற எல்லைகள் உள. தமிழில் இடைநிலை மெய்ம் மயக்க விதிகள், தமிழ்மை தருவன. இந்த ஒலி வரம்பையும் மயக்க விதியையும் முற்றிலும் பேணிப் போற்றிக் காத்தவர் கம்பர். 'கம்பர் தமிழ்' பெரியதோர் ஆய்வுக்குரியது.

சுக்ரீவன் என ஆள்வதே இல்லை; சுக்கிரீவனே. இன்று தமிழறியார் கைப்பட்டுத் தமிழ்படும் பாடு பெரிது. விபீஷணா, விபீஷணன், விபீடணன், வீடணன் - எந்த அளவு தமிழ் வடிவமாகிறது என உற்று நோக்குக. லட்சுமண், இலட்சுமணன், இலக்குமணன், இலக்குவன் - முற்றிலும் தமிழனாய் மாறிவிடவில்லையா? இராமன் ஒரு போதும் ராமன் ஆகான். பாடலுக்கு அசையமைப்புக்கு 'ராமனே' எளிதெனினும் கம்பர் கீழே இறங்கியதில்லை.

| | | |
|---|---|---|
| வச்சிர தந்தன் | – | வச்சிரத்தெயிற்றவன் |
| மகா பார்சுவன் | – | மாபெரும் பக்கன் |
| சூரிய சத்துரு | – | சூரியன் பகைஞன் |
| தூமிராட்சன் | – | புகைநிறக் கண்ணன் |
| இரணியாட்சன் | – | பொன்கணான் |
| இரணியன் | – | கனகன் |
| மகரட்சன் | – | மகரக் கண்ணன் (க. 55) |

கம்பரைப் போல் தமிழ் ஒலிமரபு, மொழி மரபைக் காத்தவரும் சொல்லாக்க நெறி கண்டவரும் எவருமிலர். ஒரு வடமொழி நூலை - வடமொழிசார் பிற மரபுகள் முதல் மொழி மரபு வரை சிறிதும் புகாவாறு - தமிழ் மரபொன்றே போற்றித் தமிழ்நூலாக யாத்தவரும் பிறர் எவருமிலர் என அறுதியிட்டுக் கூறலாம்.

## கோவை நூல்கள்

கோவை நூல்கள் பற்றி ஆராயுங்காலை, 'கோவைப் பொருளாராய்ச்சி, கோவைச் சொல்லாராய்ச்சி, கோவை நடையாராய்ச்சி என்ற வகையால், கோவைத் திறன்களை ஆராய்ந்து விளக்கிப் பரப்புதல் நல்லது" என வழிகாட்டிச் செல்கின்றார். சொல்லாக்க வல்லுநராகிய அவர், கோவைத் தமிழில் காணப்படும் சில ஆக்கங்களைச் சுட்டிக்காட்டவும் காண்கின்றோம். ஓராட்டி பாகர் (ஆட்டி), பொன்னீர் நாட்டிலுள்ள தண்ணெல்லாம் (தண்), 'அன்பன் பின் செலும் வாறு எதுவோ?' (வாறு) என கலைசை, பழமலைக் கோவைகளில் துணைச்சொற்கள் முதற் சொற்களாகியுள்ள அழகை எடுத்துக்காட்டுகிறார்.

வடுக்கின்ற மாந்தளிர் (வடு - வடுக்கின்ற), குன்றம் மழைக்கக் குயில் அழையா நிற்பர் (மழை - மழைக்க) எனத் திருவாரூர், அம்பிகாபதிக் கோவைகளில் வடு, மழை எனும் பெயர்ச் சொற்கள், புதிய வினையெச்ச வடிவம் பெற்று 'வடுச்செய்கின்ற', 'மழை பெய்ய' என வருவதை நுட்பமாய்க் கண்டு காட்டுகிறார். தேனமர் சொல்வி, குயில் மன்னு சொல்வி அனைய பல பெயர் வடிவங்கள், பாவர் (பாவி), நாயினார் (நாயுடையார்), நயனி (நயனம் உடையவள்), பிறவு (பிறப்பு) போன்ற பற்பல புதிய வடிவங்களையும் தெரிந்தெடுத்துள்ளார். "இங்ஙனம் ஆக்கும் ஆற்றலையும் ஆக்கவேண்டும் என்ற அன்பையும் இன்று நாம் இழக்கலாமா? இழக்கத்தான் இடம் கொடுக்கலாமா?" என்றும் வினவுகின்றார். (இ. 126)

தமிழ்நூல்கள் அனைத்திலும் இச் சொற்சுவை காண்பதில் நாம் இறங்கவேண்டும். மொழிக் கடமையாற்ற முந்துக என இவை தூண்டுகின்றன.

# 4

# சொற்செல்வம் ஈட்டிய தமிழ்ச்செல்வர்

சொற்களை ஆக்குமுன் இருக்கும் சொற்களை இடமறிந்து பயன்படுத்தவும் வேண்டும். தமிழில் இன்னும் அகராதியில் ஏறாத, புதுமையான உலக வழக்குச் சொற்கள் ஒரு நூறாயிரத்துக்குக் குறையாமல் உள. தொழிற்களச் சொற்கள், கை வினைஞர் வழக்காற்றுக் கலைச்சொற்கள், வட்டார வழக்குச் சொற்கள், மரபுத்தொடர்கள், அழகுத் தொடர்கள், ஒலிக்குறிப்புத் தொடர்கள் என அவை பலவுள. நம் தச்சரும் கொத்தரும் இப்போது, பொறியாள ருடன் பழகி ஆங்கிலச்சொற்களில் பழகிவிட்டனர். அடிக்கல் நாட்டுதல், வாணந்தோண்டுதல், அடித்தளங் கட்டுதல், கட்டாயக் கல் வைத்தல் எல்லாம் போயின. இப்போது foundation போடுகிறார்கள். இந்நிலையில் சிலர் இத்தகு சொற்செல்வத்தை விட்டுவிட்டுத் தம் அறியாமை யால் ஒலித்திரிபுகளையும் கொச்சைகளையும் பிழைபாடு களையுமே வழக்குச் சொற்களென மயங்கித் தாமும் கெட்டுத் தமிழையும் கெடுத்து வருகின்றனர்.

## வழக்குச் சொல் ஆட்சி

அருஞ்சொல் ஆள்பவர், கடுஞ்சொற் பண்டிதர், விளங்கா மொழி நடை எழுதுபவர் எனப் பழி தூற்றப் படுதலுக்குக் குறைவில்லை. செம்மல் மாணிக்கனார் முதன் முதல் மிகத் திட்டமிட்டெழுதிய நூல் வள்ளுவம். அந் நூலில்தான் அவர் மிகுதியான உலகப் பேச்சு வழக்குச்

சொற்களை எடுத்தாள்கின்றார். பேச்சு நடையிலும் வழக்குச் சொற்களிலும் அவருக்கிருந்த பற்றும் பயில்வும் மிகுதியாகும்.

நாளும் பணம் பணம் என்று சிலர் செல்வம் தேடுவதே குறியாயிருப்பர். தம் மூதாதையர் விட்டுச் சென்றவற்றைச் சிறிதும் தவறிவிடாமல் போற்றிக் காப்பர்; நாள்தோறும் முயன்று, உழைத்துப் பொருள் சேர்ப்பதி லேயே கருத்தாயிருப்பர்; எவ்வளவு சேர்த்தாலும் மேலும் சேர்க்கவேண்டுமென்ற மனமே துடிப்பாயிருக்கும். மிக மிகச் சிக்கனமாய் இருப்பர். உண்பதில், உடுத்துவதில் கூட, பிறர் பார்த்துத் திகைக்கும் வண்ணமும் வியக்கும் வண்ணமும் கூடுதல் சிக்கனக் குணத்தை வெளிப்படுத்து வர். மிக அடக்கமாக இருப்பர். ஆரவாரமே இராது. இத்தகைய ஒரு பெருஞ்செல்வரது குணநலன்களெல்லாம், செம்மல் மாணிக்கனாரின் சொற்செல்வம் ஈட்டுதல், காத்தல், பெருக்குதல், செலவழித்தல் ஆகியவற்றில் காணப்படுகின்றன.

தமிழையே தமது பெருஞ்செல்வமாகக் கருதி வாழ்ந்த அவர் தம் பெருமித வாழ்வு இதனால் புலப்படுகிறது.

## தனிப்பெரும் ஆய்வு

அவரது சொல்லாக்கச் சிந்தனைகளும் நெறி முறைகளும் தனிப்பெரும் ஆய்வுகட்கு உரியன. முன்னைய மரபுகளை அறிந்து, அவ்வேரினின்றும் முளைத்த பல்வேறு உத்தியங்களைக் கொண்டே, அவர் புதுச்சொல் படைத்துள் ளார். பல புதுமையான நெறிமுறைகளை அதனடிப்படை யில் வகுத்துள்ளார். பழங்கால வேர்களைக் காணலும் புதிய நெறிகளை அறிதலும் இன்று அறிவியல் தமிழ்க் கலைச் சொற்களைப் பல நூறாயிரம் ஆக்க வேண்டியுள்ள நமக்கு உதவும். இதனால் இது பயன்பாட்டாய்வாக மலரும். மணி மேகலைச் சாத்தனார்க்குப் புத்தமதக் காப்பியத்தைப் பாடியதால், அயற்சொற்களைத் தமிழாக்கும் பெரிய

'சவால்' எதிர் நின்றது. அதே நிலையில் நாமும் இன்றுள்ளோம். இன்றும் பலர் இத் தமிழாக்க முயற்சியில் பல காலமாக ஈடுபட்டு வருகின்றனர். பேரறிஞர் கா. அப்பாத்துரையார், அறிவியல் மாதிகை 'கலைக்கதிர்' ஆசிரியர் ஜி.ஆர். தாமோதரன், பேராசிரியர் வா.செ. குழந்தைசாமி, அறிவியல் களஞ்சியம் மணவை முஸ்தபா, அறிவியல் தமிழ்ப் பேராசிரியர் இராம. சுந்தரம் எனப் பலரை எண்ணலாம். இவற்றைத் தொடர்ந்து, மேலாய்வு செய்ய, வழி காட்டுதல்கள் பல மாணிக்கத் தமிழில் உள. அதாவது மாணிக்கனாரின் சொல்லாக்கங்களை மட்டும் பற்றியதன்று இது. அவர் தமிழில் சொல்லாக்க நெறிகளை ஆராயவும் சொல்லாக்கத்தில் ஈடுபடவுமான அடிப்படை வழிகளைக் காட்டியிருப்பதால் இதை ஒரு தனி ஆய்வாகச் செய்ய நிரம்ப வாய்ப்புளது.

இங்கு ஒருசில சுட்டிக்காட்டப் பெறுகின்றன. இவையும் ஒரு தொடக்கமாக - அடிப்படைகளைக் காட்டுவதாக அமையும்.

இன்றைய ஆங்கிலச் சொல்லாக்க முறைகளையும் தமிழ் மரபுக்கு ஏற்ப இவர் மிகுதியும் பின்பற்றுகிறார் எனத் தோற்றுகிறது. பழைய சொல்லாக்க நெறிகளைத் தொல் காப்பியர் முதல் தேடும் உந்துதலை, நாம் இவர் எழுத்து வழிப் பெறுகிறோம்.

## சொல்லாக்க நெறிகள்

மாணிக்கனார் பயன்படுத்திய சொல்லாக்க உத்தியங் களைக் கீழ்க்கண்டவாறு பகுக்கலாம்:

பழஞ்சொல் மீட்டல்
புதுச்சொல் ஆக்கல்
பழந்தடத்தில் புதுச்சொல் படைத்தல்

அயற்சொல்: பொது ஒலி ஏற்றல்
அயற்சொல்: தமிழ் ஒலி வடிவாக்கல்
அயற்சொல்: மொழி பெயர்த்தல்

முன்னொட்டுச் சேர்த்தல்
பின்னொட்டுச் சேர்த்தல்
இடைநிலை, இறுதிநிலை வழிப் படைத்தல்
ஒன்றிற் பல கிளைத்தல்
ஒரு பொருட்பன்மொழியாக்கல்
ஒப்புமையாக்கம்
உறழ்வடிவாக்கம்
படைத்தவன் பெயராக்கம்
பெயரை வினை வடிவாக்கல்
எச்ச வடிவாக்குதல்
மரபுவழி சொல் மாற்றம் செய்தல்
சுருக்கிச் செறிவு வடிவாக்குதல்

இப் பெயரீடுகள் எளிமை கருதியவை. ஒன்றில் ஒன்று மேவியும் கலந்தும் வருவனவும் உள. இப் பெயர் சில மாற்றத்திற்குட்படலாம். தொடக்கத்தில் பெறும் தெளிவிற்கு இவ்வகைப்பாடு உதவும்.

**பழம் மரபில் வேரூன்றியவை**

மை இறுதி பண்பொட்டு. இளமை, முதுமை பழகியவை. குழமை, குமரமை (த.கா. 287) குமரிமை என்பன மரபுவழி ஆக்கங்கள். தாய்மை நாம் அறிந்தது. தந்தைமை மாணிக்கனாரின் புத்தாக்கம். அம்மட்டோ? கணவன்மை, மனைவிமை என்றெல்லாம் அமைகின்றன. தமிழ்மை (இ. 111), மனமை (இ. 41), தெளிமை, மொழிமை, நெறிமை என வருவன பல இவர்தம் நூல் முழுதும் விரவிக் கிடக்கின்றன.

எத்திணை மருங்கினும் மகடூஉ மடன்மேற்
பொற்புடை நெறிமை இன்மை யான (தொ. 980)

என்பது தொல்காப்பியம். 'நெறிமை'யைத் தொல்லாசான் ஆக்கியாள்வதால் 'மை' ஈற்றாக்கம் எங்கே வேரூன்றியிருந் தது என்பது புலப்படுகிறது. பழந்தமிழ், இடைக்காலத் தமிழ் நூல்கள் சில பல சொல்லாக்க நெறிமுறைகளின்படி,

புத்தாக்கங்கள் செய்திருப்பதை இப்பேராசானும் ஓரளவு சுட்டிக்காட்டிச் சென்றுள்ளார். இவ்வழி ஆய்வு எதிர்காலத் தமிழ் வளர்ச்சிக்குப் பெரும் பயன் தரும்.

## இகர ஈற்றுப் பெயர்களும் பெண்பாற் பெயர்களும்

இகர ஈற்றுப் பெயராக்கம் தொன்றுதொட்டு வருவது. அதை மிகப் புதுமைப்படுத்திப் பல்கவிடுவதே மாணிக்கத் தமிழின் மாண்பு.

பொருளாளி (இ. 20), சிந்தனையாளி (இ. 79), நடையாளி (இ. 90), பொறையிலி (வ. 115) என வரும். கேடு செய்பவன் கேடி ஆகிவிடுவான். நம்பிக்கைக் கேடி (இ. 66) நாணயக் கேடி (தி. 42) எனக் கேடிகள் பலவகைப் படுவர். இன்னும்

உரைவிளக்கிகள் (இ. 142)
பாடம் அமைப்பிகள் (க. 106)
இலக்கியப் படிப்பிகள் (கா. 14)

எனச் சுருக்கமாகப் பல உருவாகின்றன. உயிர் - உயிரிகள் ஆகிறது. ஜீவராசிகளை இனி உயிரிகள் எனலா மல்லவா?

இளங்கோவடிகளும் சாத்தனாரும், பல பெண்பாற் பெயர்களைப் புதுமையாய் ஆக்கிக் கொண்டனர் என இவர் எடுத்துக்காட்டியுள்ளார். பிறகு என்ன? மரபு அடிப்படை கிடைத்தால் விடுவாரா?

கூற்றச்சி (க. 37), வினைச்சி (க. 134), அடிச்சி (இ. 91), கூந்தலி, பருவமிலிகள், காதலுக்குப் பகைத்தி (த.கா. 76), கயத்திகள் (த.கா. 312) என அமைப்பார். கற்புடையாளைக் ‘கற்பி’ என்றும் (கா. 50) வேந்தன் மனைவியை வேந்தி (கா. 95) என்றும் மிகப் புதுமையாய் ஆள்கின்றார்.

## பெயரை வினை வடிவாக்குதல்

பெயரை வினை வடிவாக்கல் தொன்று தொட்டு வருவதேயாம். வடுக்கின்ற (வடுச் செய்கின்ற) மா, மழைக்க

(மழை பெய்ய) எனக் கோவை நூல்களில் வருவதை இவர் காட்டியுள்ளார். (இ. 126) இன்றையப் படைப்பிலக்கியத்தாரிடமும் இப் பழக்கம் உண்டு. இவரிடம் இம் முறைக்குத் தனிச் செல்வாக்குண்டு.

விழிப்புணர்த்துகின்றேன் (தொ. 91) என்பார் இவர். 'கனவுகிறான்' (வ. 97), ஒப்பாரிக்கும் (கா. 22), பழமொழிகின்றோம் (கா. 38), கவவினான் (த.கா. 281), அட்டவணைப்பர் (தி. 124), வானொலிக்க வேண்டுமல்லவா (இ. 20), நுனிப்பாம் (தி. 62), சொற்பொழிந்தாலும் (கா. 4) என இவற்றின் வரவுகள் பல.

## முன்னொட்டுச் சேர்த்தல்

ஒப்புமையாக்கப்படி முன்னொட்டுச் சேர்த்து நாம் எத்தனையோ சொற் குழுமங்களை உண்டாக்கவியலும்.

வள்ளுவ அரசு குடியரசா, முடியரசா என ஆராயலாம். ஆனால் முன்னொட்டை மாற்றினால் நல்லரசு, அல்லரசு, வல்லரசு, மெல்லரசு கிடைக்கும். (தி. 2) வெல்லரசும் (தி. 141) உளது. தனியரசு, உறுப்பரசு (தி. 55) என்பனவும் உள.

## எதிர்மறை 'அல்'

'அல்' எதிர்மறையுணர்த்தும் முன்னொட்டு. அல் +திணை =அஃறிணை என வரும். அல்சங்க நடை (கா. 182), அல்முறை (தொ. 287), அல்பிறவி (தி. 23), அல்லுரை (தி. 83), அல்நாகரிகம் (க. 29), அல்லியற்கை (க. 60), அல்தமிழ் நெறி எனப் பல சொற்களை இவர் உருவாக்கிக் காட்டுகிறார்.

பழம் மரபுப்படி, ஒப்புமையாக்கம் செய்யும் நெறிகள் சில மேலும் காணப்படுகின்றன. தறுதலை பழம் வழக்கு; எதிராக 'உறுதலை' என ஆக்குவார் (க. 114). உள்ளீடாக முன்பு இருப்பது. மேலோடாக, அதற்கு எதிராகப் படைக்கப்பட்டது (கா. 24). சப்பென்றிருக்கிறது - பழையது,

உப்பென்றில்லை - இவர் படைப்பு (தி. 82) நெட்டையோ. குட்டையோ முன்பு சொன்னார்கள். விரிவோ குறுவோ இவர் படைத்தது. (கா. 37). வெளிப்படைக்கு எதிராக இவர் படைப்பு - 'இருட்படை' (தி. 17)

**ஈரடை**

நெடுநல்வாடை - முரண்பட்ட ஈரடை. 'செங்கடு மொழி' தோழி கூற்றெனும் தொல்காப்பியம். "மொழிக்குச் செம்மை கடுமை என்ற இரண்டு அடைமொழிகள் வந்துள்ளன. வாயாற் கடுமொழி, மனத்தினான் இனிய மொழி என்று நயம் உரைப்பர் இளம்பூரணர்." இவ்வாறு தொல்காப்பிய நயம் காணும் இவர் 'கெடு சிறு செல்வமாய்' (தி. 89) 'நல்வல் இளைஞர்கள்' (மா. உரை II) என ஈரடை ஆளுமிடங்கள் பலவாகும்.

## ஒன்றிற் பல கிளைத்தல்

திறன் (தொ. 300), திறன் கலை (இ. 104), திறனுலகு (கா. 3), திறனாடுவது (கா. 117), திறனாடி (தொ. 300), திறனி என இவ்வாறு கிளைக்கும்.

ஒப்பிடுதல் ஒப்பாடு செய்தல் (இ. 143), ஒப்பாடிகள் (த.கா. 163), ஒப்புறழ்ச்சி (இ. 186), ஒப்பியம் (இ. 134) உராய்தல் (தி. 1) என இவையும் பல்கும்.

## ஒரு பொருட் பல வடிவங்கள்

தியாகம் தன்னலம் துறப்பது. இதற்கான பல சொற்கள் தரப்படுகின்றன. நிலைப்பது நிலைக்கும். அவரவர் தத்தமக்கு விருப்பமானதை ஆள வாய்ப்புண்டு. தற்கொடை, தன்னீகை, தன்னளி, தற்பலி, (ச. 20,21, கா. 109), ஈகம் என்றும் ஆள்வர்.

சமுதாயம் என்ற சொல்லையும் ஆளும் இவர் அதற்கானதும் அதனோடு தொடர்புடையதுமான பல சொற்களை ஆள்கிறார். மன்பதை (த.கா. 116), மன்குலம் (இ. 13), மன்னுலகு (தி. 22) என ஆண்டு பார்க்கின்றார்.

'ஆயம்' என்ற பின்னொட்டு நல்ல தமிழாதல் காணவே, அவ் ஒட்டினை ஒட்டிப் பல சொற்களை ஆக்கிக் காட்டுகிறார். மன்னாயம் (தி. 20, 44), குழுவாயம், (கா. 44), இனவாயம் (இ. 132), உலகாயம் (தி. 26, 44), பொதுவாயம் (தி. 43), பண்டைத் தமிழாயம் (கா. 29), குலவாயம் (கா 37) என ஆயங்கள் பலவாதலோடு சிறுசிறு நிழற்பொருள் வேறுபாட்டையும் இவை தருகின்றன.

ஒரு பொருளைக் குறிக்கவே பல வடிவங்களை ஆளுதல் சொற்பல்குதல் நன்றெனெ எண்ணியதாலேயாம்.. ஆய்குநர் ஆராய்குநர், ஆய்ஞர், ஆய்வர் என ஆளக் காணலாம்.

எழுத்தாளர், எழுத்தாளி, எழுத்தாளுநர், எழுத் தாண்மையர், எழுத்தாள்வார்கள் (இ. 2,3,5. கா 125) என எழுத வருவோர் பலராயினர்.

## புதுச்சொல் வடிவங்கள்

ஆங்கிலத்தில் 'Ism' போலத் தமிழில் 'இயம்' இறுதி ஒட்டாய் வருவதை இவரைப்போல் பயன்படுத்திக் கொண்டார் எவருமிலர். இயம் – இலக்கியக் கோட்பாடு, கொள்கை. இலக்கியம் தவிர்த்துப் பொதுவாகக் 'கோட்பாடு' எனவும் அமையும். ஒழுக்கம், ஒழுக்கியம் (த.கா. 118) ஆகும்போது ஒழுக்கக் கோட்பாடாகிறது. உயிரியம் – உயிரின் தன்மைகள் பற்றிய துறையுமாம். உத்தியம் (இ. 117) – உத்தி அமையும் நெறிமுறை பற்றியது.

தமிழியம், உலகியம், உயிரியம். அரசியம் வேறு, தனியியம் வேறு என்பார் இவர். (தி. 4) அரசியற் கோட்பாடு வேறு. தனிமனிதக் கோட்பாடு வேறு என்பதைச் சுருங்கச் சொல்ல இது பயன்படுகிறது. சமனியம், (இ. 133) 'சோஷலிசத்தை' உணர்த்த நன்கு பயன்படும். நடப்பு – நடப்பியல் – யதார்த்தவாதம் ஆனது. நடப்புடன் இயம் சேர்த்து 'நடப்பியம்' ஆக்கினால், ஒப்பியம் போல மிகப் பொருந்திய கலைச்சொல் வடிவம் பெறுகிறது. (இ. 20)

காதலியம் (இ. 9), தகவலியம் (இ. 21) என அந்நெறிகளைச் சுட்டத்தக்க வடிவங்களாகின்றன. படைப்பியம் (கா. 160) படைப்புக்கலையை மட்டுமன்று; அதனை உள்ளடக்கிய அத்துறை சார்ந்த அனைத்தையும் குறிக்கப் பரந்து விரிந்த சொல்லாகிறது. தமிழியம் போலக் 'கம்பனியம்' என ஒன்றுளது (கா. 163). கம்பன் தொடர்புடைய யாவற்றையும் ஒருவர் இத்தலைப்பில் ஆராயலாம். பல்கலைக் கழகங்கள் 'கம்பனியக் கோட்பாடுகளை' வகை தொகைப்படுத்தலாம்.

மக்களியம், சால்பியம், பொதுவியம் (இ. 160) என இவ்வாறு 'இயம்' ஒட்டுப் பெற்ற வாழ்வு பெருவாழ்வாகும்.

இயம் என்பதற்குப் பதிலாக 'அம்' பெற்று முடிவன சிலவுள. உரையம், உரையங்கள் எனவும் உரிமையம் (இ. 133), புரட்சியம் (இ. 160) எனவும் இவை அமையும்.

## 'ஞ்'கர இடைநிலை

பெயரிடை நிலையாக மரபுவழி வந்து, புதுப்புதுப் பெயர்களைப் படைப்பன 'ந்'வும் 'ஞ்' வும் ஆம். மகிழ்நன், பொருநன் முன்னைய வடிவம். இன்று இயக்குநன், ஓட்டுநன், நடத்துநன் எனப் பல்கியது. அறிஞனும் வறிஞனும் பழங்காலத்தவராக, இன்று இசைஞன், மொழிஞன், ஒலிஞன் (தொ. 111), துறைஞர், வழிஞன், பறிஞன் (இ. 90), ஆய்ஞர் (கா. 230) பலராயினர்.

## உறழ் வடிவாக்கம்
## இரட்டைத் தொடர்

மனிதம் (கா. 7) எதிராக அரக்கம் (இ. 22) சுட்டப்படும். தறுதலைக்கு எதிராக உறுதலை சுட்டுவார். (க. 114) நல்லெண்ணத்திற்கு மாறாக அல்லெண்ணம் குறிக்கப்படும். (கா. 38)

கொடுநா செந்நா (இ. 33)

மல்லலாக (வளமாக) அல்லலாக (தொ. 68)

உடன் குறிப்போ (உடன்பாடு) மறு குறிப்போ (மறுப்பு) (த.கா. 243)

நேர்திறம் எதிர்திறம் (தொ. 298)

உண்மைக் களவாராய்ச்சி இன்மைக் களவாராய்ச்சி (காப்பியப் பாடுகளம், கள ஆராய்ச்சி) (க. 83)

முன்பே வழங்கும் கொள்வினை கொடுப்பினை (த.கா. 143) போல இவை பல ஆக்கப்பட்டுள்ளன. சரிநிலை (சமம்) எனும் உரிநிலை (இ. 35) என இணைநிலையாகவும் ஆளப்படும்.

### எச்ச வடிவாக்குதல்

மன்னுதல் - நிலைபெறுதல். 'மன்னிய செவ்விலக் கியம்'. (ச vii) தொல் அடிச்சொல்லிலிருந்து 'தொல்லிய இலக்கியப் பரம்பரை' (இ. 16) புரட்சியிலிருந்து புரட்சிய அணியழகுகள். (தி. 35) புலமையிலிருந்து புலமைய மனம் (கா. 27).

### படைத்தவன் பெயராக்கம்

ஒரு நூலைப் படைத்தவன் பெயரால் நூலை வழங்குவது உலகெங்கும் உண்டு. 'தொல்காப்பியன்' எனத் தன் பெயர் தோற்றி - என்பதால் நூலுக்கும் அதுவே பெயராதல் பெறப்படும். வடமொழியிலும் இம்மரபுண்டு. 'சேக்ஷ்பியர்' படி, மில்டனைக் கற்றுக்கொள் என மேனாட்டாரும் இயம்புவர்.

இடைக் காலத்தார் ஆசிரியன் பெயரை வேறு பிரித்தறிவதற்காக தொல்காப்பியம் என னகரவீற்றை மகர வீறாக்கினர். அதன்வழி வளளுவன் சொன்னவை வள்ளுவம் ஆயின. இப் பெயராக்கத்தில் ஈடுபாடு கொண்டவர் நம் பேராசான். சோமசுந்தரம் (தொ. 195) சோம சுந்தர பாரதியார் உரை. கண்ணதாசம். (இ. 131) இளங்கோவம் (கா. 51) பண்டிதமணியம். (இ. 90) தமது தொல்காப்பிய உரையை 'மாணிக்கம் எனப் பெயர் பெறும்' என முன்னுரையில் குறித்தார். மாணிக்கன் எழுதியது மாணிக்கம் ஆகும். பெயரே மாணிக்கம் என இருப்பினும்

இரண்டும் வெவ்வேறாகும். உரையைக் குறிக்கும்போது மாணிக்கம் நூற்பெயராகும்.

## பழஞ்சொல் மீட்சி

செம்மல் மாணிக்கனாரின் எழுத்து அனைத்திலும் பழஞ்சொல் ஆட்சிக்கு மிகுந்த இடமுண்டு. அவற்றுள் இன்றும் விளங்குவனவற்றையும், விளங்கவேண்டியன வற்றையும் அவர் இயல்பாக - தயங்காமல் - எடுத்தாள் கின்றார்.

இன்று ஆய்வுச் சிக்கல் (Problem) என்பது பெரு வழக்கு. சிக்கலுள்ள இடங்களைத் தேடிக் கண்டுபிடித்துச் சிக்கறுப்பதே ஆய்வாகுமென்பர். 'சிக்கல்' என்பதனிலும் 'அரில்' (கா. 181) மிகப் பொருந்திய கலைச் சொல்லாக, இவரால் தொடர்ந்து ஆளப்படுகிறது. முன்பு செடிகொடி கள் சிக்குண்டு கிடந்ததை 'அரில்' என்றனர். இலக்கிய இலக்கண ஆய்வுகளில், சிக்கல் தீர்க்கப்படவேண்டியவற்றை 'அரில்' என இவரழைக்கிறார். வீறு - பிறிதொன்றற்கில்லாத சிறப்பு. சிறப்புடைய இலக்கியத்தை வீற்றிலக்கியம் என்பார் இவர். பைஞ்ஞிலம் (இ. 9, 26) — பசுமை வாடாத இவ்வுலகைக் குறிக்கும் பழஞ்சொல்.

சிலம்பிற்கு 'ஞெகிழம்' என்பதும் ஒரு பெயர். நெகிழ இடுவதால், வந்த பெயராதல் வேண்டும். அதைப் பயன் படுத்தாவிட்டால் தொலைந்து விடுமல்லவா? எனவே சிலம்பைப் போல ஞெகிழத்தையும் (கா. 91) எடுத்தாள் கிறார். பாவேந்தன் பாரதிதாசன் அழகின் சிரிப்பில், அழகென்பாள் இயற்கையில் 'தொட்ட இடமெல்லாம் தட்டுப்பட்டாள்' என்பார். அதுபோல மாணிக்கத் தமிழில் தொட்ட இடமெல்லாம் சீரிய கூரிய தீந்தமிழ்ச் சொற்கள் தட்டுப்படும். ஒன்றிரண்டு காட்டினாலே சான்றாக நின்று, மாணிக்க மனப்போக்கைக் காட்டுமல்லவா? மேலும் சில பழஞ்சொல் ஆட்சிகளைப் பார்ப்போம்.

நச்சாது - விரும்பாது (இ. 15) 'நச்சப்படாதவன் செல்வம்' குறள். தலைக்கூடி இருக்கின்றோம். (இ 35) ஒன்று கூடியுள்ளோம் - 'உவப்பத் தலைக்கூடி' குறள். தாயின் பூட்கை - கொள்கை - 'ஆருயிர் ஓம்பும் ஒரு பெரும் பூட்கை' மணிமேகலை. உய்த்துக் கொடுத்தல் (கா. 105) - கொண்டு போய்க் கொடுத்தல் - 'மறை பிறர்க்கு உய்த்துரைத்தல்' குறள். ஏதிடு (இ. 20) காரணம் கூறல் - 'ஏதீடு தலைப்பாடு' தொல்காப்பியம். அவலக் கவலை (இ. 3) - தீராத் துன்பம் - 'அவலக்கவலை கையாறு அழுங்கல்' மணிமேகலை. வீவு - திடீர் இறப்பு - 'அவ்வை உயிர் வீவும் கேட்டாயோ தோழி? அம்மாமி தன் வீவும் கேட்டாயோ தோழி?" சிலம்பு.

## உரிச் சொற்கள்

தமிழில் உரிச் சொற்கள் நுண்பொருளுடையன. அவற்றின் மீட்சி தமிழுக்கு மாட்சி தரும். எனவே தவப் பெரிது (தொ. 69), தவச்சிறிது (வ. 59) என ஆள்கின்றார். (மிகவும் பெரிது, சிறிது என்பதாம்). கூர் - உள்ளது சிறத்தல். 'அகத்திணை தோன்றக் கூர்த்த வரலாறு'. (த.கா. 26)'தஞ்சம் இடைச்சொல். தஞ்சம் எளிது (வ. 15) - மிக எளிது.

கில் - ஆற்றலுணர்த்தும் வினை இடைச் சொல். தாங்க கில்லாது (கா 165) தாங்கமாட்டாது. அறிய கில்லாத (இ. 2) - அறிய மாட்டாத. இவ்விடைச் சொல்லால், ஒரு தனிப் பொருளுணர்த்த வாய்ப்பிருந்தும், கால வெள்ளத்தில் கரைந்து போனது. தமிழின் கூர்மையான பொருளுணர்த்தும் திறனுக்கு, இதுபோன்ற இடைச் சொற்களே உதவின. ஆங்கிலம் போன்ற பெருமித நடையும் கூர்மைதரு நிழற்பொருள்களும் தந்து, தமிழின் வழக்காட்சி சிறக்கவேண்டுமேல் உரியும் இடையும் உரிய இடத்தை மீண்டும் பெறவேண்டும்.

'காண்' முன்னிலையசை. இன்றும், 'என்னங்காணும்' என்று, ஒருவரை முன்னிலைப்படுத்தித் தொடங்குகிறோம். "பேசாமேப் போங்காணும்' என்போமல்லவா?

*பயனிலவாய் ஒழியுங்காண் (த.கா. 49)*

*கருதவில்லைகாண் (த.கா. 267)*

*மன் என்பது ஒழியிசை உணர்த்தும் இடைச்சொல். 'நான் மட்டும் ஒரு வார்த்தை சொல்லியிருந்தால் வந்திருப்பர்மன்' என்று இன்று யான் சொன்னால், அவ்வாறு சொல்லாததால் அவர் வந்திலர் என்பது பெறப்படும். பாரி மனைவி போரில் மடிந்திருப்பாளேல் கபிலர் கையறுநிலை பாடியிருப்பர்மன் (ச. 111), புனைந்திருப் பர்மன் (கா.91); தொடர்பு காட்டியிருப்பர்மன் (த,கா. 239) இவ்வாறு 'கில்' - 'காண்' - 'மன்' அனைய இடைச் சொற்கள் வாழ்விடம் தேடுகின்றன, இவர் எழுத்தில்.*

*'தில்' விழைவுணர்த்தும் இடைச்சொல். 'கற்கதில்'. (வ. 65) திருக்குறளைக் கற்பார் யாவரும் செயல் நோக்கொடு கற்கதில் - கற்கவேண்டும் என்பதாம்.*

## வழக்குச் சொல் ஆட்சி

*அன்றாட வழக்கிற் காணப்பட்டு, ஏட்டில் ஏறியன சிலவே; ஏறாதன மிகப் பலவுள. களவு 'சாட்டுதல்' என்கிறோமல்லவா? சாற்றுதலா - சாட்டுதலா? 'கள்வனெனச் சாட்டிவிடும் சூழ்ச்சி" (கா. 99) - அவன் மீது பொய்யாகக் கட்டி விடுதல்.*

*'என்னப்பா இது? அட்டூழியமா இருக்கு! - நாம் அழிவு தரும் செயல் கண்டவிடத்து வருந்திச் சொல்வதுண் டல்லவா? போர்க்களச் சொல் இது. 'அனுமன் இலங்கையை எரித்த அட்டூழியம் கேட்ட இராவணன்' (கா. 165) 'ஓர் அலுவலகத்து முன்னிற்கும் வாயிலோன் செய்யும் அட்டூழியம் கொஞ்ச நஞ்சமா?' (வ. 257). "நாமென்ன இளக்காரமா?", "நாமென்ன அவர்களுக்கு இளக்கமா?" இந்தியாவைப் பிறர் இளக்கமாக எண்ணுகின்றனர் என்பது இவர்தம் அவலக் கவலை. (தி. 8,9)*

'பேச்சுவார்த்தை தடிக்க விடாதீர்கள்' என்போம். 'சிலசமயம் மனப்பூசல்கள் தடிக்கவும் செய்யும்'. *(தி. 57)* கையூட்டை ஒழிக்க இந்திய அரசுகள் மும்முரமாக ஆராய்கின்றன. அதனால் பயன் என்ன? 'கையூட்டைக் கண்டுபிடிக்க வழிதேடுவதை விட, கையூட்டு நிகழாவாறு அலுவல் நெறிகளை அமைப்பதில் கருத்துச் செலுத்த வேண்டும்' என்ற கருத்து இன்றும் செயற்படுத்த வேண்டியதல்லவா? *(தி. 55)* 'பெண் ஆளாகி விட்டாள்' என்பதைப் போல 'ஆளான தலைவன் தலைவி' எனக் குறிப்பிடுவார். *(த.கா. 48)* சமையலில் 'நளபாகம்' நன்றாக இருக்க வேண்டும் என்பதுண்டு. இவர் 'இலக்கிய பாகம் இல்லாதவை' என்று வேகமற்ற கவிதைகளைச் சாடுகிறார். *(இ. 170)*

'எம்பினை' என்பது 'எண்பினை' – 'எண்பித்தல்' நிரூபித்தலுக்கு வழக்கில் மெய்ப்பித்தல், எண்பித்தல் என இரு சொற்கள் வழங்குகின்றன. இவர் 'எண்பிக்கின்றன' *(தொ. 283)* என்று எடுத்தாள்கிறார்.

செம்பதிப்பு, செம்பாடம் *(தொ 211)*, செம்போக்கு எனச் செம்பொருள் கண்ட இவர் செப்புகின்றார். செம் போக்குக்கு எதிரிடையாக வெம்போக்கு எனவும் ஆள்கின்றார்.

கலகலப்பு, குதுகுதுப்பு *(தி. 29)*, சிலுசிலுவென்னும் *(வ. 278)* என ஒலிக்குறிப்புத் தொடர்கள் – இரட்டைக் கிளவி என்பன ஆட்சி பெறுகின்றன. சட்டென, சடக்கென, அவக்கென, பளிச்சென என ஒலிக்குறிப்புச் சொற்களும் இவரால் ஆளப்படுகின்றன. இணைத்தொடர்கள், மரபுத் தொடர்களும் பல இடம் பெறுகின்றன. உருட்டுப் புரட்டன்று *(இ. 43)* குப்புறத்தள்ள *(தி. 2)* குளிர் விட்டு விட்டது. *(தி. 7)* கைகடந்து *(தொ. 21)* வாய் வயிற்றைக் கட்டி *(வ. 99)* குட்டிச்சுவர் *(வ. 270)*. கீழ்வரும் பட்டியலும் காண்க.

கிள்ளுக்கீரை *(வ. 201)*

பீடை *(தி. 154)*

*தவக்கம் (தொ. 252)*

*கழிசடை (த.கா. 277)*

*வாய்ப்பட்டி (த.கா. 74)*

*அறுத்தோடியாகி விடும் (க. 24)*

*கும்மாளம் (த.கா. 338)*

*மட்டுப்படுத்தல் (ச. 17)*

*மட்டுப்படும் (வ. 229)*

*ஆட்பேர் மாகாணம்*

*கருக்கிடையாய் (வ. 108)*

*ஒத்தூதி (வ. 53)*

*ஊர்ப்பட்டது (வ. 183)*

*இறவாரம் (த.கா. 264)*

*பலிதம் (இ. 174)*

*வீறாப்பு (இ. 43)*

*வரப்பண்ணுதல் (தி. 122)*

*எச்சரிப்பர் (த.கா. 310), எச்சரிக்கை (தி. 33)* இவரால் ஆளப்படுகின்றன. *'காதற் சோடியரிடம்' (த.கா. 295)* என எழுதுதலால் அவை தமிழெனக் எண்ணப்பட்டமை தெரிகிறது.

ஆராய்தலை அடிக்கடி இவர் *'அலசல்' (ச. 108)* எனக் குறிப்பது கருதற்பாலது. அலசி ஆராய்ந்து எனப் பேச்சிலும் உண்டு. *நறுவிதாய் (வ. 201), பொதுப்படையாய் (வ. 228)* என வருவன பலவுள. சிறிதும் பொருந்தாது எனச் சொல்ல வரும் போது *'என்னானும்' (கா. 120)* எனப் பல இடங்களில் அமைகிறது.

## வட்டார வழக்கு

இவர்தம் பிறந்த ஊர்ப் பகுதியான செட்டி நாட்டு வட்டார வழக்குகளும் இடம் பெறுகின்றன.

*மாணி (கா. 61)* - திருமணமாகாத சிற்றப்பன்

கேதம் *(கா. 21)*, இழவு *(கா. 33)* - சாவு

பணியாரம் *(ச. 143)*

எட்டாக்கை *(த.கா. 143)* - சேய்மை, தூரம்

எட்டிய சொந்தக்காரர்கள் *(க. 120)* - தூரத்துச் சொந்தம்

அவளை வளர்த்த ஓவியம் *(த.கா. 15)*

தேட்டாளன் *(வ. 98)*

சாடை பேசுதல் *(த.கா. 77)*

இட்ட பெயர், கூப்பிடு பெயர் *(த.கா. 328, 329)*

கருக்கிடையாய் *(வ. 108)*

கொடுத்துவையாமை *(வ. 34)*

வைப்பு *(த.கா. 302)*

தனியே தொகுத்து நோக்குமளவு இவையும் காணப் படுதலால், சிலர் நினைப்பதுபோல் ஏட்டுச் சுரைக்காயாய் எழுதப்பட்டதன்று மாணிக்கத்தமிழ் என்பதும் அது வீட்டுச் சுரைக்காய் என்பதும் கல்வி அறிவுத் தெளிவுடை யார்க்கு விளங்கிவிடும்.

## அயல்மொழிச் சொல் மாட்சி

ஒரு மொழியில் அயல்மொழிச் சொற்கள் கலக்கவே கூடாதெனில் அது வழக்காறின்றிப் போதல் வேண்டும். அயற்சொல் கலப்பு, ஒரு வகையில் மொழியின் உயிர்ப் புடைமைக்குச் சான்றாகும். தமிழின் நீண்ட கால வாழ்வில் அயற்சொற் படையெடுப்புப் பல நிகழ்ந்துள. ஆனால் புக்ககம் புகுந்த மணமகள் போல அவை தமிழ்மை எய்தின. ஒலிக்கற்பும், மொழியொழுக்கமும் பேணின. இதனால் தமிழ்வளம் பெற்றதே தவிர, நலமிழக்கவில்லை. தமிழாக்கம் பெற்றும், தமிழ் வடிவம் பெற்றும் அவை உலவுவதால் தமிழின் மாட்சிமை கூடும். ஒலிப் பிறழ்ச்சி

ஏற்படவிடின், அது தமிழின் உயிர்ப்பிறழ்ச்சியாகிவிடும் என்று மாணிக்கச் செம்மல் எச்சரிப்பதை மறத்தல் கூடாது.

மாணிக்கனார் இயல்பாகவே அயற்சொல் கலப்பைத் தவிர்ப்பவர். கலக்க நேருமிடத்து அவற்றை அழகாகத் தமிழாக்கம் செய்கிறார். மிகச் சிலவற்றைத் தமிழ்வடிவப் படுத்திப் பார்க்கிறார்.

சிலவற்றைப் பார்க்கலாம்.

பிரேக்கை 'அடக்கி' (வ. 189) எனவும் ஆயத்த உடைக் கடையைச் 'செய்துணிக்கடை' (தி. 48) எனவும் காய்ச்சல் மானி, வெப்பமானி போலப் பொருட்செல்வம் பற்றிய அளவு கருவியைப் பொருள் மானி எனவும் (தி. 22), இலக்கியக் காலப்பகுதிகளைக் காலப்பாடுகள் (இ. 38) எனவும் இங்ஙனம் அமையும் தமிழ்ச் சொல்லாக்கங்கள் பலவாகும்.

அதிகாரிகளை அரசு வினையாளர் (தி. 55), அரச வினைஞர் (கா. 50) எனச் சுட்டுவர்.

சங்க இலக்கியம் என ஆளினும் அவைய இலக்கியம் எனவும் குறிப்பிடத் தவறார். (கா. 196)

பஞ்சசீலம் ஐந்தொழுக்கம் எனப்படும். சிதம்பர இரகசியத்தைத் 'தில்லை மறை' என்பார். (தி. 15)

சுதந்திரப் போராட்டத் தியாகிகள், மொழிப் போராட்டத் தியாகிகள் சுருக்கமாகவும் செறிவாகவும் விடுதலைப் பலிஞர்கள், மொழிப் பலிஞர்கள் எனப் படுகின்றனர். (இ. 5)

வரதட்சிணை 'வரன் காணிக்கை' எனப்பட்டது. 'வரன் கொடை' எனவும் ஆண்டுள்ளார். பின்னர் அது மதிப்புறுவது போலாவதால் 'வரன்விலை' (இ. 14) எனவே ஆளப் பெறுகிறது. உலக அனுபவம் உலகப் பயில்வு எனப்படும். (கா. 117) பயில்வு – அனுபவம்.

பிரச்சாரம் என்பது 'பறைப்பு' ஆகும். (இ. 4) மணிமேகலை சமயப் 'பறைநூல்' எனப்படும். (கா. 148) தேவாரம் சமயப் 'பறைவுப் பாடல்' எனப்படும். (இ. 62)

பிராய்டிசம் 'புருடியம்' எனப்படும். (இ. 10) பலூன் (வ. 176) எனவும் அதுவே 'பருமன்' (இ. 82) எனவும், பலுவன் எனவும் ஆளப்படக் காண்கிறோம். பலூனும் தமிழ் ஒலி வடிவக் கட்டுக்குள் அடங்குதலால், அதை அவ்வாறே ஆளுதலில் குறையின்று என எண்ணியிருக்க வேண்டும். பின்னர் அதைத் தமிழாக்கியும் காட்டும் அவர் மனப் போக்கு அறியற்பாலது.

## சுருக்கச் செறிவு வடிவங்கள்

மாணிக்கத் தமிழில் இறுதியாகவும் உறுதியாகவும் அறிய வேண்டிய ஒன்று 'சுருக்கமுடைமை', பத்து அழகுகளைச் சுட்டும் போது பவணந்தியார் 'சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்' என்பார். சுருக்கமாகச் சொல்ல வேண்டும். அதற்காக விளங்காமற் போய்விடக் கூடாது. விளங்குமளவு அமைத்துச் சுருக்கிக் கூறப் பழக வேண்டும்.

செறிவு என்பது கருத்துச் செறிவு. மேலும் மேலும் விரிக்க இடங்கொடுக்கும் பொருட்செறிவு. மாணிக்கனார் சொற் செறிவையும் பேணுகிறார். பொருள் பொருந்தச் சுருக்குவதால் சொற்சுருக்கம் என்பதனிலும் சொற்செறிவு என்பது பொருந்துகிறது. அதனுடன் தொடர்ச்செறிவும் நடைச் செறிவும் மிக்கது மாணிக்கத் தமிழ்.

திருவள்ளுவர் சொற்சுருக்கம், பொருட் சுருக்கம் பேணி, வழிகாட்டியிருப்பதாலும் தொல்காப்பியம் இலக்கணக் கூறுகளை மருந்துக் 'குளிகை'கள்போல் உள்ளடக்கிக் கூறியிருப்பதைப் படித்த பயில்வுடைமையாலும் செம்மல் மாணிக்கனார் தமது உரைநடை யனைத்தையும் இச் 'செறிவு' நோக்கியே - சுருக்கம் நோக்கியே - படைத்துள்ளார். சில போது அவர் எழுதும் ஒரு வரி ஒரு

பத்தியாதற்கும் ஒரு பத்தி ஒரு கட்டுரையாதற்கும் ஒரு கட்டுரை ஒரு நூலாதற்கும் உரியபோல் விரிக்குமளவு அடக்கமுடையனவாயிருக்கும். "பல சொல்லக் காமுறுவர் மன்ற, மாசற்ற சில சொல்லல் தேற்றா தவர்" என்ற குறளுக்குத் திருக்குறளே சான்றாகும். அதுபோல வள்ளுவத்தில் திளைத்த மாணிக்க எழுத்துக்கும் அது பொருந்தும்.

ஒல்லும் வகையால் என்பதுபோல் சொற்பொருள் சிதையாத அளவு சுருக்குவார்.

'ஒதுக்குப் புறமாக' என்பதை 'ஒதுப்புறமாக' என்றால் போதுமே! (தி. 27). இக்கை விட்டுவிடுவார்.

'வணக்கொடு' அன்பர்கள் மீண்டனராம். (வ. 112) அத்து சாரியை வேறு எதற்கு? பொருளோ, சொல்லோ சிதையவில்லையே?

'சேர்க்கமாட்டான்' என நாம் நீட்டுவதை, 'சேர்க்கான்' என்றே நிறுத்துவார். (தி. 100) குழந்தைமனம், குழவிமனம் (தி. 118) ஆவதேன்? ஓரெழுத்து மிஞ்சுகிறதே!

சொற்பொருள், இடம் நோக்கி விளங்கிவிடும். காலப் போக்கில், பழகப்பழகச் சொல், தன் சூழலை வைத்துப் பொருளை விளக்கும் வன்மை பெறும். எண்ணும் உரிமையை 'எண்ணுரிமை' என்பார். (தொ. 308) 'கருத்துரிமை எண்ணுரிமை சொல்லுரிமைகள்' எனத் தொடர் அமைவதால், எண்ணின் உரிமை ஆகாது. ஆசிரியன் பணியை 'ஆசிரியம்' என்றால் போதும். இடம் நோக்கி அது தொழிலென உணரப்படும். உரை விளக்குபவரை 'உரைவிளக்கி' எனல்; பாடத்திட்டம் அமைப்பவரை 'அமைப்பி' எனல்; திட்டம் தீட்டுபவரைத் 'திட்டர்' எனல் எல்லாம் சுருக்கம் கருதியன. 'திட்ட மிடுபவர்' எனல் வேண்டுமா? திட்டத்தர் என்றேனும் கூறலாகாதா? 'திட்டர்' - திட்டுபவர் ஆகாதா? ஆகாது. இடம் நோக்கித் திட்டம் - திட்டர்; திட்டம் இடுபவர்

ஆவார். மாணிக்கச் சொல்லாக்கம், தொடராக்கம், பொருள் ஆக்கம், கட்டுரையாக்கம், நூலாக்கம் எதைத் தொடினும் 'சுருக்கமும் செறிவுமே' காணப்படும். இன்னும் இன்னும் என மேலும் மேலும் எனச் செறிவு நோக்கிச் சுருங்கச் சொல்லும் அவர் மனப்போக்கை அவரெழுத்தனைத்திலும் கண்டு மகிழலாம்.

விரிவிடை கூற (த.கா. 163), மூலாசிரியர்கள் (தொ. 17) என்பன சுருக்கப்பட்டுள்ள விதம் காண்க. கொள்கையை விடக் 'கோள்' நல்லது – அதே பொருள்தானே. கோளினள் (கொள்கையினாள்). (கா. 143) நிகழ்காலத்தவரும் எதிர் காலத்தவரும் என நாம் காலம் செலவழிப்பதை நிகழரும் எதிரரும் (இ. 102) எனச் சிக்கனப்படுத்துவார். கருத்தரங்கம் இவரிடம் 'கருத்தகம்' ஆகும். (கா. 76). இடைக் காலோர் (கா. 89) என்று இடைக்காலத்தவர் சுட்டப்படுவதிலும் இடைத் தமிழோர் (இ. 110) ஆவதிலும் உள்ள சுருக்கப்பாடுகள் கவனிக்கத்தக்கன.

பிசிராந்தையாரைப் 'பிசிரார்' என்றே குறிப்பர். (ச. 83) முழுதையும் (ச. 108) – முழுவதையும் என்பதை முழுதும் கூறாதது சிக்கனப்பாடே. அகரச்சாரியை விரிவேன்? தெரிவிப்பான் என்பது 'தெரிப்பான்' ஆனாலும் (வ. 166) பொருள் அதுவேதான். அதுபோலத் 'தெளிவிக்கும்' தெளிக்கும் ஆகும். (மா உரை 35) அருளி (கா. 113) என அருளாளனையும், ஈகி (கா. 114) என ஈபவனையும், வழங்கி (கா. 112) என வழங்குபவனையும் சிக்கப்படுத்தியது, மேலும் சொற்செல்வ வளம் பெருக்கவேயாம்.

சோழநாட்டின் ஏற்றுமதி இறக்குமதி வணிகத்தை எழுத வேண்டும். இதை எவ்வாறு சுருக்கலாம்? எண்ணிச் சொல்லுங்கள்! மாணிக்கப் பேராசான் எழுதினார்,! "சோழ நாட்டின் இருமதி வணிகத்தை' என்று, (தி. 39) இதன் பெறுமதி அவர்தம் தமிழ்மதி தந்த தனிமதியேயன்றோ?

தொலைந்த சிலம்பு என்பதனிலும் 'தொலை சிலம்பு' என்றாலே (கா. 104) இன்னும் காணவில்லை என்பதாயிற்று.

நூலுக்குப் பெயர் இடுவதற்கு என்று விளக்கமாக எழுதாமல், நூற்பெயரீட்டிற்கு எனச் சுருக்குவதால் *(கா. 89)* விளங்கும் தன்மை கூடவே செய்கிறது.

கேட்ட அளவில் — கேட்டளவில்

கண்ட அளவில் — கண்டளவில் *(ச. 45)*

வெறுத்த அளவில் — வெறுத்தளவில் *(கா. 61)*

இங்ஙனம் அகரத்தைத் தொகுத்து மிகப்பல இடங்களில் ஆளுதலால், சொற்சுருக்க நோக்கம் வரிக்கு வரி, சொல்லுக்குச் சொல் காணப்படுவதை உய்த்தறியலாம்.

சுருக்க வரைவு (Epitome) என ஒரு பயிற்சி உண்டு. ஒரு பத்தியை / பக்கத்தை மூன்றில் ஒரு பகுதியாகச் சுருக்கி எழுதப் பழக்குவர். மாணிக்கத் தமிழ் அங்ஙனம் சுருக்க வரைவுப் பயிற்சிக்குப் பயன்படாது; ஏனெனில் அது முன்னமேயே திட்டமிட்டு, ஒரு நல்லாசிரியனால் மூன்றில் ஒரு பங்காக / செம்பாகமாகச் சுருக்கி எழுதப்பட்டுள்ளது. பயனில பாரித்துப் பேசுதல் தமிழர்களின் தனிச்சிறப்புப் பண்பு. தமிழராய்ப் பிறந்த திருவள்ளுவர் 'பயனில சொல்லாமை' பற்றி ஓரதிகாரம் பாடினார். இந்தத் தமிழர் களைத் திருத்தவும், செறிவு நோக்கிய எழுத்துப் பயன்படு மென மாணிக்க உள்ளம் கருதியிருக்கக் கூடுமல்லவா?

5

## உவமைச் சுவை தேரும் உத்தமர்

உவமையும் பழமொழியும் எளிய மக்களும் கையாள்வன. பழமொழிகள் உவமை வடிவினவே; பல எடுத்துக்காட் டுவமையாயிருக்கும். பொருள் விளக்கத்திற்கு மட்டுமல்லாமல் கருத்து அழுத்தத்திற்கும் அவை பயன் படுவன. கருத்துத் தோற்றத்திற்கே உவமை இயல்பாக வந்து விழுகிறது! 'அமிழ்தம் மாதிரி இருக்கிறது!', 'நாய் மாதிரி அலைகிறாயே', 'கழுதை போலப் பொதி சுமக்கிறார்கள்'. உலக வழக்கில் பயன்படும் இது, இலக்கியத்தை நயப்புறுத்தவும் இடம் பெறும்.

இளம்பூரணர் உவமை என்றால் என்ன என்று விளக்க முற்பட்டார். "புலனல்லாதன புலனாக்குதற்கும் அலங்கார மாகிக் கேட்டார்க்கு இன்பம் பயத்தற்கும்" என்றார். புலனாக்குதல் கண்ணாற் கண்டதுபோல், காதாற் கேட்டது போல் நெஞ்சில் விளங்கப் பதிவித்தல். சுவை - அழகு - நயம் சொல்லும் உவமையையும் முறையையும் பொறுத் துளது.

'மாணிக்கத் தமிழ்' என்று இனங்காட்டுவதில் அடுத்து முன்னிற்பது மாணிக்கனார் கையாளும் உவமைகளே. இவ்வுவமைகள் வருமிடங்களை அலசிப் பார்த்தால், நயந் தோன்றப் புதிய பார்வையில் உவமை சொல்லவேண்டு மென்ற 'திட்டமிடல்', 'முன் ஆயத்தம்' ஆழத்தே இருப்பது உணரப்படுகிறது. இதில் நல்ல திறமையும் உளது. இது அவர் எழுத்துக்கள் அனைத்திலும் ஊடாடி நிற்கிறது.

வலிந்தென்று தோற்றாமல், எளிதில் வந்து விழக் காரணம், இவருக்கு அதிலுள்ள பற்றும் திறனுமேயாம். ஏறத்தாழ நூறு உவமைகளைத் தேர்ந்தெடுத்து, அவர் தம் ஆர்வம், அறிவு, அனுபவம் இவற்றைக் கோடிட்டாற்போல் கண்டறிய முற்படுவோம்.

சிறுசிறு உவமைகளாக மட்டுமல்லாமல், உவமை விளக்கங்களாகவும் உவமை நடையாகவும், அடுக்குவமை களாகவும் இவர் கையாளும் விதங்களைப் பார்த்தால், உவமை சொல்லி விளக்குவது இவர் தம் பிறவி இயல்பென்றும் அறுதியிடலாம். பேச்சுநடை, உலகவழக்கு, எளிமை கருதியும் இவை இடம் பெறுகின்றன.

'வள்ளுவம்' தொடங்கும் போதே, ஓர் உவமை வழியில், வள்ளுவர் நெஞ்சை மிக விரிவாக விளக்கிக் காட்ட முயல்வது புலனாகும். வள்ளுவர்க்கும் அவர் படைத்த குறளுக்கும் தொடர்பு என்ன? நிலத்தில் இட்ட வித்து, மரமாகி இப்போது காய்த்துக் கனிந்து 1330 வித்துக்களைத் தாங்கி நிற்கிறது.

> "வள்ளுவர் நெஞ்சம் நிலத்திட்ட விதை ஒக்கும்; அவர் நெஞ்சம் தந்த அறிவு அவ்விதை தோற்றிய மரம் ஒக்கும்; அவ்வறிவு வெளிப்படுத்திய குறள்கள் மரம் தாங்கிய விதைகள் ஒக்கும்."

மேலும் எண்ணுவோம்.

> "தோன்றிய மரத்திலும் அது தாங்கும் பல வித்துக்களிலும் இட்ட முதல் விதை உடனிலையாய் வாழ்கிறது. மேலெழுந்த எல்லா வித்தும் ஒருதாய் வித்தின் உரத்தைக் கொண்டு அதன் பண்பைத் தந்து நிற்கின்றன. அதுபோல, வெளிப்பட்ட அனைத்துக் குறள்களும் வள்ளுவர் நெஞ்சுரம் பெற்று அந் நெஞ்சின் நினைவைப் புலப்படுத்து நிற்கின்றன."

இவ்வுவமையை மேலும் தொடர்ந்து நினைவோம்.

"ஒரு வித்து தாய் மரமாய்த் தோன்றி அளவிறந்த வித்துக்களை ஈனும்." (வ. 6)

## வேளாண்மை

வித்தும் மரமும் பற்றிய உவமைபோல, வேளாண்மையும் அதன் தொடர்புடையனவுமான சில உவமைகள் உள. "உழவால் வித்தின் உள்ளீடு வெளிவரல் போலக் கல்வியால் அறிவென்னும் மக்கட் பிறப்பின் உள்ளீடு புலப்படும்." (வ. 166) உள்ளீடாக இருக்கும் அறிவையே கல்வி வெளிக் கொணர்கிறது - இல்லாத ஒன்றைக் கொண்டு வருவதில்லை - வித்தின் இயல்பிற்கேற்ற உள்ளீடே வெளிப்படல் போல, உள்ளிருக்கும் அறிவினது இயல்புக்கேற்பவே வெளிப்பாடுமிருக்கும் என நீள நினையத்தக்க வகையில் இவ்வுவமை உளது.

பல இடங்களில் பழமொழி உவமைகள் வருகின்றன. "உழவக் குழந்தை என் தகப்பன் குதிருக்குள் இல்லை என்பது போல" (கா. 118) என்பது அவற்றில் ஒன்று. புல்லும் பூண்டும் பூமியோடு படிந்து கிடக்கும். மழை பெய்யின் உயிர்ப்புப் பெற்றுத் தலைதூக்கும். நமது அகச் சிந்தனைகள் பழமைப்படுவதில்லை. அழிந்தனபோல் தோற்றினாலும், 'மழைக்குப் பின் வளரும் பூண்டு போலச் சில இடங்களில் உயிர்ப்புப் பெறும்' என்பார் இவர். (தொ. 364)

சங்கப் பாடல்களுக்குக் காலமுறைப் பதிப்பும், ஆய்வும் தேவை என வற்புறுத்துகின்றார். "கால முறையில் கட்டுண்ணா எவ்வகை ஆய்வும் ஆய்வு முடிவுகளும் வேரூன்றா மரம் போலவும் கருங்கட்டு இல்லா அரமியம் போலவும் சரிவு படுவன" என்பது இவர் வாக்கு. (ச. 209) "ஆலமரம் அரசமரம் போல எண்ணக் கிளை பெருக்கிச்" சிந்தனை வறியவன் வாழமாட்டான். பாலை நிலக் குறும் புதர் போல வாழ்வு முடங்கியாக இருந்து மடிவான்." (தி. 24) இன்றையத் தேர்வு முறையில் வினாக் குறிப்போர் எதிர்பார்ப்புக்கும் விடையெழுதும் மாணவர் தகுதிக்கும்

இடைப்பட்ட ஏற்றத்தாழ்வு 'மரக்கிளை போல்' அகலச் செல்வதால் (வ. 21) அது பயன்படுவதில்லை. கிளை பெருக்கி நிழல் தரும் ஆலமரம் அரச மரங்களில் ஆசானுக்கிருந்த பற்றுதலே உவமையாக வெளிப்படுகிறது. முள் உள்ள மரக்கிளையாயினும், சிலபோது நமக்குப் பயன் படுகிறதல்லவா? "சுற்றத்தார், பயனுடைய முட்கிளை போல் ஒடியாது தழுவுதற்கு உரியோராவர்" என்று சுற்றத்தில் குற்றங்குறை காணினும் ஒற்றுமைப்பட வாழ்வதை வள்ளுவ விளக்கத்தில் இவர் வற்புறுத்துகின்றார். (வ. 224)

செடி கொடி மரங்களில் இயல்பாக ஈடுபாடுடைய இவர்தம் உள்ளம், நீரும் நீர்ப்பாசனமும் பற்றிய நடை முறைகளிலும் ஈடுபடுகிறது. சில குறிப்பிட்ட உத்தியடிப் படையில் அணுகினால், குறளின் "மயக்கமற்ற பொருள் மணல் நீர்போல் தோன்றும்" என்று சுட்டிக் காட்டுகிறார். (தி. 78) மணல்மேல் நீர் தெளிவாக இருக்கும்; கீழேயுள்ள மணலும் நன்கு தெரியும். இலக்கியக் கலைஞனின் உள்ளம் இங்கு எதிரொலிப்பதை நுனித்தறியலாம். உவமை கூறும் அழகில், ஒரு படைப்பாளியின் மதிநுட்பமும் படிந்து கிடக்கின்றது.

ஈகை இன்று அருகி வருகிறது. எதுபோல? "அடையுண்ட மடைவாய்வழி நீர்க்கசிவுபோல் இன்று அருகி வருகிறதாம்" ஈகை. (வ. 119). நீர்ப் பஞ்சமில்லை; தேக்கம் நிரம்பி வழிகிறது. மனமின்மையே காரண மென்பதை அடைபட்டதால் மடைவாய் வழி நீர்க்கசிவு போல என்னும் உவமைவழி அழகுபட விளக்குகிறார்.

எல்லோரும் உவமைகூறி விடலாம். தெளிவு கருதிய அவ்வுவமை, எத்துணைத் திட்பமும் நுட்பமும்படக் கூறப்படுகிறது என்பதிலேதான் வேற்றுமையுளது. மேலை நாட்டார் உவமை உருவகங்களை 'உருக்காட்சி' எனத் தொகுத்து, படைத்தவனின் பட்டறிவு, திறமை விருப்பு வெறுப்புக்களை அளவிடற்கும் முயல்வர். எல்லோரும்

சொல்லும் உவமைகள், பழமொழி உவமைகள் பல காணப் படினும் மாணிக்கத் தமிழில், தனிச்சிறப்பு வண்ணங் காட்டும் உவமைகளே மிகுதியாகும்.

கற்றவன் கற்றதை உலகிற்கு வழங்க வேண்டும். கற்பவன் கேள்வி மூலம் தன்னை மேலும் வளப்படுத்திக் கொள்ளவேண்டும். கல்விச் செல்வமும் கேள்விச் செல்வமும் இவ்வாறு பயன்படாவிட்டால், 'நன்றியில் செல்வம்' என்பது போல் கெட்டொழியும். இதனைப் "பாயா நீரும் பாய்ச்சல் பெறாப் பயிரும் ஒருங்கு கெடுதல் போல்" (தி. 90) என உவமை கூறி விளக்கும் போது, எத்துணை நீள நினைதற்கு இது இடந்தருகிறதெனச் சிந்தனையுடையார் எண்ணிப் பார்க்கவேண்டும்.

குடும்பச் சிறப்பே நாட்டுச்சிறப்பாகும். தனித்தனிக் குடும்பங்கள் நலமுறுவதே, நாடு நலமுறுவதற்கடையாள மாகும். "பேராறு நேரே வயலை வளப்படுத்தாது; சிறுவாய்க் கால்தான் வயலை வளமாக்கும்". | (தி. 25) சாதி, குலம், பிறப்பில் அழுத்தம் வைக்காத திருவள்ளுவர் குடி (ஒரு குடும்பப் பின்னணியாம் குடிமை) குடும்பம் இரண்டில் மட்டுமே அழுத்தம் வைத்து, அவை நலம் பெற வழிகாட்டு கிறார். அவற்றுள் குடும்பத்தை அவர் போற்றுவதைச் சுட்டுங்கால், சமுதாயமாகப் பார்ப்பது பெரிதென்றாலும், குடும்பமாகப் பார்த்துச் சீர் செய்தலே முதன்மை யுடையதென்பதை 'வாய்க்காலுக்கு' ஒப்பிட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

காவிரிப் பெருக்கு வயல்தோறும் பாய்தலை இரண்டு இடங்களில் உவமைப்படுத்துகிறார். கண்ணதாசன் கவி வளம் பற்றி விளக்குமிடம் ஒன்று: "பட்டுப்போல் நெல் விளையும் பாடிவரும் காவேரி' என்பார் கவிஞர். இவர்தம் செய்யுட்களும் அணைதிறந்த மடைதிறந்த காவேரி நடப்புப் போலச் செல்வதைச் செவி களனாக நுகர்கின்றோம்." (இ. 136) மண்ணியல் சிறுதேரில் கணிகை வசந்தசேனை வறுமைப்பட்ட சாருதத்தனை, விரும்புகின்றாள். "அவனது

குண நலங்கட்காகக் காதலிக்கிறாள் என்பது, இந் நாடகம் எங்கணும் காவிரி வாய்க்கால் போல ஓடிக் கிடக்கும் புரட்சிக் கருத்தாகும்" *(கா. 233)* ஏறத்தாழப் பதினைந்து நூறாயிரம் ஏக்கருக்குப் பாயும் காவிரித் தண்ணீர், எத்தனை வாய்க்காலாய்ப் பரந்து, விரிந்து ஓடும். நூன் முழுவதும் ஓடிக் கிடக்கும் ஒரு கருத்துக்குப் பொருந்திய புதிய உவமை இது.

முகவை, பசும்பொன், புதுக்கோட்டை மாவட்டங் கள் கண்மாய்ப் பாசனத்தால் செழிப்பவை. வறண்ட பூமியில், நம் மன்னர்கள் காலத்தில் இவ்வாறு மழை நீரைத் தேக்கினாலன்றி இங்கு வேறு வழியில்லை என்று இப்பாசன முறை கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இன்று ஐரோப்பியர் சப்பானியருட்படப் பலரும் இயற்கைக்கு ஏற்ற இம்முறையை ஆராய்ந்து பாராட்டுகின்றனர். "கண்மாய் முழுதும் பரவி நிற்கும் முழங்காலளவு நீரால் நன்செய் பயிராகாதது நிகர்ப்ப", பரவலாகப் பொது அறிவு மட்டுமே பெற்று ஒழிவதால், துறைச் சிறப்பறிவுக்குறைவுண்டாகி, இந்நாடு கீழே போகிறது என்பார் இப்பேராசான். *(வ. 177).* இங்ஙனம் சுற்றுச்சூழலை நுனித்தறியும் பாங்கு இவர் எழுத்தில் வெளிப்படுகிறது.

## உவமை மேல் உவமை

உவமைக்கு மேல் உவமையாக ஏதேனும் ஒரு வகையில் அடுக்கிச் சொல்லவந்த கருத்தை, அழுத்தந் திருத்தமாக விளக்குவதும் இத்தமிழ்ச் செம்மலார்க்குக் கை வந்த கலையாகும்.

தொல்காப்பியம் இலக்கணநூல். அதில் நயங் காண்பது இயலாத ஒன்று. மேலும் தொல்காப்பியத்தை அஃதொரு பழந்தமிழ் இலக்கண நூலென்பதற்காகவே, அதன் பெருமையறியாமல் வெறுக்கப் பழக்குவார் பலர். இந்நிலையில் 'தொல்காப்பிய நயம்' என இவ் ஆசான் விளக்க முற்படுகிறார். அங்ஙனம் தொடங்கும்போது

"தொல்காப்பிய நயம் என்ற தொடர், காய்ச்சிய நாராசத்தைக் காதில் ஊற்றுவது போலவும் கல்லில் நார் உரிப்பது போலவும் வெங்காயத்தில் விதை தேடுவது போலவும் படும்" என்று குறிப்பிடுகின்றார். *(தொ. 1)* இன்று தொல்காப்பியம் பிற நாட்டினராலும் படித்து ஆராயப் படுகிறது. இது கண்டு மனம் மகிழும் இவர், "நீருள் ஒளி நிழல் போற் கிடந்த இத்தமிழ் முதனூல் இன்று குன்றின் மேலிட்ட மின்னொளி போலப் பல நாட்டிலும் பரவி வருவது கண்டு" தமிழர்கள் பெருமிதம் கொள்வதாகக் கூறுகிறார். *(தொ. 65)*

ஒருவரது சொல்லும் நினைவும் கல்வியும் எல்லாம் அவர் தம் பின்வாழ்க்கையை முன் புலப்படுத்தும் அறிகுறி என்பதை வற்புறுத்த வந்தவர், "விதையின் முளை மண்மேல் சட்டென வந்துவிடுவதில்லை; நீர்க்கோள் உடனே சினைப்பதில்லை," என்றும், உவமை கூறி அழிவு ஆக்கங் கட்கு உரிய காரணப் படிகள் முன்னே மறைவாகத் தோன்றிப் பெருகி உருவாகின்றன என விளக்கிச் செல்கிறார். *(கா. 20)*

பாரதியின் புலமைபற்றி விளக்குமிடத்து, "நீர் வீழ்ச்சி, பருந்தின் வீழ்ச்சிபோல பாட்டில் கருத்துச் சீர்த்த விடத்துத் தக்க சொற்களைப் புலவன் பெய்கின்றான்; அல்லது சொற்கள் வந்து விழுகின்றன" *(இ. 191)* என்பார்.

புரட்சி என்பது என்ன? எங்கிருந்தோ பொத்தென விழுவதன்று புரட்சி; ஆகாயத்தில் பூப்பதன்று புரட்சி. புரட்சியும் மரபிலிருந்தே பிறக்கிறது. மரபையே மாற்றினும் உடைப்பினும் புதிது படைப்பினும் முன்னதின் தொடர்ச்சியே அது. மரக்கிளைகள் அடிமரம் இன்றி ஆரவாரிக்க முடியாது. சிலர் தம் அறியாமையால் மரபை அறவே வெறுப்பவர் போல் பேசி, தம் மடமையை உலகறியப் பறை சாற்றுவர். இதனையுணர்ந்த இப் பெருமகனார், "முகத்தினுள் கண்துடி போலவும் நீரோட்டத்திற் சுழி போலவும் கண் விழியிற் காதற் கூறு

போலவும் புரட்சியும் மரபினுள் ஒரு பகுதி என்பதனை இலக்கியத் திறனிகள் உணர வேண்டும்" என நயம்பட உரைப்பார். *(இ. 134)*

"புதுச்சாலை மிதிக்க மிதிக்கப் பழந்தடம் ஆவது போல இன்று புரட்சி, நாளை மரபாய்க் கலந்து விடும்" என்னும் போதும் மரபு பற்றிய விளக்கம் தெளிவுபடுகிறது. *(கா. 134)*

பாத்திரப் படைப்பில் இலக்குவனுக்கும் பரதனுக்கும் என்ன வேறுபாடு என்பது பொருத்தமான உவமைகள் மூலம் விளக்கப்படுகிறது. "காண்டந் தோறும் வரும் இலக்குவன் நீர்மேல் நீள நீந்திச் செல்பவனை ஒப்பவன். அயோத்தியா காண்டத்தோடு நின்று, இடைக் காண்டங் களில் மறைந்து யுத்த காண்டக் கடைசியில் மீண்டும் தலையெடுக்கும் பரதன், ஓரிடத்து நீர் மூழ்கி உள்ளே நீந்திப் பின் ஓரிடத்து வந்து தலை காட்டுபவனை ஒப்பவன்". *(க. 112)* மனங்கொள்ளுமாறமைந்த இவ்விளக்கம் புதுமையாயும் பொருத்தமாயும் உளது.

### சிறு துரும்பு உவமை

'சிறு துரும்பும் பல்லுக் குத்த உதவும்' என்பது ஒரு பழமொழி. அத்துரும்பும் இப்பேரறிஞர்க்குச் சிறந்ததொரு ஒப்புமை காட்டப் பயன்படுகிறது. ஒரே பொருள் இடம் காலம் ஆளுக்கு ஏற்பப் பல எண்ணங்களைத் தோற்று விக்கும் என்பதை விளக்க இவ்வுவமை ஆளப்படுகிறது. "ஒருவற்குப் பல்லுக் குத்தும் நினைவை, ஒருவற்குக் காது குடையும் நினைவை, ஒருவற்கு நகவழுக்கு எடுக்கும் நினைவை, ஒருவற்குப் பொட்டு வைக்கும் நினைவை ஒருவற்கே பல்வேறு காலங்களில் இவ்வனைத்து நினைவு களை ஒரு சிறு துரும்பு பிறப்பிக்கக் காண்கிறோம்." *(வ. 9)* என்று எளிய உவமை கூறிப் பின் அரிய செய்திகட்குச் செல்கின்றார்.

பழைய உவமை ஒன்றைச் சொல்லுமிடத்துப் புதிய தொன்றையும் இணைத்துக் கூறுவதையும் இவரிடத்துக்

காண்கின்றோம். இவை புதிய உவமைகள் படைப்பதில், இவருக்குள்ள ஆர்வத்தைத் தெற்றெனப் புலனாக்குகின்றன. பண்டித மணியின் திருவாசகவுரை பற்றிய கட்டுரையில், 'சோற்றுப் பதம், உப்புப் பதம் போலச் சிலவற்றைக் காண்போம்' என்பார் இவர். (இ. 87) ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் பார்ப்பது போல, ஒரு சட்டிக் குழம்புக்கு ஒரு துளி பதம் பார்த்தால் போதுந்தானே? உப்புப் பதம் பார்க்கும் இது, பழையதுடன் ஒட்டிக் கொண்டுளது.

நம் அறிவு வழியிலேயே மனம் இயங்குகிறது என்பதை, "ஊசிவழி நூல் செல்வது போலவும், இருப்புப் பாதை வழி புகையூர்தி இயங்குவது போலவும்" எனப் பழமையும் புதுமையும் கலந்து கூறுகிறார். (தி. 45). தொல்காப்பிய உரைநயத்தை விளக்க முற்படும் போதும் "கல்லில் நாருரிப்பது போலாகும்; பல்லில் முத்தெடுப்பது போலாகும்'' என்று சிலர் கருதக் கூடும் எனத் தொடங்குகிறார். (தொ. 263)

கொல்லன் தெருவில் ஊசி விற்கலாமா? என்று கேட்பது பழையமொழி - உவமையுமாகும். நாழிகைக் கடையில் மணி பார்க்கலாமா? (இ. 6) என்பது இவர் புது மொழி.

தொல்காப்பியச் செய்யுளியல் கடல் போன்றது. யாப் பருங்கலக் காரிகையோ வாய்க்கால் போன்றது. முன்னது புலவர்களுக்கு எழுதப்பட்டது. பின்னது மாணவர்க்குப் பாட நூல் போல்வது. எனவேதான், "முதற்கண் செய்யுளி யலைப் படிக்கப் புகுவார் குன்று முட்டிய குருவி போல்வர்; முதற்கண் காரிகையைப் படிக்கப் புகுவார் கன்று முட்டிய காராப் போல்வர்" என்று பழையதற்கு இணையான புதிய உவமையைப் படைத்து மொழிகின்றார். (தொ. 233)

## இயல்பான உவமைகள்

பட்டிக்காட்டான் பட்டணத்தைப் பார்ப்பது போல எனப் பழைய உவமைகளும் இடம் பெறும். திருப்பாவை

திருவெம்பாவைக்குள் சில வேற்றுமைகளிருப்பினும் "வாய்க்காலின் இருகரை போல் நெருங்கியவை" என்பதே ஒப்புமையால் பெறப்படும். *(இ. 137)* எதையும் தன்னிலையில் வைத்துக் காண்பதே மனித இயல்பு. "செய்துணிக் கடையில் பல அளவு சட்டைகளிருந்தாலும் நம் உடம்புக்குப் பொருந்தியதைத்தானே வாங்குகிறோம்" *(தி. 48)*

"நில வளர்ச்சிக்குக் குழி தோண்டுதலும் பள்ளம் பறித்தலும்" தேவைப்படுகிறது. அதுபோல வாழ்க்கை வளத்துக்குப் பல்வகைத் துன்பங்கள் கட்டாயம் தேவை. "வெள்ளத்தால் எறும்புக் குழிகள் மூடப்பட்டாலும் புதிய குழிகளை எறும்பினங்கள் உண்டாக்கிக் கொள்கின்றன" அது போல இடையூறுகள் உயிராற்றல்களை வேகமாக வெளிப்படுத்த வருவனவேயாம். *(தி. 29)* செல்வமும் "வழக்காடுவார்க்குச் சட்டம் போல வளைந்து கொடுக்குமாம்." எந்த நிலையிலும் யாரிடத்தும் மாறக் கூடியதாம். *(வ. 73)*

**உடலும் உடல்நலமும்**

நம் உடம்பைப் பற்றியும் உடல்நல மருத்துவம் பற்றியும் சிந்தனை காணப்படுகிறது. "உடம்பின் அழகு போல் இயல்பில் அமைந்த உள்ளழகு" பற்றிப் பேசுகிறார். *(வ. 89)* "ஆளுக்கு ஒரு முகம் போல ஆளுக்கு ஒரு தனிப் போக்குடையோம்" என்று அவரவரும் தாம் தாம் உணர வைப்பார். *(வ. 35)* "விட்டுவிட்டு மருந்துண்பார் போலப்" பயன் பெறார் என்பதால், தொடர்ந்து மருந்துண்ண வேண்டிய மருத்துவமுறை உணர்த்தப்படுகிறது. *(வ. 64)* திருக்குறளைப் பொது நூல், பொதுமறை எனப் பறை சாற்றுவதில் இவருக்கு உடன்பாடில்லை. அப் பெருநூல் தனி மனித நிலைகட்கேற்பப் பயன் கொள்ளுமாறு புகலப் பட்ட பேரறநூல். "தெரு மருத்துவள் போலப் பொதுமை மருந்து சாற்றிக் கழிப்பதால்தான்" *(வ. 46)* அந்நூல் செயல் நூலாகாது போயிற்று என்பது இப் பேராசானின் குற்றச்

சாட்டு. இன்றும் பார்க்கிறோமல்லவா, தெருவில் சில மூலிகைகளையும் மருந்துப் போத்தல்களையும் வைத்துக் கொண்டு, எல்லாவித நோய்களையும் கூறி அவை அனைத்தும் நீங்குமென இத் தெருமருத்துவர் கூவிநிற்பர்.

தமிழ்க் காதலில் துறையாராய்ச்சி பற்றிக் கூறும் போது, அங்ஙனம் ஆராய்வது "தனியுறுப்பு மருத்துவம் போல்வது என்று விட்டமைந்தேன்" என்பார். (ச. 112) இன்று கண்ணுக்கு, காது மூக்கு தொண்டைக்கு எனத் தனித்தனி மருத்துவம் பார்ப்பதை உவமைப்படுத்துகிறார்.

உலகில் யாரும் தனித்து வாழ முடியாது. "ஒவ்வொரு வர்க்கும் பிறரோடும் பிறவுயிரினங்களோடும் தொடர்புகள் நரம்பு மண்டலம் போல் பின்னிச் செறிந்து கிடக்கின்றன." *(ச. 34)*

ஒரு செய்யுளின் ஈற்றடிகள் முன்னைய அடிக்கருத்துக் களைத் தாங்கி, முத்தாய்ப்பாக விளங்குவதைக் கம்பன் பாடல்களின் ஈற்றடிகளை வைத்து, இவர் விளக்கும் திறம் புதிய அணுகு முறையாகும். அதற்கு இவர் "உடற் பாரத்தைக் காலடி தாங்குவது போலக் கூற்றின் புகலிடமாக ஈற்றடிகள் உள" என்று விளக்குகிறார். *(கா. 165)*

"பல்லும் நாவும்போல இணைந்து விளங்குதல்" என *(தொ. 23)* உவமை கூறுமிவர், "வாயுட் புகுந்து ஒட்டிய ஒரு சிறு வேற்றுப்பொருளையும் நா வளைத்துத் துளைத்து உராய்ந்து எப்படியும் வெளியேற்றுவது போலத் தமிழும் தன்னுட் சிலரால் புகுத்தப்படும் அயலொலிகளைக் காலப் போக்கில் ஒதுக்கிவிடக் காண்கிறோம்" என்று தமிழின் ஆற்றலைப் பற்றிக் கூறுகிறார். *(தொ. 108)*

தமது ஆய்வுக் கருத்துரைகள் யாவும் தாமே வியந்து போற்றிய தொல்காப்பிய நயம், தொல்காப்பிய உரை நயங்கள் போல இலக்கியப் பண்புடனும் திகழவேண்டு மென்ற எண்ணம் இயல்பாகவே இம் மூதறிஞரிடம் குடி கொண்டிருந்தன. 'மனைவியின் உரிமை' நாடகத்திற்குப்

பிறகெழுதிய முதலாய்வு நூலாம் வள்ளுவத்திலேயே இப் பண்பு படிந்து கிடக்கிறது. இவரெழுதிய கடைசிக் கட்டுரை வரை இப் பண்புகள் ஒரு சீராக அமைந்து கிடக்கின்றன என்பது மட்டுமன்று; இவர்தம் முதல் ஆய்வு நூலிலேயே அவை முதிர்ச்சி பெற்று, கனிந்த நிலையிற் காணப்படுதலே வியப்பளிப்பதாகும். மற்றவர்களிடமெல்லாம் காணும் படிநிலை வளர்ச்சி, இவரிடம் ஒருநிலை வளர்ச்சியாகத் தொடர்ந்து ஓடிக் கிடக்கின்றது.

இவர் படைக்கும் புத்தம் புதிய உவமைகளைத் தக்க சான்றுகள் வழி காண்பதன்முன், மேலும் சில முத்திற உவமைகளைக் காண்பது இவர்தம் மனப்போக்கை வெளிப் படுத்தும். குடும்பத் தொடர்பானவை, இவர் பிறந்த குலத் தொடர்பானவை, இவரது ஆசிரியத் தொழில் தொடர் பானவை அவை. ஒரு சிறந்த எழுத்தாளன் வாழ்க்கையை அழுந்த அனுபவித்து, ஐம் புலன்களாலும் ஆர நுகர்ந்த ஐம்புலப் பட்டறிவுடையவன் ஆவான் எனவும் அத்துணை யனுபவ நிலையே அவனைப் பிறரினும் மேம்படுத்துக் காட்டுகிறதெனவும் கூறுவர். "ஓர் எழுத்தாளன் நாம் பார்ப்பதையே பார்க்கின்றான். ஆனால் அங்ஙனம் பார்த்ததை எழுதும்போது அதில் நாம் பார்க்கத் தவறிய ஒன்றை - கவனிக்காது விட்ட ஒன்றை எடுத்து மொழிகின்றான்.. அட! நாமும்தானே பார்த்தோம். நமக்கது தோன்றவில்லையே என மூக்கின் உச்சியில் சுட்டு விரலைச் சேர்க்க வைத்து விடுகின்றான்." இவ்வாறு மேனாட்டார் கூறுவது, மாணிக்கத் தமிழைப் பொறுத்தவரை குறிப்பாக உவமை உருவகங்களைப் பொறுத்தவரை முழு உண்மை யாகும்.

## குடும்பம்

இடைக்காலத்து வடமொழிச் சொற்கள் பல தமிழிற் கலந்தன. ஆனால் அவை வடஒலியோடு புகவில்லை. தமிழ் ஒலி பெற்றுத் தமிழ்மை எய்தியே தமிழிற் புகுந்தன.

"புக்ககத்து மணமகள் போலத் தமிழ்மை எய்தின" என்பது பேராசான் வாக்கு. (தொ. 121) ஒரு பெண் பதினெட்டு, இருபது வயதுவரை பெற்றோருடன் பிறந் தகத்தில் வளர்ந்தாலும், மணமாகிப் புக்ககம் புகுந்ததும் ஒரே நாளில் அதற்கு ஏற்றவளாகி, அங்குள்ள நிலைமை களுடன் பொருந்திப் போவதே இந்நாட்டு மரபாகும். இம் மரபைத் தாங்கி நிற்கும் உவமை இது.

கண்ணதாசனின் தமிழ்ப் பற்றுப் பற்றி ஓர் உவமை வருகிறது. "கணவன் மேற்கொண்ட கற்புடை நங்கையின் பற்று என்றும் ஒரு சீராக இருப்பது போலத் தமிழன்னை பாற் கொண்ட கவிஞரின் பற்று சூழ்நிலையாற் கூடியது, குறைந்தது என்பதற்கு இடமின்றி என்றும் குறைவிலா நிறை வாக இருப்பதை நாம் உணர்கிறோம்.'' (இ. 140) கவிஞருக்கேற்ற உவமைதான் இது!

தமிழில் தன்மையணி என்பது உள்ளதை உள்ளவாறு கூறுதல். "அணி என்பது இலக்கிய விளம்பரம்" அவர் கருத்துப்படி. ஆனால் "தன்மையணிதான் அணிகளில் தாலி போல உண்மையணி, முதலணி' என்று கூறுகிறார். (தி. 36) தாலியை அணியாக்காது, இயல்பாக்குவது நம் பண்பாடு. வெறும் மஞ்சள் கயிறும் தாலியாகி விடுகிறதன்றோ?

முத்தொள்ளாயிர விளக்கம் அது. யானைகள் தம் கொம்பாகிய எழுத்தாணியால் பகைவர் மார்பாகிய ஓலைகளில் எழுதிற்றாம்?

மருப்பூசி யாக மறங்கனல்வேல் மன்னர்
உருத்தகு மார்போலை யாகத் – திருத்தக்க
வையகம் எல்லாம் எமதென் றெழுதுமே
மொய்யிலைவேல் மாறன் களிறு.

"குழந்தை பிறந்தது என்றால் என்ன குழந்தை என்று எல்லோருக்கும் கேட்கத் தோன்றுகிறதன்றோ? அது போல," யானை எழுதிற்று என்றால் என்ன எழுதிற்று எனக் கேட்கத் தோன்றுவது இயல்பே என மொழிவார் இவர்.

'வையகமெல்லாம் எங்கள் மாறனுடையது - எமது' என எழுதிற்றாம்! உவமை நம் அன்றாட வாழ்க்கையை நினைப்பூட்டுகிறது.

சிலம்பில் இரு வகை நடைகள் உளவென்றும் அவை சங்க நடையும் அல்சங்க நடையுமாம் எனவும் விளக்கும் இவர், "எனினும் பாட்டன் தோற்றம் பேரனிடத்துக் காணப்படுதல் போலச் சங்கப் படிவத்தையே சிலம்பில் பெரிதும் காண்கிறோம்." என முடிப்பார். (கா. 183) அதனாலேதான் பாட்டன் பெயரைப் பேரனுக்கு வைத்துப் 'பெயரன்' — 'பேரன்' என்றே பெயரும் முறையும் சுட்டினர். இன்று பாட்டன் பெயரை இடும் பழக்கம் பெரிதும் அற்றுப் போனது. பாட்டன் பேரைக் கெடுக்காமலிருந்தால் போது மென்று விட்டு விடுகிறார்கள் போலும்!

குறளைக் கற்றும் அதன் வழி நடக்க மறந்ததைச் சாடும் இவர் "ஓராண்டுக் குழந்தை வாய்ச் சோறு போலச்" செய்ய மறுத்தொழிந்தோம் (வ. 11) என்று கூறுகிறார். வீட்டில் ஆண்கள் குழந்தைகளுக்கு ஊட்டா விட்டாலும், ஊட்டுவதை நாளும் பார்த்திருக்கிறார்கள் அல்லவா?

நமது பெண்ணினக் குறையொன்றையும் உவமையில் வைத்துச் சுட்டிக் காட்டுகிறார். சங்க கால மகளிர் அலர் தூற்றியது முதல் இன்று வரை, பிறர் தம் குற்றங்குறையைத் தேடிக் கண்டு, கிசுகிசுக்காவிட்டால் நம் பெண்டிர்க்கு உறக்கம் வாராது. "வீட்டகத்துச் செய்திகளை அடுக்களைப் புகைபோல நுழைந்து காணுதலும் முணுமுணுத்துப் பேசுதலும் பெண் சமுதாயப் பிறவிக் குணம் போல அமைந்து விட்டன" என்பார் இவர். (த.கா. 74) 'அடுக்களைப் புகை' வீடு முழுவதும் நுழைவதையும் ஒரு காலத்தில் அனுபவித்திருக்கக் கூடும். எப்பொழுதும் வேலை செய்து செய்து உழைப்பவரின் உடல் "கொல்லன் கைபோல் வலிமை சான்றது; ஆனால் அடுக்களைத் துணிபோல் கண்ணுக்குக் கவர்ச்சியற்றது." (வ. 134) அடுக்களைத் துணிக்கு எத்துணை அதிட்டம் பாருங்கள். வள்ளுவத்தில் வந்து,உவமையாகிவிட்டது!

'தாய்க்குக் கொடுத்தால் அவள் தன் மகவுக்குக் கொடுக்குமாப் போலப் பெற்றதை எல்லாம் பிறர்க்கே ஈயும் நெஞ்சினர் அரிதாகவேனும் ஒரு சிலர் இன்றும் உளர்.' *(வ. 87)* தாய்க்குப் பேதைப் பிள்ளை நினைவே பெருகித் தோன்றுமாப் போலத் திருவள்ளுவர்க்கு நிலை தாழ்ந்தார் முன்னேற்றமே பெரிதும் நெஞ்சில் நின்றது. *(வ. 113)* இவ்வாறு தாய்மை நெஞ்சம் உவமையாகக் காண்கின்றோம்.

### குலமரபு

அவர்தம் குலமரபைக் காட்டிக் கொடுக்கும் சொற்களும் தொடர்களும் உவமைகளும் தானாக வந்தமை கின்றன. இவை யாருக்கும் தவிர்க்க வொண்ணாதன. வாழ்வில் படிந்து வாழ்ந்தவர்களுக்கு முதலில் நெஞ்சிற் பதிவன பிறந்து வளர்ந்த சூழலின் சுவடுகளேயாம்.

"பதக்கத்தை வைத்த பெட்டியோடு வாங்கிக் கொள்வது போல, முன்னோர் தம் கருத்தினை அவர் தம் சொல்லோடும் தழுவிக் கொள்ளலாம்". *(தொ. 34)* இவ்வுவமைப்படி, பதக்கத்தைவிடப் பெட்டியைக் கவனமாய்க் கேட்டு வாங்குவோர் இன்றுமுளர்.

"ஆதலின் கலிப்பாவின் உறுப்புக்கள் பின்னர்த் தனியே பிரிந்து 'மனையறம் படுத்த மகன் குடும்பம் போல'த் தனிப்பா நிலை எய்தின என்று கொள்ளலாம்". *(தொ. 228)* மகன் குடும்பத்தை **'வேறுவைத்தல்'** எனத் தனிக் குடும்பமாய்ப் பிரித்து, ஒரு சடங்காக நடத்தி வைத்தல் சிலப்பதிகாரத்தில் மட்டுமன்றி இன்றுமுளது.

நகரத்தார் மரபை இவை சுட்டுமெனினும், அவரிடைக் காணப்படும் குறையொன்றையும் இவர் உவமைப்படுத்தியிருப்பது மறக்கொணாதது. ஒரு குடும்பத்து ஐந்து பிள்ளைகளென்றால் ஐவரும் ஒற்றுமையின்றி எப்போதும் சண்டையிடுவர். அதனால் காணத்தகும் இன்னாத காட்சிகளும் நிகழ்வுகளும் பலவாக இருந்ததுண்டு. 'தமப்பனார் தோண்டிய கிணற்றில், நீர் வேற்றுமையில்லாக் கிணற்றில், மக்கள் ஐவர்தம் இறை

கயிற்று வேற்றுமையன்றோ நம் கண்ணுறுத்தும் இன்னாக் காட்சி". (வ. 41) மக்களிடையே ஒற்றுமையின்மையை ஐந்து இறை கயிறுகளைப் போட்டு, ஒரே கிணற்றில் நீர் இறைப்பதை உவமையாக்கிக் காட்டியிருக்கும் திறம் உற்று நோக்கத் தக்கது.

தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் சுட்டப்படும் தலைவன், தலைவி, தோழி யாரும் பெயர் சுட்டப்படுவ தில்லை. அம் மாந்தர்கள் 'பெயர் வெட்டாத பாத்திரங் களைப் போல்வர்' என அவர்களின் பொதுமை சாற்றப் படுகிறது. பாத்திரம் ஒன்றை வாங்கும்போதே, அதில் பெயர் வெட்டுவது நகரத்தார் மரபு. பெயர் வெட்டாத பாத்திர மென்று, 'ஒருவர்ப் பெயர் கொளாப் பாத்திரங்களைச் சுட்டியிருப்பது' இவ்வுவமை கூறியவர் யாரெனச் சுட்டிக் காட்டிவிடுகிறது!

காப்பியங்களில் காட்சிகள் பலவும் "இரத்தினக் கம்பளம் விரித்தாற்போலக் காட்டப்படுகின்றன." (க. 46) நகரத்தாரிடம் இரத்தினக் கம்பளத்திற்குப் பெரும் மவுசுண்டு. மணவரையில் இரத்தினக்கம்பளம் விரிக்கும் வழக்கமுண்டு. 'விருந்தில் உணவு வகை போல' எனவும் (கா. 158); 'நெய்க்கிண்ணம் போல' எனவும் (தி. 100) வருவனவும் இம் மரபை நினைப்பூட்டுவனவே.

'பேறு கேட்டல்' என்பது நகரத்தார் மரபு. 'பிள்ளைப் பேறு கேட்டல்' என்று, பிள்ளை பிறந்த வீட்டிற்கு உறவினர் கள் சென்று, 'பேறு கேட்பர்!' 'மகன் பிறந்திருக்கிறானே? மகள் பிறந்திருக்கிறாளே? பேரன் உண்டா? பேர்த்தி உண்டா?" இவ்வாறு 'பேறு' கேட்பர். பெற்றவர்கள் "ஆமாம் உங்களுக்குத்தான்" என்பர். "உங்களுக்குத்தான் முந்தி" என்றும் கூறுவர். இந்தப் பிள்ளைப் பேறு உங்களுக்கே என வந்தவரை, மனநிறைவு கொள்ளச் செய்வர். நம் மாணிக்கச் செம்மலார், கோவை நூல்கள் பல பிறந்தன எனக் கேள்விப் படும் அக்கணமே அவை பல காலக்கோட்பட்டு இறந்தன எனவும் கேள்விப்படுவதை, மிக்க அவலத்தோடு

எடுத்துரைக்கிறார். "பிள்ளைப் பேறு கேட்க வந்தோர், சாவு கேட்ட உணர்ச்சி தோன்றுகின்றது," *(இ. 104)* என்னும் போது, தமிழ் நூல்களின் அழிவை நினைத்துக் கண்ணீர் விடும் காட்சி புலனாகிறது.

## ஆசிரியர்

வளரும் சமுதாயத்திற்கு 'ஆசிரியன் போலக் குறை களையவேண்டும் என்ற செந்நோக்கம் தேவை' என்று ஆசிரியன் எப்போதும் குறை களைதலிலேயே கண்ணாக இருப்பான்; இருக்கவேண்டுமென்பதை விளக்குகிறார். *(த.கா. 161)*

ஐந்திணையில் காதல் பற்றிய எல்லாவற்றையும் பாடுவதில்லை. அன்புப் பெருக்கத்திற்கே – அன்புப் பெருக்கம் உடையவற்றிற்கே இடனுண்டு. நூல் நிலையம் என்றால் உலகத்திலுள்ள நூலெல்லாம் வைத்திருக்கும் நூலென்றாகாது. அங்ஙனம் வைப்பதும் இயலாது. இயலுமாயினும் சிறக்காது. "அறிவுப் பெருக்கத்துக்கு இன்றி யமையாத நூல்கள் இருப்பதுவே நூல் நிலையமாகும்". *(த.கா. 290)* அதுபோல் அன்புப் பெருக்கத்திற்கு இன்றியமை யாத காதல் திறங்கள் அமைந்திருப்பதுவே ஐந்திணை யாகும்.

இராய. சொ. அவர்களின் 'காந்திக் கவிதை'யைத் திறனாடுமிவர், கவிதை என்றால் பலவித நயங்கள் பொதிந்திருக்க வேண்டுமென வற்புறுத்துகிறார். சொல் நயம், பொருள் நயம், கவி நயமின்றேல் அத்தகைய செய்யுட் கள் 'பட்டையடிக்கும் எழுதுகோலை ஒக்கும் மழுங்கற் செய்யுட்களாகுமாம்'. *(இ. 168)*

திருவள்ளுவர் விளக்கும் 'புலவி நுணுக்கத்தை' மிக நுட்பமாக விரிக்கும் மாணிக்கச் செம்மல், நுணுக்கமான, காரணமின்றியும் வருகின்ற ஊடல்கள் காதற் சுவை பயப்பனவேயாயினும் அவை தொடரக் கூடாது என்பார். அதனால் காதலரிடை மனவேற்றுமை விளைந்து விடக்

கூடாது. அது எவ்வாறாம்? "எழுதச் சீவிய கோலின் கூர்மை எழுதுங்கால் ஒடிந்து விடுதல் போல் ஊடலோடு தேய்ந்து அழிவதும் புலவி நுணுக்கம் ஆகும்." (த.கா. 300) மிக நுட்பமாய் எண்ணிப் பார்க்க வைக்கும் உவமை இது. மிகக் கூர்மையாக - தேவைக்கதிகமாகக் கூடச் சீவிவிட்டால், எழுத வைத்ததும் முனை ஒடிந்துவிடும். அடிக்கடி எழுதுவார்க்குப் பழக்கமானது இது. அதுபோல் மேன் மேலும் ஊடல் கூடினும், அச்சீவிய முனை ஒடிதல் போல, புலவி உடனே தேய்ந்து அழிதல் வேண்டும். உவமை சொல்வதன் மூலம், நீண்ட சிந்தனைகளை விளைவிக்க முடியும்; ஒரு கட்டுரையனைய கருத்தை உட்புகுத்த முடியு மென்பதை இது காட்டுகிறது.

## புத்தம் புதியவை

சொல்பவனின் புத்திக் கூர்மையையும் ஆழத்தையும் கூட உவமை காட்டிவிடும். சாதாரண வாழ்க்கையில் ஒருவர் கூறும் பழமொழி, உவமைகளை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று பொதுவானது, எல்லோரும் கூறக்கூடியது. மற்றது அவரவர் வாழ்க்கைப் பின்னணி சார்ந்தது, அவர்கள் மட்டுமே கூறக் கூடியது.

தொல்காப்பியர் தலைவி தானறிந்த அளவில் உவமை கூறுவாளெனவும் தோழி தனது நில எல்லைக்குட்பட்ட வற்றைக் கூறுமறிவுடையாளெனவும் தலைவன் நிலங்கடந் தும் கூறும் திறனுடையானெனவும் வரையறைகள் வகுப்பர். (1247, 1248) உவமை சொல்வாரை வைத்து உவமைகளை வரையறைப்படுத்துவதைப் போல, உவமைகளை வைத்து அவற்றைச் சொல்பவரது திறன்களையும் மதிப்பிட்டுவிட முடியும். ஒரு மொழி ஆய்வாளனைப் போல் மட்டுமல்லா மல், இலக்கியப் படைப்பாளியைப் போலவும் சுவை பொருந்தப் புதிய புதிய உவமைகளை ஆள்வதில் செம்மல் மாணிக்கம் மிகுதிறனுடையவராய் இருக்கிறார். உவமை படைக்கவேண்டுமென்ற ஆர்வமும் படைக்கும் திறனும்

ஒருங்கமைந்திருப்பதை இவ் உவமைகள் புலப்படுத்து கின்றன.

## கட்டடக்கலை

காப்பியப் புலவன் பேராற்றலுடையவன். "தஞ்சைப் பெருவுடையார் கோபுரம் கட்டுவதற்கு இராசராசசோழன் சாரப்பள்ளம் அமைத்தாற் போல, முக்கியமான இடங்களைக் கொண்டுவந்து காட்டுவதற்குமுன், முன் புனைவு செய்துகொண்டு போதல் புலவன் தொழில்" என, காப்பியப் புனைவும் ஒரு கட்டுமானப் பணியே என இவர் அறிவுறுத்துகிறார். *(க. 9)*

காப்பியம் வேறு, சிறு உதிரிப் பாடல் வேறு. நெடும் பாடல்களாயினும் அவை காப்பியமாகா. இவ் வேறுபாடுணர்த்த வந்த இம் மூதறிஞர், "காப்பியம் ஒரு கல்லில் செய்யும் குடைவரைக் கோயிலன்று; ஒரு கோபுர முடைய கோயிலுமன்று. கல்பல அடுக்கிய உள்ளும் புறமும் கோபுரங்கள் கொண்ட வானளாவிய கட்டுமானக் கோயிலாகும்." என்பார்./ *(கா. 159)*

தொல்காப்பியம் மூவாயிரமாண்டுப் பழமையுடைய தமிழ் முதனூல். எனினும் அது இன்றும் எளிதில் விளங்குவதேயாம். சிறு முயற்சியும் செய்யாமல் விளங்க வில்லை என்பார்க்கு என்ன சொல்வது? சிலர் இவ்வாறு சொல்லியே பழந்தமிழ் நூல்களைப் புறக்கணிக்கும் மனப்பான்மையை, வேண்டுமென்றே மாணவரிடை, மக்களிடை வளர்க்கின்றனர். இது கொடுமை. ஐந்தடுக்கு வளமனையை அண்ணாந்தேனும் பார்க்க வேண்டாமா? "பதின்மூன்று அடுக்கு நிலை கொண்ட திருவரங்கக் கோபுரத்தை நிமிர்ந்து அண்ணாந்து பார்க்க மாட்டா நெஞ்சக் கூனர்க்கு என்ன சொல்வது? மூவாயிரம் ஆண்டுக்கு முன்தோன்றியும் வழக்குத் தமிழில் இன்றும் ஒரு நூல் வாழ்கின்றது என்றால், அதன் உரம் என்ன, திறம் என்ன, தெளிவு என்ன?" என்று எழுதிக் காட்டி, நம் முதுகெலும்பை நிமிர்த்துவார் இம் மூதறிஞர்! *(தொ. 365)*

## பொது அறிவு

தொல்காப்பியம், திருக்குறளில் எல்லாம் ஒன்றை எண்ணிக்கைப்படச் சொல்லும்போது, ஒரு காரணங் கருதியே வரிசைப்படுத்திச் சொல்லியுள்ளனர். தொல் லாசான் தும்பைத்திணையில் போர்ப்படைகளைச் சுட்டும் பொழுது, "தானை யானை குதிரை என்ற, நோனார் உட்கும் மூவகை நிலை" என்பார். முதலில் தானை, பிறகு யானை, குதிரை என அடுக்கியதற்கு ஒரு காரணமுண் டென உரையாசிரியர்கள் எடுத்து மொழிவர். இதன் பொருத்தத்தை விளக்க வந்த நம் செம்மலார், இன்றைய நடைமுறையுவமை ஒன்றைக் குறிக்கின்றார்.

"நாட்டுத் தலைவர்கள் வானூர்தியிலிருந்து இறங்கும் போது, முதற் கை கொடுப்பார் யார், அடுத்த கை கொடுப்பார் யார், பிற கைகள் யார் யார் கொடுப்பார் என்ற வரிசை முறையை நாம் காண்கிறோம் அல்லவா? ஆதலின் வரிசை நிரலுக்குக் கருத்துண்டு; கட்டுப்பாடு உண்டு; அழகும் உண்டு. *(தொ. 267)* இவ்வாறு வரிசை முறைப்படி சொல்லும் தமிழ் இலக்கண இலக்கிய மரபின் சிறப்பு, இன்றையக் காட்சியால் உணர்த்தப்படுகிறது.

> "கட்சிபுகா நாட்டுப் பற்றுடையவர்போல, மதம் தழுவாக் கடவுட் பற்றுடைய இளங்கோவடிகள்" *(கா. 137)*

என்ற உவமை, இளங்கோவின் சமயப் பொதுமையை, இன்றைய நடைமுறை அரசியலில் வைத்து விளக்குவதால், நம்மால் தெற்றென உணர வாய்ப்பாகிறது.

ஐந்திணைக் களவு ஒழுக்கத்தில் தடைகள் பல ஏற்படும். அது இயல்பே. தடைகளின்றேல், 'சுட்டித்தனம் இல்லாக் குழந்தை போலவும் கட்சியற்ற அரசியல் போலவும் உணர்ச்சி வறண்டு தோன்றும்.' *(த.கா. 78)* கட்சியரசியலே நாட்டைக் கெடுக்கிறது என்றாலும்

கட்சிகள் முற்றிலும் ஒழிந்தாலும் அரசியல் உணர்ச்சியற்றுப் போகும் என்று புலனாகிறது.

**எளியவை**

மிகமிக எளிமையானவைகளும் உவமையாகித் தாம் தாம் உயர்ந்தவை என முன்னின்று காட்டுகின்றன. நாம் பெரியவர்களைக் கொண்டாடும் விதம் பொருளற்றது. அவர்கள் படத்தை யானை மேலேற்றி ஊர்வலம் வருவதா பெரிது? அவர்களைப் பின்பற்றுவது; அவர்வழி நடப்பதன்றோ பெருமை? திருக்குறட் சுவடிகளை வானவூர்திவழி நாடெங்கும் தூற்றினாலும் செயல் நோக்கம் யாருக்கும் வாராது. "கூத்துத் தாள் வாங்கும் குழந்தை யுணர்ச்சியே அவர்கட்குத் தோன்றும்." (வ. 111) சிறு குழந்தைகள் திரைப்படம், நாடகம் தொடர்பான விளம்பர வண்டிகளின் பின்னே ஓடித் துண்டு வெளியீடுகளை ஆவலோடு வாங்கிப் பிறகு கசக்கித் தூர எறியும். இவ்வுவமை ஒரு சிறு நிகழ்ச்சியும் உவமையாகும் அழகைக் காட்டுகிறது.

ஒருவர் தாம் நன்கு பழகிய, பயின்ற துறையைப் படைக்கப் புகுவரேல் அது அவர்க்கு எளிதாகும். இளங்கோ வடிகளுக்கு அரசியல் பற்றிப் புனைதல் எளிதாயிற்று. இதை விளக்க வந்தவர், "தன் வீட்டுப்படி நடைக்கு எளிதாதல் போலத் தான் பயின்ற துறை பற்றுக்கு எளிது, பாடுதற்குச் செவ்விது," என்றார். (கா. 51) அடிக்கடி நடப்பதால், தன் வீட்டுப் படியில் கண்ணை மூடிக்கொண்டும் நடக்கலாம்; வேறு நினைப்போடும் நடக்கலாம். பிறர் வீட்டுப் படியாயின் படிநினைவோடு, தயங்கி நடக்கவேண்டியிருக்கும். எளிய உவமைதான். நன்கு பழக்கப்பட்ட துறை பற்றி எழுதுவது, எழுத்தாளர்களுக்கு மிக எளிதென்பதை அருமையாய் உணர்த்துகிறது இது.

தமிழ் இலக்கியவுலகில், புலவர்களின் வறுமை மிகச் சிறந்த செய்யுட்களைப் படைத்தது என்பதை வரலாற்றுவழி

அறிவோம். இதனைத் 'தமிழிலக்கியவுலகில் வறுமைத்தாய் கருக்கொண்டவுடனே ஈன்று புறம் விட்ட செய்யுட் குழவிகள் பலப்பல,' என்றார். அங்ஙனம் வறட்சியில் பிறந்த கவிதைகள் சொல்நயம் பொருள்நயம் மிகுந்து சுவையுடன் திகழ்வதை விளக்கவந்த இப்பேராசான், "நீர் வறட்சியில் விளைந்த புதுக்கோட்டை முகவைக் காய்கறிகள் சுவையாக இருப்பது போலப் பசி பயந்த பாடல்கள் கொதிப்புச் சுவையுடையவை" என உவமை கூறுகிறார். வறுமையிலும் வளமான கவிதைகளை ஈன்ற பாடுவார் முத்தப்பர் முகவை மாவட்டத்தவர். உவமை கூறியவர் புதுக்கோட்டை மாவட்டத்தவர். இங்கு காய்கறிகளைச் சுவைத்துச் சாப்பிட்ட பட்டறிவு, ஒப்பீட்டுணர்வோடு வெளிப்படு கிறது. *(இ. 176)*

பரத்தைமை நாட்டத்தால் மனைவியை நலனுண்டு புறக்கணிக்கும் கொடுமையைச் 'செருப்புத் தேய்த்துக் கழிப்பது போல' என அதன் சிறுமையும் அவலமும் தோன்றச் சித்தரிப்பார். *(வ. 53)*

மேலும் மேலும் புதிய புதிய உவமைகளை - நாம் ஒரு கணம் விம்மிதமடையுமாறு கூறிச் செல்கிறார். "வீதி விளக்கு ஆயிரமும் ஒளிர ஓரழுத்தம் போதுமாப் போல" *(வ. 22)* என்று, 'பொருள் செயல்வகை' என்ற ஓரதிகாரமே, மாந்தரனைவரும் திருக்குறள் கற்கவேண்டும் என்பதற்குப் பொருந்திய சான்றாகும் என இவர் மொழிகுவர். நச்சினார்க்கினியர் ஒரு பாடலில் அல்லது நூற்பாவில் உள்ள அடிகளையும் சொற்களையும் கண்டபடி இடம் மாற்றிக் கொண்டு கூட்டிப் பொருள் எழுதுவார். இது தவறு படும் என்பது பேராசான் கருத்து. "தானம் மாற்றிச் செய்யும் கணக்குக் கூட்டுப்போல, அடி மாற்றும் இவ் வகைக் கொண்டுகூட்டும் முறை குற்றம் உடையது" என இதன் பிழைபாட்டை உணர்த்துவார். தானம் மாற்றாது ஒழுங்காகக் கூட்டும் கணக்குப் பார்க்கப் பருமா சென்றவ ராதலின், அப்பழக்க எதிரொலி இவ்வாறு உவமையாய் வந்து விழுகிறது. *(தொ. 31)*

### பெரிய எழுத்து அரிச்சுவடி

இன்றைய இலக்கியம் வரை தொல்காப்பியத்தின் ஆளுமை உளதென்று நிலை நாட்ட வருமிவர், "இப் பேருண்மை ஒப்புமைக்கண்ணுடையார்க்கு திரைப்பட வுருவம் போலவும் பெரியவெழுத்து அரிச்சுவடி போலவும் விளங்கிவிடும்" என்று தெளிவுபடுத்துகிறார்.

ஆங்கிலம் தன்னிடமுள்ள 26 ஒலியன்களை வைத்தே உலக ஒலிகளை எல்லாம் தன்னுள் அடக்கிக் கொள்கிறது. நமது ழ,ள,ண,ற என்ற மெய்யொலிகள் தன்னிடம் இல்லை யென்று ஆங்கிலம் கவலைப்பட்டதில்லை. "எம்மொழியும் உலக ஒலியனைத்தும் உடையதாய் இருப்பதில்லை. உடையதாய் ஆக்கின் அம்மொழி கண்காட்சி மொழியாக விளங்குமேயன்றி வாய்மொழியாக வழங்காது. உலகமெங் கும் பரவிய ஆங்கில மொழியை நம்மளவில் நோக்கினும் இவ்வுண்மை பெரியவெழுத்து அரிச்சுவடி போல் விளங்கும்" என்று சான்றுகளுடன் நிறுவுகிறார். (தொ. 107)

பெரியவெழுத்து அரிச்சுவடிப் புத்தகங்கள் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் படித்தவர்க்கும் படிக்கும் குழந்தைகளை ஆர்வத்தோடு கவனிப்பவர்க்குமே நினைவில் வரும்.

### வீதிக்கல்

நாம் வெளியூர்க்குப் பயணம் செல்கிறோம். அங்கு வழி நெடுக வைக்கப்பட்டிருக்கும் வீதிக்கற்கள் இன்னும் எத்தனை கல் தொலைவு என்பதை நினைவுபடுத்துகின்றன. கம்பன் காப்பியத்தின் அடிப்படைப் பொருள் 'இராவண வதமே'யாம். காப்பியம் முடிவை நோக்கிப் படித்துச் செல்லச் செல்ல, இராவண வதத்தை நோக்கிய வளர்ச்சியே காணப்படுகிறது. "இராவண வதமே நோக்கம் என்பதனைக் காப்பியம் வீதிக்கற்போல ஆங்காங்கே நினைவூட்டிச் செல்கிறது." (கா. 152) வீதிக்கல் உவமை ஊர் நெருங்கி வருவதைப் படிப்படியாய்க் காட்டி முடிப்பது போல வதம்

நோக்கிய வளர்ச்சியும் படிப்படியாய்ப் புனையப்படுகிறது. மிகப் பொருந்திய புதிய உவமை இது.

இராமாயண நிகழ்வுகள் தொடர்ந்து நடப்பன, இடையறாது நடந்து செல்வன. மாணிக்கச் செம்மல் "இராமாயண நிகழ்வுகள் குடலை இழுத்தாற்போல் வரும் தொடர் வினைகளே" *(கா. 151)* என்னும்போது, தாம் எதிலும் கூர்த்த பார்வையுடையவர் என்பதை வெளிப் படுத்தி விடுகிறார்.

### ஈரத்தடம் போல

ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி, உலகநீதி, நறுந்தொகை, நன்னெறி என்ற ஏழு நூல்களை ஒரு கோவைப்படுத்தி 'ஏழிளந்தமிழ்' என வழங்கலாமென்பது மூதறிஞர் கருத்து. ஆறுமுக நாவலர் இவற்றைக் கீழ் வகுப்புக்களில் செய்யுட் பாடமாக்கிப் பாடநூல் யாத்தார். இம்முறையால் நம் குழந்தைகள் பெற்ற பயன் அளவிடற் கரியது.

> "அதனால் சிறு நூலாயினும், ஒரு நூலை முழுதும் கற்றல், பிரித்தும் புணர்த்தும் பயிலல், அருஞ்சொற் பொருளறிதல், யாப்பு மனம் பெறுதல், வரப்பண்ணி ஒப்பித்தல் முதலான பல மொழிக் கூறுகள் ஈரத்தடம் போலக் குழந்தைகள் அறிவில் பதியலாயின." *(தி. 122)*

நாம் அனைவரும் 'பசு மரத்தாணி போல்' என்பதையே திரும்பத் திரும்பச் சொல்லியும் பழகியு முள்ளோம். 'ஈரத்தடம்போல' என்ற உவமை அதைவிட நெகிழ்வாக, பொருத்தமாக, அழுத்தமாக இருப்பதால், என் நெஞ்சிலும் இவ் உவமை, ஈரத்தில் பட்ட தடம் அச்சு அடையாளமாய்ப் பதிவது போல் பதிந்துவிட்டது. இதனை ஒத்தது 'உறிஞ்சு தரைபோல்' என்ற உவமை. *(தி. 44)* உறிஞ்சும் தரை, தண்ணீர் படப்பட உறிஞ்சிக் கொண்டே இருக்கும். மழையே பெய்தாலும் ஒரு நாளில் மறைந்து விடும். "அறிதோறும் அறியாமை கண்டற்றால் என்று

வள்ளுவரும் அறிவு உறிஞ்சு தரைபோல் நிறைவு காண முடியாக் குறைவுடையதாகவே இருக்கும் என்று சுட்டிக் காட்டுவர்" எனச் சொல்லுவது புதுமையாய் இல்லையா?

நினைத்து மகிழக்கூடிய பிறிதொரு உவமை பாருங்கள்! தலைவன் இனிக் களவை நீட்டிக்க இயலாது எனத் தெரிந்ததும் தானாகவே மணம் பேச வந்தான். தந்தையும் தன் மகளுடன் அவனுக்குத் தொடர்புண்டு என்பதை அறியாமலே மணத்திற்கு இசைந்தான். பருத்தி புடவையாய்க் காய்த்தது போலாயிற்று, இது தோழிக்கு! "காவல் நிலையத்து எழுதி வையா முன்னரே இழந்த பொருள் கிடைத்தாற் போன்ற மகிழ்ச்சியைத் தோழிக்கு அளித்தது." (த. கா. 140) என்பது புதிய உவமை. இது செய்தித்தாள் படிக்கும் அனுபவம் போலும் என்று எண்ண வைக்கின்றது.

சரக்குகளைப் பாடம் செய்து போற்றுவர். அதுபோல 'இலக்கியத்தில் புலவன் மனித உணர்ச்சிகளைப் பாடம் செய்து வைக்கின்றான்.' இஃதொரு அரிய திறனாய்வுக் கருத்தாகும். (கா. 25)

அவ்வுலகக் கற்பனைகளையே புனைவது பயன் படாது. மனித வாழ்வுக்கு, மன்னாயத்துக்குப் பயன் படாதது, 'வாணம் இல்லாக் கட்டிடம் ஒக்கும்'. (கா. 45). எதற்கும் மனித வாழ்வு அடிப்படை வேண்டும்.

இடைக்கால இலக்கியம் படைப்புக் கலையில் சிறந்தது. வடிவ அமைப்பில் உயர்ந்தது. ஆயினும் சமய வல்லவர்கள் மேலுலகப் பொருளையே புகுத்தி, வளரும் இலக்கியத்தைப் பாழாக்கி விட்டனர். "பொடி மட்டையி லும் பொன்துகள் வைப்பாருண்டோ" என்பார் இவர். வடிவச் செம்மையுடைய இடைக்காலப் பல நூறு இலக்கிய வகைகள் புதிய புதிய மானுட வாழ்வு பற்றிப் புனையப் படுதல் வேண்டும் என வழிகாட்டுகிறார். (இ. 47)

**பணம்**

சங்கப் பாடல்கள் இலக்கிய நயம் மிக்கன; அதே சமயம் மனித வாழ்வு பற்றியன.

"வெள்ளியில் நாணயம்போல் இயற்கைப் புனைவில் மனிதப் பிணைவு உயிரோடிக் கிடக்கின்றது. (கா. 23) வெள்ளிக்கு வெள்ளியுமாகிறது; அதுவே நாணயமுமாய்ச் செல்லுபடி ஆகின்றது. மனிதனுக்கு 'நடுவுநிலைமை' முக்கியம். ஏனைய பண்புகளிருந்தும் 'நடுவு' இன்றேல் பயன் படாது. "பணத்தாள் ஏனைப் பகுதியெல்லாம் கிழிந்திருந் தாலும் எண்ணுப் பகுதியிருந்தால் செல்லுபடியாகும். எண் கெட்டு ஏனைப்பகுதி இருந்து என்ன பயன்?" (தி. 43) பொதுவாக நாம் நாணயத்தாள்களை - ரூபாய் நோட்டு களை - கண்ணை மூடிக்கொண்டு வாங்குகிறோம்; கொடுக்கிறோம். ஐயம் வந்தாலன்றி உற்று நோக்கி ஆராய் வதில்லை. இது முன்னைக் கருத்தென்று எதனையும் ஆராயாது நாம் மேற்கொண்டால் தவறு படக்கூடும். அதாவது "நாணயத்தாள் போல் நாம் ஆராயாது மேற்கொள்வோமேல், தமிழ் ஆராய்ச்சி மேலும் புரையோடிப் புற்றுப்படும்" (கா. 29). சில சமயம் செல்லாத தாள் கைவசப்படுவது போலத் தவற்றையும் ஏற்க நேர்ந்து விடுமென்பதை இது சொல்லாமற் சொல்கிறது. ஈர்ப்புத் தன்மையை இழந்த இலக்கியம் பயன்படாது. அது "பொருட்காட்சிச் சாலையிலுள்ள நாணயங்கள் போலவும் வீட்டுக் கிழவன் போலவும் பழமை பேசவே பயன்படும்". (கா. 130) புகைவண்டிப் பயணம், புடவைக் கடைப் பார்வைப் பாவை, தலை மழித்துக் கொள்வது, தானே தூக்கிக் கொள்ளக் கூடிய சுமை என இக்கால அன்றாட அனுபவங்கள் உவமையாகுமிடங்கள் மேலும் பலவுள. சுருங்கச் சொன்னால் இக்காலப் புனைகதையாசிரியன் தோற்றான் போங்கள்!

கணவன் மனைவி ஊடலில் 'மகனும்' ஓர் ஊடாடு பொருளாய், ஊடலைத் தவிர்க்கப் பயன்படுவான். அது

'சுந்தரர்க்குச் சிவன் போல' (தி. 102) என்று உவமிக்கப் படுகிறது. ஊடாடுதல் இங்குமங்கும் போய்வந்து ஊடல் தவிர்த்தல். இந்நுட்பம் இலைமறை காயாய் உளது. இவரது உவமைத்திறமும் சுருங்கக் கூறி நிரம்பச் சிந்திக்க வைப்ப தாயுளது.

திருக்குறளை உரைவைத்துப் படிப்பதைக் காட்டிலும் மூலக்குறள்களையே திரும்பத் திரும்ப ஓதித் தெளிவு பெறவேண்டுமென்னும் இவர், அதற்குக் கூறும் உவமை மிக எளிமையானது. அதே சமயம் அருமை மிகுந்தது. "நீரை உறிஞ்சி வழிக் குடிப்பதைக் காட்டிலும் வாய் வைத்துக் குடிப்பதனால் வருஞ்சுவை பெருஞ்சுவை யல்லவா?" (தி. 17) இனி நாம் பதனீர், இளநீர், சுவை நீருட்பட யாதாயினும் புதிய நாகரிகக் கோட்படாது, வாய் வைத்துக் குடிக்க - குடித்துப் பார்க்க விரும்புமாறுளது இவ்வுவமை நயம்.

## நெல்லிக்கனி

நெல்லிக்கனிச் சுவை அளவானது; சுவைத்து மென்று தின்னுந்தோறும் இனிமை பயப்பது. பல்வகைச்சுவையும் அளவோடு இருப்பதால் சுவை மிகுந்த மாம்பழம் போன்ற வற்றைவிட இதனைச் சிலர் நெடும் பொழுது சுவைத்து மகிழ்வர். தொல்காப்பிய நயங்களும் அளவானவை. காப்பியங்களினின்றும் வேறுபட்டு அவை நெல்லிக்கனி போல், அளவுட்பட்ட இனிமை தருவன.

"தன் கருத்தினைப் பிறர் உணருமாறு சொல்வதற்கு, இலக்கிய முறைகள் பல. கற்பனை, ஒலி, உவமை, ஓவியவுரு, நடை என்றினையவற்றைத் திறனிகள் பகர்வர். இக்கூறுகள் எல்லாம் நெல்லிக்கனிச்சுவை போல் இருக்க வேண்டுமளவு தொல்காப்பியத்தில் உள" என்று தொல்லாசானை நன்குணர்ந்த நம் நல்லாசான் பகர்கின்றார்.

உவமை, உருவகம் மட்டுமல்ல; ஏனைய நன்னயக் கூறுகள் அனைத்திலும் மாணிக்கத் தமிழும் 'நெல்லிக்கனிச் சுவை' போல் அளவானமைந்து நெடும்போது இன்பந்

தருவதாகும் என்று சொல்லத் தோன்றுகிறது. அப் பெருந் தகையது நூல்களைப் பயில்வார்க்கு, இந் நற்றிறங்களெல் லாம் தாமே வந்து படியுமென்பது உறுதி. அங்ஙனம் படிய வேண்டுமென்ற உள்ளுணர்வோடும், வழிகாட்டுதலோடும் எழுதப்பட்டுள்ளனவே, மாணிக்கத் தமிழின் ஒவ்வொரு சொல்லும், தொடரும், உவமையும், உருவகமும், நடையும், கற்பனையும், கருத்தும், ஆய்வும் எல்லாமும்! தோயும் மனமுடையார் அனைவரிடத்தும், மடை திறந்த வெள்ள மெனப் பாயுமிவை பயன் தருமென்பது உறுதி!

6

# ஆய்வுக் களங்கண்ட அறிஞர்

மாணிக்கனார் நல்ல எழுத்தாளர். எழுத்தும் முத்து முத்தாக இருக்கும்; எழுதப்படும் கருத்தும் முத்தாக இருக்கும். எதனையும் திட்டமிடாமல் விரைந்து எழுதி விடுவதில்லை. முன் ஆயத்தம், திட்டமிடல், வரன்முறை, செம்மை, கட்டளைத் தன்மை யாவும் படிப்பவரால் நன்கு உணரப்படும். அவரது சிறு கட்டுரையும், நல்ல கருத்து வடிவம், கட்டுக்கோப்பு உடையதாய் இருக்கும். தொல் காப்பியத்திற்குப் பனம்பாரனார் எழுதிய, "முந்துநூல் காணுதல், முறைப்பட எண்ணுதல், புலந்தொகுத்தல், போக்குஅறு பனுவலாகப் படைத்தல்" என்ற பண்புகள் அனைத்தையும் தாமும் கடைப்பிடிக்க வேண்டுமென்ற உணர்வு அவரிடம் இயல்பாகப் படிந்துளது. வள்ளுவம், தமிழ்க் காதல் தொடங்கிச் சிறு கட்டுரை வரை கட்டுப் பாட்டுடன் திட்டமிட்டு எழுதியமை புலனாகிறது. பிற வற்றிற்போல, எழுத்திலும் கண்டிப்பானவர் என்று பெயர் பெற்றவர் இவர்.

## நோக்குக் கோட்பாடு

தொல்காப்பியத்தை மிகுந்த ஆர்வத்துடன் முழுவதும் பழுதறக் கற்ற இப் பேராசிரியர், நோக்குக் கோட்பாட்டில் ஈடுபட்டுள்ளார். தமது வள்ளுவ நூலைத் தொடங்கும் போது 'இனிவரும் அனைத்துச் சொற்பொழிவிலும் நோக்கு

எனும் இவ் அரிய தனியுண்மை பரந்து விளங்கக் காண்பீர்கள்' என்று குறிப்பிடுகிறார்.

'நோக்கு' என்றால் என்ன?

**மாத்திரை முதலா அடிநிலை காறும்**
**நோக்குதற் காரணம் நோக்கெனப் படுமே (1361)**

ஒரு மாத்திரை கூட, எழுத்தில் காரணமின்றி அமைதல் கூடாது. ஒரு பாடலை எடுத்துக்கொண்டு இந்தச் சொல் ஏன் இவ்வாறு இங்கு ஆளப்பட்டுள்ளது? இந்த உவமை மையப் பொருளுக்குப் பொருத்தம்தானா? இந்த வரிசையில் சொல்லப்பட்டிருப்பது சரியா? என்பனபோல் கேள்விமேல் கேள்வி கேட்டு ஒவ்வொன்றுக்கும் விடை காண்பதே நோக்கு எனப்படும். ஒன்றை 'நோக்குவது' என்பதே மிகுந்த ஆழமான, நுட்பமான பார்வையாகும். 'கண்ணொடு கண்ணிணை நோக்குதல்' முதலாயவை, 'உள்ளம் தாக்கும் உரனுடைப் பார்வைகள்' அன்றோ? 'நோக்கரிய நோக்கே' என்பது திருவாசகம். பேராசிரியர் 'கேட்டார் மறித்து நோக்கிப் பயன் கொள்ளும் கருவி' என்று இதைக் குறிப்பிடுவார். ஒவ்வொன்றையும் மறித்து, எதிர்வினா எழுப்பி விடைகண்டு ஆராய்ந்து இலக்கியப் பயன் கொள்ளும் கருவியே நோக்கு என்பதாம். "இவ்வாறு ஏன் சொன்னான்? இப்படி ஏன் சொல்லிற்றிலன்? என இவ் வண்ணம் மறித்து மறித்துத் தானே வினவிக் காண்பது" எனவும், 'வினவி வினவித் தன் நினைவுக் கருவி கொண்டு அவன் நினைவுப் பொருளைக் கல்லி எடுக்கவேண்டும்' எனவும் செம்மலார் குறிப்பிடுகின்றார். (வ. 10) அவர் தம் எழுத்தில் இக்கோட்பாட்டுச் சுவடுகள் படிந்துள்ளன.

## வள்ளுவக் களங்கள்

இளமையில் தொழில் கருதிப் பருமா சென்றவர், அங்கு ஒரு பொய் சொல்லவேண்டிய சூழல் வந்தபோது, அதனை மறுத்தார். அதனால் வேலையை இழந்து தாயகம் திரும்பினார். 'பொய் சொல்லா மாணிக்கம்' எனப் புகழப்

பெற்றார். எல்லா வகையாலும் வள்ளுவ நெறிகளை வாழ்வில் கடைப்பிடித்து வந்ததால், செயல் நோக்கக் கல்வியை மிகச் செம்மையாய் எழுதலானார்.

இவ்வகையில் அவர்தம் முதற்களம் - முதன்மை வாய்ந்த களம் வள்ளுவத்தை வாழ்வியலிற் காண்பதாயிற்று. திருக்குறள் முழுவதையும் பழுதறக் கற்று, வள்ளுவங்களை வகைதொகைப்படுத்தி, வாழ்க்கைப் பாத்தியில் வளரும் பயிராக்கினார்.

வள்ளுவர் நெஞ்சத்தை - உண்மையுணர்வை - அவர் சொல்ல வந்த 'செய்தியை' உரைகளைக் கடந்து, விளக்கங் களில் வீழாது வென்று, கால இடையீட்டால் நேர்ந்த பாட வேறுபாடு, படிக்கும் முறை வேறுபாடுகளில் சிக்கிச் சிதையாது கண்டுகொள்ள அவர் காட்டும் வழிகள் பலவாகும். திருக்குறள் பற்றிய கட்டுரைகளும் வள்ளுவமும் அத்தமிழ்த் தெய்வமகனின் உள்ளத்தை உணர வழிகாட்டும் போக்கிலேயே உள. எந்தத் திசையில், எந்த நேரத்தில், எம் முறையில் சென்றால் ஒரு பெருந்தலைவரைப் பார்த்துப் பேசலாம் என நாம் திட்டமிடுவதில்லையா? வள்ளுவர் உள்ளத்தைக் கண்டுகொள்ள எந்த வழி நல்லது? எம்முறை சிறந்தது? எவ்வாறு அணுகவேண்டும்?

இச் சிந்தனையோட்டமே மாணிக்கனாரின் வள்ளுவக் களங்களில் காணப்படும்.

அடுத்தது, இந்திய அரசியலும் இந்தியத் தேசிய மறையும் பற்றியதாகும். பொதுவாக இந்தியப் பெரு நாட்டின் அடிப்படை அரசியற் கோட்பாடுகளை இவர் சிந்திக்கும் களம் ஆழமானது. இவரே அரசியலிலும் ஈடு பட்டிருந்தால் அது மிக விரிவுபட்டிருக்கும்; என்றும் போற்றப்படும் தொலைநோக்குச் சிந்தனைகளாகியிருக்கும்.

மொழிச்சிக்கல் பற்றிய அவர்தம் சிந்தனைகள் இந்திய நாட்டிற்கே வழிகாட்டக்கூடியவை. என்றேனும் இந்திய நாடு அவர் குறிப்பிட்ட இடத்திற்கே வந்து நிற்கப் போகிறது.

எல்லாவகையாலும் இந்தியப் பெரு நாட்டிற்குப் பொதுத் தேசிய நூலாகும் தகுதி, தொன்மை மிக்க திருக்குறளுக்கே உண்டு. இதற்கான காரணங்களை அவர் வழக்கறிஞர் போல, விதிகள் வழி விளக்கியுள்ளார். இந்திய தேசிய அமைப்புச் சட்டத்தைத் திருக்குறளோடு ஒப்பிட்டிருக்கும் திறம் பெரிது. தமிழுக்கு மட்டுமா அச்சிறப்பு என யாரும் வினவினால், நம் தேசியகீதம் இந்தியத் தேசிய மொழிகளுள் ஒன்றான வங்காளத்தில் இருப்பதை நினைவு படுத்துகிறார். "இவ்வாறு ஒவ்வொரு இந்திய மொழிக்கும் மையவரசில் ஒரு பெரும்பேறு வழங்கப்படுமாயின் இந்திய ஒருமைப்பாடு புத்தொளி பெறும், புதுவன்மை பெறும்" என வழிகாட்டுகிறார். *(தி. 140)*

இந்திய நாடு விடுதலை பெற்ற நாளிலிருந்து சமாதானம் பேசும் நாடு என்றும் போர் வேண்டா நாடு என்றும் அனைவர்க்கும் விட்டுக் கொடுத்தும் அன்பு காட்டியும் நேசக் கரம் நீட்டியும் பழகுகின்ற அமைதி தவழ் 'அகிம்சை' நாடென்றும் பெயரெடுத்து வருவதும் நடப்பதும் இம் மூதறிஞரால் வன்மையாகக் கண்டிக்கப்படுகின்றன. இந்தியா வல்லரசாக வேண்டும். அண்டை அயல் நாடுகள் வாலாட்ட அஞ்சுகின்ற 'படையரசு' ஆகவேண்டும். வள்ளுவர் வழியில் நடைபோட வேண்டும். அரசின் ஆறு உறுப்புக்களில் 'படை'யைத் திருவள்ளுவர் முதலில் வைத்திருப்பதை இவர் அடிக்கடி, மிக அழுத்தமாக வற்புறுத்துகிறார்.

'படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு'

என்பதன்றோ திருக்குறள்?

இன்றைய இந்தியா இதில் தவறி விட்டது என்பதே இவர் கணிப்பு.

நம் தலைவர்கள் தனியறம் வேறு; அரசியல் அறம் வேறு என்பதை உணரவும் உணர்த்தவும் பின்பற்றவும் தவறி

விட்டனர். திருக்குறளை வழிகாட்டியாய்க் கொண்டிருந் தால் இப்பிழை நேர்ந்திராது.

> "குற்றம் செய்தவர்களைப் பொறுத்தவர்க்குப் பொன்றும் துணையும் புகழ் என்பது தனியறம்; குற்றங்கடிதல் வடுவன்று வேந்தன் தொழில் என்பது அரசறம். ஒன்றாக நல்லது கொல்லாமை என்பது தனியறம்; கொடியவர்களைக் கொன்று தண்டிக்க என்பது அரசறம். தவமறைந்து அல்லவை செய்யற்க என்பது தனியறம்; தவ வடிவங் கொண்டு ஒற்றாடுக என்பது அரசறம். எல்லார்க்கும் பணிதல் நல்லது என்பது தனியறம்; பகைவனைக் காணின் பணிவது போல் முதுகு காட்டுக என்பது அரசறம். ஒருவன் ஒருவனை அழித்தால் கொலை என்கிறோம்; அழித்த வனைக் கொலையாளன் என்கின்றோம். ஆனால் போர்க்களத்துக் கொலையை வீரம் எனவும், அக் கொலை செய்தானை வீரன் எனவும் போற்றி வாகை மாலை சூட்டுகின்றோம்" (தி.5)

எனவே பொதுநலம், நாட்டுநலம் கருதி, தம் உயிரையும் மதியாது செயலில் ஈடுபடுவது வேறு எனவும் தன்னலம் கருதிச் செயற்படுவது வேறு எனவும் உணர்ந்து இந்திய அரசு நடந்து கொண்டிருக்க வேண்டும். ஆனால் தொடக்கம் முதல், தனிமனித அறம் போலவே இந்திய அரசு நியாயம் பேசி, அணு ஆயுதங்களைத் தொடோம், படைப் பெருக்கம் செய்யோம், உலகிலேயே நாங்கள்தான் நல்லவர்கள் என்று பேசியும், நடந்தும் வந்ததால் அண்டைச் சிறு நாடுகள் கூட இந்தியாவை மதிக்கவில்லை. ஐந்நூற்றுக்கும் மேற்பட்ட தனியரசுகளை ஒழித்து, ஒரே இந்தியாவாக ஆக்கிய சர்தார் படேலின் அருந்திறலாண்மை எல்லோருக்கும் வந்திருக்கவேண்டும் என்பது செம்மலவர் களின் கணிப்பு. இந்திய அரசு தனி மனிதப் பண்புகள் நிரம்பியதாகக் காணப்பட்டு என்ன பயன்? சீனப் படையெடுப்புக்குப் பின் சுற்றுச் சிறு நாடுகட்கெல்லாம்

குளிர் விட்டு விட்டது. ஐ.நா.வில் நமக்குச் சார்பான துணை இல்லை. அதற்காக அஞ்சியஞ்சி விட்டுக் கொடுக்கலானோம். அதன் விளைவு? பல நூற்றாண்டு நிலத்தைப் பண்படுத்தப் பாடுபட்ட இந்தியர்களை இலங்கை விரட்டியது; கப்பல் கப்பலாகப் பருமா துரத்தியடித்தது. பாகிஸ்தான் அகதிகள், இலங்கை பருமா அகதிகள் எனக் குவிவதால், 'இந்தியன்' என்றாலே அகதி என அகராதிப் பொருள் வரப் போகிறது என இம் மூதறிஞர் எச்சரித்துள்ளார்.

பஞ்சசீலம் பேசிப் பயனென்ன? அயல் நாடுகள் துணுக்குறுமாறு வளர்ந்து காட்டியிருக்கவேண்டும். வல்லர சாகியிருக்கவேண்டும். இன்றும் சீனா உலகில் பெருமிதமாக எண்ணப்படுகிறது. இந்தியா என்றால் ஏளனம் அன்றோ தோன்றுகிறது! நல்லரசு என்பது வேறு. வல்லரசானால் தவிர என்றென்றும் இந்தியா தாழ்வாகவே மதிக்கப்படும். இது இப் பேரறிஞரின் முடிந்த முடிபு. இன்றும் கூட "இது கோயில் யானை; ஒன்றும் செய்யாது" என்றுதான் இந்தியாவை உலகம் நினைக்கிறது என்பார் இவர்!

> "எகித்து, காங்கோ, கொரியா, வியட்டுநாம், கியூபா நிகழ்ச்சிகளில் நாம் காட்டிய எதிர்ப்புத் துடிப்பை இலங்கைத் தமிழர் பூசலில் காட்டியிருந்தால், திபேத்தில் காட்டியிருந்தால், அணிய நாடாளுநர் உள்ளத்து அச்சம் குடிகொண்டிருக்கும். சிறிது ஆராய்ந்து இறங்குவார்கள். இலங்கைத் தமிழர்கள் அவல நிலைகளை ஐ.நா.வில் கொண்டு போய் விளம்பியிருந்தால், பருமாவிற்கு இன்று இவ்வளவு துணிவு பிறந்திராது." (தி. 7)

இவ்வாறு தொடக்கம் முதலே சுட்டிக்காட்டி வந்துள்ளார். தாம் ஒரு பேராசிரியராக வந்திராவிட்டால், மனத்திண்மையுடைய அரசியல் தலைவராகவும் வருவதுணரும் சமுதாயத் தலைவராகவும் ஆகியிருக்கக் கூடும் என்பதை நினைப்பூட்டுகிறார்.

'இலங்கைக்குக் கச்சத்தீவை விட்டுக் கொடுத்ததும், நம் எல்லை நெடுக முள்வேலி போடப் பங்களா தேசம் மறுப்பதும், பாகித்தான் நம்மேல் இருமுறை படை தொடுத்ததும், நினைத்தபோதெல்லாம் காசு மீரத்தைச் சிக்கலாக உலகவரங்கில் கிளப்பிக் கொண்டிருப்பதும் நேப்பாளம் சீனாவோடு நெருக்கமாக உறவாடுவதும் சீனா திபேத்துப் பகுதியைப் பிடித்துக் கொண்டதோடு அருணாசல மாநிலவுரிமை கொண்டாடுவதும், பாகித்தானும் மேலை நாடுகளும் பஞ்சாபின் கொடியவர்கட்குப் பயிற்சியளிப்பதும், இலங்கை தமிழினப்படுகொலை யில் மேலும் மேலும் இந்தியவுறவை அலைக்கழித்து வருவதும் இன்னோரன்ன அரசு வட்டாரப் போக்குகள் பாரத நாட்டின் நிலைக்கு உகந்தன வல்ல." இக்கூற்றில் காற்பங்குதான் இந்தியா இன்று உண்மையுணர்ந்து முன்னேறியுள்ளது. பேராயக் கட்சி இப் பேராண்மையில் தவறியதால் இன்று நிலை குலைந்து போனது. எதிர்க் கட்சிகள் செல்வாக்குப் பெறுவதற்கும், இந்திய மக்கள் சார்பு தேடி தலை குனிந்து 'தருமம் பேசுவதை' விரும்பவில்லை என்பதே அடிப்படையாகும்.

இந்திய அரசியற் களங்களைப் பற்றி எழுதும் பொழுதெல்லாம், சிறந்த இந்தியப் பொதுநூல் திருக்குறள் ஒன்றே என்றும், அஃதொன்றே 'இந்திய வழிகாட்டி' என்றும் மிகத் திறம்பட, காரண காரியத்துடன் சான்றுகளை வரிசைப்படுத்தி அழுத்தமுற எடுத்து மொழிகிறார். திருக்குறள் ஒன்றே இந்தியாவிற்கு, சாதி சமய இன மொழி கடந்த வழிகாட்டியாகுமெனும் இக் கருத்து அடிப்படையில் தமிழர்கள் ஆய்வுரைகள் பல எழுதி, அதை இந்திய நாடு முழுவதும் பரவுமாறு செய்யவேண்டும் என்று தோற்றுகிறது. பாரத மக்கள் தாமாக முன்வந்து திருக்குறளைத் தம் தேசிய மறையாக ஏற்கச் செய்ய இதுவே சிறந்த வழியாகும்.

## மொழிச்சிக்கலுக்குத் தீர்வு

'தலைவர்களுக்கு' என்ற நூலில், இந்திய மொழிச் சிக்கலைத் தீர்க்க, 1965லேயே மிகச் சிறந்த வழியொன்றைக் காட்டியுள்ளார். இந்தியா ஒரே நாடாக வாழவேண்டுமேல் இறுதியில் இவர் காட்டும் வழிக்கே திரும்பியாக வேண்டும். இதுவே உண்மை; வெறும் பாராட்டன்று.

அயல்மொழியாகிய ஆங்கிலம் இந்தியாவைத் தொடர்ந்து ஆளமுடியாது. 'இந்தி' மொழி ஒன்றே ஆட்சி மொழி எனில் பிற 13 மொழிகளும் அடிமைப்பட்டதாகவே ஆகும். நடுவணரசிலும் 14 மொழிகளுக்கும் சமவுரிமை தந்தால்தான் பாரதம் பிழைக்கும். பன்மொழி நாடாகிய ஒரு துணைக் கண்டத்தில் இது தவிர்க்க வொண்ணாதது.

அந்தந்த மாநிலத்தில் அவ்வம் மொழியே கல்வி மொழி, ஆட்சி மொழியாகவும், நடுவணரசில் 14 மொழிகளும் ஆளும் மொழிகளாகவும் இடம் பெற வேண்டும்.

இந்த அறிவியல் யுகத்தில் இது இயலாததன்று. அண்மைக் காலமாக திராவிட முன்னேற்றக் கழகம் நடுவணரசில் தமிழும் ஆட்சி மொழியாக வேண்டும் என வலியுறுத்தி வருவதை நாமறிவோம்.

> "தனி மாநில அளவில் விடாது, குடுமி முடிந்தாற் போல் மத்திய அரசிலும் அம்மொழிகளுக்கெல்லாம் ஏற்றத்தாழ்வின்றிப் பொதுவுரிமை இருந்தால் பிரியும் உணர்வுக்கோ, ஆதிக்கவுணர்வுக்கோ, அடிமையுணர் வுக்கோ இடம் எங்கே?" (த. 36, 37)

14 மொழிகளையும் வைத்து ஆள்வதெவ்வாறு? பாராளுமன்றத்தில் இம் மொழிகள் அனைத்திலும் பேசும் உரிமை தரவேண்டும். இங்ஙனம் பன்மொழி ஆட்சிக்கான வரன்முறைகளை மிகத் திட்டமிட்டுக் கண்டு செயற் படுத்தலாம். ஆட்சி எளிமைக்காக உரிமையை மறுக்கக் கூடாது. மறுத்தால் என்றாவது ஒருநாள் இந்தியா சிதறுண்டு

போகும். நடுவணரசின் அரசாணைத் தேர்வுகள் பதினான்கு தாய்மொழிகளிலும் எழுதப்படலாம் என இன்று மாறியிருப்பதை எண்ணிப் பாருங்கள். இதையே வழிகாட்டியாகக் கொண்டு பன்மொழி ஆட்சியை நிலை பெறுத்தலாம்.

ஐ.நா. பேரவையில் ஐந்து மொழிகள் ஆங்கிலம், சீனம், சுபானியம், உருசியம், பிரஞ்சு என்பன நடைமுறை மொழிகள். ஆங்கிலத்திற் பேசினால் ஏனை நான்கு மொழிகளிலும் உடனுக்குடன் மொழி பெயர்க்கப்படும். இவ் ஐந்தல்லாத ஏனைய மொழிகளிலும் பேசலாம். ஆனால் இவ் ஐந்தனுக்குள் ஒன்றிலேனும் அதை மொழி பெயர்க்க ஏற்பாடு செய்து கொள்ளவேண்டும்.

சுவிச்சர்லாந்தில் ஒரு விழுக்காடுள்ள மொழிக்கும் சமவுரிமை தந்து நான்கு மொழிகளை ஆட்சியில் பயன் படுத்துகின்றனர். உலகெங்கும் இவ்வாறு நடக்கும் பன்மொழி ஆட்சிகளைக் கண்டு வந்து, பாரதத்தில் செயற் படுத்துவது இயலாமற்போகாது. இந்திய நாடு சமவுரிமை கொண்ட நாடுகளின் - சமவுரிமை கொண்ட மொழியாளர் களின் நாடாக மட்டுமே மலர, முடியும்.

## பழந்தமிழ் நூல்களின் புதுவாழ்வு

தொல்காப்பியம், சங்கஇலக்கியம், திருக்குறள், இரட்டைக் காப்பியம் - இவை மாணிக்கனாரின் ஆய்வுக் களங்களில் முதன்மை வகிப்பவை; தலைமை தாங்குபவை. இவை சி. வை. தாமோதரம் பிள்ளை, உ.வே. சாமினாதய்யர், பின்னத்தூர் அ. நாராயணசாமி அய்யர் போலும் சான்றோர் பலரால் புத்துயிர் பெற்று புதுப் பதிப்புப் பெற்றன. அவற்றில் ஆராய்ச்சிப் புத்தொளி பாய்ச்சி, புதுமைப் பார்வையில் அணுகவைத்து, தமிழ்க் கல்வியாளர்களின் கவனத்திற்குக் கொண்டு சென்ற பெருமையில் பெரும்பங்கு மூதறிஞர் வ.சுப. மாணிக்கனா ருக்கு உண்டு.

அவை இடைக்கால உரைகளால்தான் வாழ்வு பெற்றன. அதற்கு நாம் நிரம்ப நன்றிக் கடன்பட்டுள்ளோம். ஆனால் தமிழகத்தின் நீண்ட நெடிய வரலாற்றில், இடைக் காலத்தில் அயல்மொழிச் செல்வாக்கும், தமிழுக்குப் புறம்பான சமயம், பண்பாட்டுப் படையெடுப்புக்களும் ஏற்பட்டு அதனால் நம் பழந்தமிழ் நூல்கள் உரை எனும் பெயரால் உண்மைக்குத் திரையும் இடப்பட்டனவாயின. நம் இலக்கண, இலக்கியம், கலை, சமயப் பண்பாட்டுக் களங்கள் அத்தனையும் குழம்பிக் கிடக்கின்றன. தமிழனின் உண்மையான வரலாறும் தமிழின் இயல்பான சிறப்புக் களும் அறியப்படவேண்டும். தமிழன் உருவாக்கி வளர்த்த நாகரிகம், கலை, சமயம், மெய்யியல் யாவும் கண்டறியப்பட வேண்டும். உலக நாகரிக வளர்ச்சிக்கு, கிரேக்கர் போலவும் உரோமானியர் போலவும் தமிழரின் பங்கு அளப்பரியது; ஒப்புயர்வற்றது. இவை தமிழர்களால் கண்டு கொள்ளப் பட்டு உலகிற்கு உணர்த்தப்பட வேண்டும்.

தமிழ்க் காதலில் கைக்கிளை, பெருந்திணை பற்றிய பிழைபாடான கருத்து வளர்ச்சியைக் காட்டி, தொல் காப்பியமும் சங்க இலக்கியமும் காட்டும் உண்மையான விளக்கங்களை இவர் ஐயமறத் தெளிவுபடுத்துகிறார். சங்க இலக்கிய ஆய்வில் இறங்கும் நம்மவரும் பிற நாட்டவரும் பாட நூல்போல் எழுதப்பட்ட நம்பி அகப் பொருள், புறப் பொருள் வெண்பா மாலை, யாப்பருங்கலக் காரிகை இவற்றொடு நின்று விடுவது ஒரு மரபாயிற்று. அதை மாற்றித் தொல்காப்பியத்திலிருந்து தொடங்கவேண்டும் என வற்புறுத்தியதுடன் வழிகாட்டிய பெருமையும் இவருக்குரியதாகும்.

> "தொல்காப்பியத்தில் கைக்கிளை, பெருந்திணை கட்குத் தனி நூற்பாக்கள் உள. இப் பாக்கட்கு வரைந்த உரையும் விளக்கமும் எல்லாம் முற்றும் பிழை. இப் பிழைபாடு உரையாசிரியர்கள் காலம் முதல் எழுத்து வழக்கில் ஏறி நிலை பெற்று விட்டது. இப் பிழையான உரையே பன்னூறாண்டுகளாக

வழக்கில் இருக்கும் மரபான உரையாகும். மாற்றி நினைக்கவோ, மறுக்க நினையவோ உண்மை காணவோ முயன்றாரிலர்' (த.கா. 225)

இவ்வாறு பல நூற்றாண்டுகளாக வளர்ந்து முற்றி விட்ட தவறுகளைத் தமது ஆய்வுகளால் சுட்டிக் காட்டி, உண்மையான புது விளக்கங்களைத் தருகிறார். இவ்வாறு தாம் வழிகாட்டுவதை இவர் நன்கு அழுத்தமாய் மனவுறுதி யோடு வெளிப்பட மொழிந்தே தம் ஆய்வுரைகளைத் தொடங்குவார்.

"ஆயிரக்கணக்காகத் தொல்காப்பியம் படிக்கும் மாணவ மாணவிகளையும் ஆசிரியர்களையும் இடைக் காலக் கொள்கைகளையெல்லாம் தொல்காப்பியக் கொள்கைகளாக மயங்கிப் படிக்குமாறு இனியும் அல்வழிப் படுத்தலாமா?" (தொ. 193) என்று கேட்பார் இவர்.

**பெறுமவற்றுள் யாம்அறிவது இல்லை அறிவறிந்த**
**மக்கட்பேறு அல்ல பிற**

இம் 'மக்கட்பேறு' அதிகாரத் தலைப்பைப் 'புதல்வரைப் பெறுதல்' என மாற்றியதோடு, 'அறிவறிந்த மக்கள்' என்றதால் பெண் மக்களைக் குறியாதெனவும் தமது காலச் சூழல் வயப்பட்டுப் பரிமேலழகர் உரையெழுதியுள் ளார். "அறிவறிந்த என்றதனான், மக்கள் என்னும் பெயர் பெண் ஒழித்து நின்றது. இதனால் புதல்வரைப் பெறுதலின் சிறப்புக் கூறப்பட்டது" என்பது அவர் தரும் விளக்கம். பரிமேலழகரை 'உரை ஞாயிறு' எனவும் பிறிதோரிடத்தில் புகழும் செம்மல் மாணிக்கனார் இதைக் குறிப்பிடுங்கால், "வள்ளுவத்தின் அடிவேரினை விளக்கம் என்னும் வாள் கொண்டு அறுத்தெறிந்தார்" என வன்மையாக மறுத்துரைப் பக் காண்கின்றோம். (வ. 146)

## ஆய்வு அடித்தளங்கள்

பழந்தமிழ் நூல்களில் இடைக் காலத்தாக்கங்களால் ஏற்பட்ட பிழைபாடுகளை நீக்குவது ஒருதளம்; அந்

நூல்களில் ஆர்வத்தை ஏற்படுத்தலும் புது விளக்கம் தந்து வழிகாட்டலும் பிறிதொரு தளம். இவ்விரு தளங்களில் இயங்கும் மாணிக்கனாரின் ஆய்வுக்களங்கள் மிகுந்த நுட்பமும் நுண்ணுணர்வும் உடையவை. இவை நம் தமிழ் மாணவர்கள் கட்டாயம் அறிமுகம் செய்து கொள்ள வேண்டியவை.

தவறான வழியில் விடப்பட்ட கல்வி, அறியாமையை விடக் கேடானது. தமிழ்க் கல்வி தெளிவுபெறக் கூடிய காலத்தில் நாம் வாழ்வது நமது நற்பேறேயாகும். தமிழ் மாணவர்கள், ஆய்வாளர்கள் நம் நூல்கள் பற்றிய, முறையான, ஐயமில்லாத, அறிவார்ந்த, மரபு வழிப்பட்ட கருத்துக்களை அறிந்து அவற்றைப் படிக்கவும் ஆராயவும் வேண்டும். இதனை, மனங்கொண்டு நம் தமிழ்ச் சிறப்புக் கல்விப் படிப்புக்குப் பாடத் திட்டங்கள் வரையறுக்கப்பட வேண்டும்.

## ஐயம் தீர்த்துப் பிழை களைதல்

'தமிழ்க் காதல்' ஆய்வு கைக்கிளை, பெருந்திணை பற்றிய இடைக்காலப் பிழைபட்ட கருத்து வளர்ச்சியை முற்றிலும் களைந்து, அவற்றின் உண்மையான விளக்கங் களைத் தொல்காப்பியம், சங்க-இலக்கியம் அடிப்படையில் தருகிறது.

திருவள்ளுவர் தம் நூலை மக்கள் செயலில் மேற் கொள்ளுமாறு எழுதியுள்ளாரே தவிர, உரை நயம் காண எழுதவில்லை என வள்ளுவ நூல் தெளிவுபடுத்துகிறது.

'தொல்காப்பியக் கடலில்' ஆய்வுகள் பல முற்றிலும் இந்த நோக்கில் எழுதப்பட்டவை. அவை ஐயம் தீர்த்துப் பிழை களையக் காட்டும் வழிகளைத் தமிழ் மாணவன் கட்டாயம் அறிதல் வேண்டும்.

முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே

என்ற தொல்காப்பிய நூற்பாவுக்கு இதுவரை சொல்லப் பட்ட உரை மறுக்கப்படுகிறது. 'சொல்லவும் படும்' என்றால், எதிர்மறை யும்மையாகக் கொண்டு வேறு வகையாகவும் எண்ணப்படும் என இதுகாறும் உரையெழுதி யுள்ளனர். இவர் அதனை தெரிநிலையும்மையாகக் கொண்டு 'இவ்வாறு சொல்லும் முறையே தகுதியாம்' என்று உரை கூறுகிறார். இதற்கு அவர்

புணர்ந்த வகையிற் புணர்க்கவும் பெறுமே
பல்வகை யானும் படைக்கவும் பெறுமே
நிலைக்குரி மரபின் நிற்கவும் பெறுமே
ஆசிரிய இயலான் முடியவும் பெறுமே

என்ற நான்கு நூற்பாக்களின் நடையொற்றுமையைக் காட்டித் தொல்காப்பியர்க்கு இந்நடைப் பாங்கில் கூறும் பழக்கமுண்டு என நிறுவுகின்றார். இடைக்கால உரையாசிரி யர்கள் காணாத ஒன்றை இவர் கண்டு கூறுகிறார். இதில் இக்காலத் திறனாய்வு அறிவும் பயன்படுகின்றது. அதனுடன் பழைய உரைகள் அனைத்தையும் படித்து ஒப்பிடும்போது நமக்குப் புதிய வெளிச்சம் கிடைக்கிறது என்பதையும் இவர் ஒப்புக் கொள்கிறார். இவ்எளிய எடுத்துக்காட்டைக் கொண்டு, பிற நுண்மாண் நுழைபுலக் களங்களையும் தேடிப் படித்தல் நலமாகும்.

## தமிழ்நாடு போக்குவரத்துக் கழகமா ?
## தமிழ்நாட்டுப் போக்குவரத்துக் கழகமா ?

தொல்காப்பியம், நன்னூல் இலக்கணப் படியும் தமிழ் மரபுப் படியும் தமிழ்நாட்டுப் போக்குவரத்துக் கழகம் என்பதே முறை. ஆனால் இன்று நாம் ஆங்கிலத்தில் எழுதி, அதையே தமிழிலும் எழுதுகிறோம்.

Tamilnadu Electricity Board

Tamilnadu Housing Board

Tamilnadu Transport Corporation

இதை அவ்வாறே தமிழில் எழுதும்போது 'தமிழ் ஊர்தியை ஆங்கிலத் தண்டவாளத்து வேகமாக ஓட்டுகிறோம்.'

தமிழ்நாடு மின்சார வாரியம்

தமிழ்நாடு வீட்டுவசதி வாரியம்

தமிழ்நாடு போக்குவரத்துக் கழகம்

இது முறையா? 'தமிழ்நாட்டு' என்றல்லவா வர வேண்டும்? மிகவும் சிந்தித்து ஒரு முடிவுக்கு வருகிறார். தமிழ்நாட்டு விளையாட்டுக் கலை, தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகம் என்னும்போது தமிழ்நாட்டுக்குரிய, சார்ந்த எனப் பொருள்படும். ஆனால் இங்கு 'தமிழ்நாடு' என்பது பெயராய் – அடைமொழியாய் பொதுப்பட நிற்கிறது. எனவே இங்கு 'தமிழ்நாடு போக்குவரத்துக் கழகம்' என்பதை இக்கருத்தில் ஏற்கலாம். செம்மலார் 'தமிழ்நாடு' என்ற சொல் இங்கு வினைமுதலாய் நிற்கிறது என்பார். தமிழ்நாடு அரசு நடத்தும் கழகம் என்பதாக விரிப்பார். அதனால் பெயராக அமையலாம் என வழுவமைதி காண்கின்றார். ஆயினும் வாக்கியமாகக் கூறும்போது 'தமிழ்நாட்டுப் போக்குவரத்துக் கழகத்தில் புதிய பேருந்துகள் வாங்கப் பெற்றன' என்றுதான் கூறவேண்டும்.

இங்ஙனம் புதிய இலக்கணம் படைக்கலாம் என ஒப்புகின்றார். தொல்காப்பியத்தில் மட்டுமன்றி, அதன் உரைகளிலும் பிற்கால இலக்கணங்களிலும் இவர்தம் ஆழ்ந்த புலமையை வெளிப்படுத்தும் களங்கள் பல.

சங்க இலக்கிய ஆய்வில் 'பாரி மனைவி' என்ற கட்டுரையும் 'பறம்புப் போர் வஞ்சனையா' என்ற கட்டுரையும் வழிவழியாகக் கூறப்பட்டு வந்த கருத்துக்களை மறுத்து, உண்மையை நிலை நாட்டும் அழகு படித்து இன்புறத் தக்கது.

## ஆர்வத்தைத் தூண்டுதல்

இடைக்கால இலக்கியத்தும் இக்கால இலக்கியத்தும் இவர் தமக்கிருந்த பரந்த புலமையையும் செவ்வனே சில கட்டுரைகள் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார்.

திருவாசகம், கோவை இலக்கியம், காப்பியங்கள், தனிப் பாடல்கள், இக்காலக் கவிதை இலக்கியம் யாவும் இவர்தம் ஆய்வுக்குப் பொருந்திய களமாகியுள்ளன. ஆயினும் பழந்தமிழ் நூல்களில் ஆர்வத்தை ஏற்படுத்தவும் சுவையூட்டவும் ஆயும் வழிகாட்டவும் இவர் எடுத்துக் கொண்ட முயற்சிகள் கூடுதலாகும்.

தொல்காப்பியப் புதுமை என எழுதிப் பழமை என ஒதுக்க நினைக்காதீர் என்று உணர்த்துவார். தொல்காப்பிய நயம் என எழுதி, இலக்கிய நயம் போலத் திறனாடுவார். தமிழ் முதல் நூல், தொல்காப்பியம் நிலைபெற்றது எப்படி என்பன பெருமை காட்டி மனத்தை ஈர்க்க முயல்வன. தொல்காப்பியர் நெறிகள், தொல்காப்பியப் புதிய உத்திகள் இரண்டும் தொல்காப்பியம் கற்கும் நெறிமுறைகளைத் தருவன.

தொல்காப்பிய உரைநயம், தொல்காப்பிய உரை நெறிகள், தொல்காப்பிய உரைத்திறன்கள் என்பன உரை யாசிரியர்களை அறிமுகப்படுத்தி விளக்குவன மட்டுமல்ல; நம்மைச் சிறந்த உரையாசிரியராக ஆக்கக் கூடியன.

சங்க இலக்கியத்தில் 'அருஞ்சொற்களா?' என வினா எழுப்பி, அவ்வாறு அஞ்சற்க என வழிகாட்டுவார். 'தூய இலக்கியம்' ஆர்வத்தைத் தூண்டும் அறிமுகக் கட்டுரை. பதிற்றுப் பத்தைப் பலரும் தொடுவதில்லை. இவர் நான்கு கட்டுரைகளில் பதிற்றுப்பத்தின்பால் ஈடுபாடும் புலமையும் ஏற்பட வழி செய்து விடுகிறார். புறநானூற்றுப் புலவர் வான்மீகியார் பாடலை, இராம கதையுடன் ஒப்பிட்டு, வான்மீகியார் தமிழரோ எனச் சிந்திக்க வைத்துவிடுகிறார்.

புறநானூற்றில் வான்மீகியார் பெயரால் உள்ள ஒரே ஒரு பாடலின் இறுதியடிகள்:

**விட்டோரை விடாஅள் திருவே**
**விடாஅதோர் இவள் விடப் பட்டோரே (358)**

என்பன.

தன்மீது ஆசை வையாது விட்டவரைத் திரு தான் விட மாட்டாள்; ஆசையை விடாதவரை அவள் கைவிட்டு விடுவாள்.

இராமனுக்கு இது மிகவும் பொருந்தும். அவன் முடி சூடவில்லை என்ற செய்தி கிடைத்தபோதும் அதிலுள்ள ஆசையை விட்டதால், திரு அவனை இறுதி வரை விடவில்லை. 'திரு' சீதையைக் குறிப்பதாகவும் கொண்டால், விட்டோரை - இராமன் அயோத்தி அரசைக் கைவிட்டுப் போனபோது 'விடாள் திருவே' சீதை (திரு) அவனை விடாது பின்தொடர்ந்தாள். "சீரை சுற்றித் திருமகள் பின்செல" என்ற கம்பர் பாடலில் 'விடாள் திருவே' என்னும் வான்மீகியின் சொல்லாட்சி போற்றப் பட்டிருத்தலைக் கண்டு மகிழ்வோம்," என்று (ச. 93) விளக்கும் போது, களங் கண்ட சான்றோரின் உளங்கண்டு மகிழ்கிறோம்.

கோடிட்டுக் காட்டுவன போன்று, இவர் தேர்ந்துள்ள ஆய்வுக்களங்களும் கட்டுரைப் பொருள்களும் திட்ப மானவை. எப்பொழுதும் ஒருவர் நெஞ்சம் அவர் சொல்லால் மட்டும் வெளிப்படுவதன்று. அச் சொல் மூலம் அவர் உள்ளக் கிடக்கையை அறிய வேண்டும். "எனவே, சொல்லெனப் படுவது யாதெனின், மக்கள் நெஞ்சூர்தி அன்று; கருத்தூர்தி என்பதுவே உண்மை" என்பது மாணிக்க வள்ளுவம். (வ. 7) ஆசிரியன் சொன்னதை வைத்து, அவனுடைய உள்ளத்தைக் காணவேண்டின், "கற்பார்க்குத் தூய நல் நெஞ்சமும் மயக்கமில் நுண்ணறிவும் வேண்டும்." வள்ளுவர் உள்ளங்காண வாய்மைச் செம்மல் கூறிய இது, அச்செம்மலார் தமக்கும் பொருந்தும்!

அவர்தம் நூல்கள், கட்டுரைகளின் வழி நாம் அறிவன ஆராய்ச்சிக் களங்களும் நுட்பங்களும் மட்டுமல்ல. “நீங்களும் இவ்வாறு ஆய்வுக் களம் தேர்வீர்களாக! ஆராய் வீர்களாக! பழந் தமிழ் நூல்களைக் கற்பீர்களாக! அவற்றைக் கற்று, அவற்றைப் பரப்ப, அவற்றின் வழி நமது நாகரிகப் பண்பாட்டுக் கூறுகளை நிலைபெறுத்தப் புதுத்தடம் அமைப்பீர்களாக!” என இவ்வாறு அவரது நெஞ்சம் மாணிக்கத் தமிழ் நூல்களின் வழியாகத் தமிழர் களுக்கு அறிவுறுத்திக் கொண்டிருக்கிறது! அவர்தம் நூல்களைப் பயில்வார், இந் நெஞ்ச ஓட்டத்தை நன்கு உணர்வர். அதனால் தமிழ் இலக்கிய இலக்கணக் கல்வி செம்மையும் சீர்மையும் பெறும்.

7

# நுழைபுலம் மிக்க நுண்ணறிவாளர்

செம்மல் மாணிக்கனார்தம் எழுத்துக்கள் அனைத்துமே சொற் செறிவும் பொருட்செறிவும் கருதி எழுதப்பட்டனவாதலின், அவற்றுள் வெற்றுரை என்றோ கழிக்கத்தக்கன என்றோ ஒரு சிறு பகுதிதானும் அமைந்தில. மேலும் அவர் எழுதிய கட்டுரை, ஆய்வுரை ஒவ்வொன்றும் ஒரு சிக்கலைத் தீர்ப்பதாக; ஓர் அரிலை விடுவிப்பதாக; ஒரு வினாவுக்கு விடையாக; ஓர் ஐயத்தைக் களைவதாக இருப்பதைத் தீரக் கற்றுணரலாம். கோவை நூல்கள் பற்றியும் காந்திக் கவிதை பற்றியும் எழுத நேரும் போதும் அவற்றைப் பலரும் எழுதுவதுபோல் விளக்கநடை ஆய்வாக விரித்தெழுதிப் போகாமல், ஏதேனும் புதுமை காண முயலும், போக்கையே கண்டு மனம் நிறைவடைகிறோம். எனவே உடம்பின்கண் உயிர் அணுத்தோறும் விரவிநிற்றல் போல் அவர் தம் நுண்மாண் நுழைபுலம் காணப்படாத இடமே இல்லை எனலாம்.

எனினும் ஒளி வீச்சுப்போலவும் மின் வெட்டுப் போலவும் அறிவாராய்ச்சி பளிச்சிடும் இடங்கள் சிலவற்றை மட்டும் காண்பது, அப்பெருமகனாரது நூல்களுட் புகும் பேரார்வத்தை விளைவிக்கும். அந் நல் நோக்கத்துடன், இங்கும் அங்குமாக ஒரு சில மட்டும் காண்போம்.

### ஐ,ஔ வடிவு மயக்கம்

ஐ, ஔ எழுத்துக்கள் வடமொழியிலுள்ள சந்தியக்கரம் எனப்படும் கூட்டொலிகளே என்றும் அஇ

சேர்ந்து ஐயும் அஉ சேர்ந்து ஔவும் உருவாயின என்றும் இவை தமிழ் நெடுங்கணக்கில் தேவையற்றவை என்றும் வாதிடுவார் இன்றும் பலராவர்.

இவர்களில் சிலர் மொழி முதல் வரும் ஐ, ஔகள் பற்றியே நினைவிற் கொண்டனர். ஐயர் - அய்யர், ஔவை - அவ்வை. எனவே ஐ, ஔ இன்றியே தமிழியங்கும் என நம்பினர். விடுதலய், கடய் என இறுதியிலோ; மடய்யன், கடய்யன் என இடையிலோ வரும்போது ஏற்படும் ஒலி, பொருள் தடுமாற்றங்களை அவர்கள் நினைத்திலர்.

இதுபற்றிய தொல்காப்பிய மொழிமரபு நூற்பாக் களுக்கு எழுதப்பட்டுள்ள மாணிக்க உரைக்கருத்து, மிக நுட்பமான அரிய விளக்கமாகும். முன்னைய பலவுரை களையும் ஒத்திட்டுக் கற்று, உண்மையுரை காணவேண்டு மென்ற தமது கருத்திற்கிசைய இவ்வுரை விளக்கம் கண்டுள்ளார்.

ஐ - அய், அய்யர், அய்ந்து, வய்யம். தனியே சொல்லும்போது ஐ, கை, வை என்றே நிற்கும்; மொழியில் வரும்போது மட்டுமே அய்யம், கய்ப்பு, வய்யம் என எழுத்து மயக்கமாக வரும். அவ்வாறு வரும்போது, ஓரளவு - ஒரு மாத்திரையே பெறும். பாடலுள் வரும்போது ஓசை கணக்கிட இது உதவும். இங்ஙனம் வடிவு மயங்குதல் இருவகைப்படும். சில சொற்களில் வய்தான், அய்ந்து, தய்யல் எனவும் வேறு சிலவற்றில் மயிந்தன், கயிலை, வயிரம் எனவும் வரும். யகர மெய் வரும் சொல்லில் இகரம் வாராது; இகரவுயிர் வருமிடத்தில் யகரம் வாராது. வைதான் வய்தானாகும்; வயிதான் ஆகாது. கைலை கயிலையாகும்; கய்லை ஆகாது. இவை கூட்டொலியன்கள் அல்ல; கூட்டு வடிவங்கள்.

இது ஒரு பெரும் தனி ஆய்வு பற்றியது. இதில் பாய்ச்சியுள்ள மாணிக்க ஒளியும் சேர்த்தே, எதிர்காலத்தவர்

சிந்தித்தாக வேண்டும். அத்துணை ஆழ்ந்த சிந்தனைகள் மாணிக்கவுரைக்கண் உள.

**கம்பனியம்**

கம்பனின் காப்பியக் கலைத் திறத்தைக் 'கம்பனியம்' எனக் குறிப்பிட்டழைப்பார், இப்பேராசான். இவர்தம் திறனாய்வுகளில் 'கம்பர்' நூலுக்குத் தனியிடம் உண்டு. ஏன்? கம்பர் காப்பியம் பற்றிய ஆய்வுகளிலும் இவர் தம் பார்வைகள் புதுமையுடையன.

தொல்காப்பியப் புதுமை என்றும் பாரதியின் பழமை என்றும் தலைப்பிட்டு எழுதுவதே, இவர்தம் புதுமைப் பார்வையை விளக்கவில்லையா?

"கதைக்கு வடமொழி மூலமாக இருந்தாலும் கதைமேல் எழுந்த காப்பியக் கட்டிடத்துக்குத் தமிழே மூலமாகும்," (க.53) என்று இவர் நிறுவுகின்றார்.

கம்பர் காப்பியத்தில் தோய்ந்த மாணிக்கனார் போகிறபோக்கில் தெளித்துச்சென்ற சில மாணிக்க மொழிகளைக் கண்டாற்கூட, அன்னவர்தம் நுட்பத்திறன் நொடியில் விளங்கிவிடும்.

கம்பருக்கு எப்பாத்திரத்தின் மீதும் மிகையான பற்றும் இல்லை; மிகையான வெறுப்பும் இல்லை. இராமன் தவறுமிடங்களையும் சுட்டிக்காட்டக் கம்பர் தயங்கிய தில்லை.

"இராமாயணப் போக்கில் இராமன் தவறும் இடங்கள் பலவற்றில் இலக்குவன் அறிவுடைத் தம்பியாக விளங்குவதைக் காண்கின்றேன்." (க.125) "அயோத்தி நிகழ்ச்சிகளில் இராமன் தெளிவையும் ஆரணிய நிகழ்ச்சிகளில் அவன் தெளிவின்மையையும் காட்டுகின்றார் கம்பர்." (க.130) "இராமன் பக்கத்தவரைக் கம்பர் இகழ்ந்த இடங்களும் பல; இராவணன் பக்கத்தாரை அவன் புகழ்ந்த இடங்களும் பல." (க.120) இக் கருத்துக்களுக்கான சில

சான்றுகளையும் தருவதால், கம்பர்தம் காப்பிய நேர்மையைப் பார்க்க நம் நெஞ்சம் அவாவுகின்றது!

இரு மந்திரப் படலங்களை ஒப்பிடும் அழகு சுவையானது. அயோத்தியா காண்டத்து மந்திரப் படலம் தயரதனுடையது; யுத்தகாண்டத்து மந்திரப்படலம் இராவணனுடையது. தயரதன் அவையில், அவன் இராமனுக்கு உடனே முடிசூட்ட வேண்டும் என்றதும் வசிட்டன் முதல் அனைவருமே தயரதனைப் பாராட்டத் தொடங்கிவிடுகின்றனர். "நாளையே சூட்டவேண்டுமா? என்ன அவசரம்? பரதனும் சத்துருக்கனும் ஊரில் இல்லையே? அறுபதினாயிரம் ஆண்டுகளாக ஆண்ட தயரதனுக்குப் பரதன் வரும்வரை, சில நாட்கள் பொறுத்திருந்தாலாகாதா?'' - இவ்வாறு யாருமே கேட்கவில்லை. "இதனால் தயரதன் அவையில் எதிர்பார்க்கும் அரசியலும் இடித்துக் கூறும் அமைச்சியலும் வளரவில்லை என்பது ஒருவாறு பெறப்படும். அயோத்தி அவை ஆமாம் அவைபோலும்,'' என நம்அறிஞர் நகையாடுகிறார்.

அனுமன் இலங்கையை எரித்தபின் இராவணன் மந்திர சபை கூடுகிறது. இராவணனை ஒட்டிப் பேசுவோரையும் வெட்டிப் பேசுவோரையும் அங்கு பார்க்கிறோம். கும்பகருணனும் வீடணனும் இடித்துக் கூறி அறிவுரை பகர்கின்றனர். 'சிட்டர் செயல் செய்திலை, குலச்சிறுமை செய்தாய்' என்றே கும்பன் இழித்துப் பேசுகிறான். 'அசைவில் கற்பின் அவ்வணங்கை விட்டருளுதி' என்று வீடணன் பலர் முன்னிலையில் அறிவுரை கூறுகின்றான். "இலங்கையவையின் குடியரசுத் தன்மைக்கு வேறு காட்டு வேண்டுமோ?" என்பார் நம் செம்மலார்.

## இன்மைக் கள ஆராய்ச்சி

ஓர் ஆசிரியன் படைத்த காப்பியக் களங்களையே ஆராயும் நாம், அவன் படைக்காது தவிர்த்த களங்களையும்

எண்ணிப் பார்க்க வேண்டும். உண்மைக் களம் - படைத்தவை. இன்மைக் களம் - படையாது விடுத்தவை. பேராசான் சொல்கின்றார், "காப்பியத்தெளிவுக்கு உண்மைக் கள ஆராய்ச்சி மட்டும் போதாது; இன்மைக்கள ஆராய்ச்சியும் உடனிலையாக வேண்டும்," என்று. (க.83)

சிலப்பதிகாரத்தில் கோவலன் மாதவிக்கு மணி மேகலை பிறந்து வளர்ந்ததை, இடைப்பட்ட காலத்தி லெல்லாம் குறிப்பிடவில்லை, "மதுரை சென்றபின், கொலைவாய்ப்படுவதற்கு முன், இனி நீட்டிப்புக்கு இடையூறு இல்லை என்று மணிமேகலையைச் சிலப்பதிகார அரங்கத்து வரச்செய்தார் இளங்கோ."

இராமாயணத்தும் இலக்குவன் மனைவி ஊர்மிளை, இடைப்பட்ட காலமெல்லாம் காப்பியத்தில் தலை காட்டவே இல்லை. காடேகும் பொழுதுகூடத் தன் மனைவியிடம் விடைபெற்றதாக இல்லை. மண்டோதரி தன் மகன் அட்சன் அனுமனால் கொல்லப்பட்டபோது, 'வயிறலைத்து மாழ்கியதாக,' ஒரே ஒரு பாடலே அமைகிறது. பின்னர் இந்திரனை வென்ற மகனாகிய இந்திரசித்தன் இறந்தபோது மண்டோதரி புலம்பி அழுவதைப் பெருங்களமாக அமைக்க நினைத்திருந்ததனால், முன்னதை மிகச் சுருக்கி விட்டார் கம்பர்.

இம் முறையைப் 'பாத்திர மறைப்பு' என்றும் கூறலாமெனத் திறனாய்வு செய்யும் நம் செம்மலார், இங்ஙனம் நுட்பமாய் உட்புகுந்து தேடவும் தயங்கவில்லை.

### உணர்ச்சிக் களம்

இராமணக் காப்பியத்துச் சுவைக்குக் காரணம் யாது? கம்பர் ஒவ்வொரு படலத்தையும் மனவுணர்வுப் படப்பிடிப்பாய் - உணர்ச்சிக் களமாய் அமைத்துவிடுதலே அதற்குக் காரணம். இம் மாபெருங் காப்பியத்து வரும் உணர்ச்சிக் களங்களை நீண்ட பட்டியலிட்டுக் காட்டும்

போது, இவரது முழுமைப் பார்வையும் நுட்ப அறிவும் வெளிப்படுகின்றன:

"கையடைப் படலத்துச் சினவுணர்ச்சியும், தாடகை வதைப் படலத்துப் பெண்கொலை யுணர்ச்சியும், மந்தரை சூழ்ச்சிப் படலத்துக் கொடுமையுணர்ச்சியும், கைகேசி சூழ்வினைப் படலத்து மகவுணர்ச்சியும், குகப்படலத்து அடிமை யுணர்ச்சியும், மாரீசன் வதைப் படலத்து மயக்கவுணர்ச்சியும், மராமரப் படலத்துத் தந்திர உணர்ச்சியும், வாலிவதைப் படலத்து அரசிய லுணர்ச்சியும், கிட்கிந்தைப் படலத்து அமைதி யுணர்ச்சியும், ஊர் தேடு படலத்து ஆய்வுணர்ச்சியும், நிந்தனைப் படலத்துப் பெண் துணிபு உணர்ச்சியும், உருக்காட்டுப் படலத்து விடுதலையுணர்ச்சியும், சூளாமணிப் படலத்து நம்பிக்கை உணர்ச்சியும், வீடணன் அடைக்கலப் படலத்து அரசியல் உணர்ச்சியும், முதற்போர்ப் படலத்து வெட்க வுணர்ச்சியும், கும்பகருணன் வதைப் படலத்து நன்றியுணர்ச்சியும், இந்திரசித்து வதைப் படலத்து அறிவுலக வுணர்ச்சிகளும், இராவணன் வதைப் படலத்து வீரவுணர்ச்சியும், மீட்சிப் படலத்துச் சோதனை யுணர்ச்சியும் சுற்றவுணர்ச்சியும் விஞ்சிப் பெருகிக் காப்பியத்தை நடத்திச் செல்லக் காணலாம்." *(க. 81)*

இங்ஙனம் இருபதுக்கு மேற்பட்ட உணர்ச்சிகளைப் பட்டியலிட்டிருப்பது பொருந்துமா எனப் பொருத்திப் பார்க்கத் தூண்டுகிறது. அவ்வப் படலங்களில் வேறு சில உணர்ச்சிகளும் இருந்தாலும் காப்பிய வளர்ச்சிக்குத் துணை செய்யும் உணர்ச்சியையே கம்பன் மீதூரச் செய்திருப்பதாக இவர் சுட்டிக்காட்டுவது கொண்டே சிந்திக்க வேண்டும்.

## கம்ப நாடகம்

கம்ப சூத்திரம், கம்ப சித்திரம், கம்ப நாடகம் என்றெல்லாம் சொல்வன, கம்பனில் திளைத்தவர்தம்

கருத்து வெளிப்பாடுகளே. கம்பன் காப்பிய முழுமையைத் தம் அறிவுக் கண்ணாடியிற் கண்டுகளித்த, இக்கவித் திறனாளி, அக்காப்பியத்து வரும் நாடகப் பண்பு மீக்கூர்ந்த படலங்களையும் நம் முன் வரிசைப் படுத்துகிறார்.

"இராமாயணத்தின் பல படலங்கள் தனித்தனி நூல் எனத் தகும் சிறப்புடையன. செகப்பிரியரின் நாடகங்கள் அனைத்தையும் தொகுத்தால் இராமாயணத்தின் பாதியளவுதானே இருக்கும்!

பாலகாண்டத்தில் தாடகை வதைப்படலம், அகலிகைப் படலம், மிதிலைக் காட்சிப் படலம், கார்முகப் படலம்;

அயோத்தியா காண்டத்தில் மந்தரை சூழ்ச்சிப் படலம், கைகேசி சூழ்வினைப் படலம், நகர்நீங்கு படலம், பள்ளியடைப் படலம், குகப் படலம்;

ஆரணிய காண்டத்தில் சூர்ப்பனகைப் படலம், மாரீசன் வதைப் படலம், சடாயு உயிர்நீத்த படலம்;

கிட்கிந்தா காண்டத்தில் மராமரப் படலம், வாலிவதைப் படலம், கிட்கிந்தைப் படலம்;

சுந்தர காண்டத்தில் ஊர்தேடு படலம், காட்சிப் படலம், நிந்தனைப் படலம், உருக்காட்டுப் படலம், சூளாமணிப் படலம், பிணிவீட்டுப் படலம்;

யுத்தகாண்டத்தில் மந்திரப் படலம், இரணியன் வதைப் படலம், வீடணன் அடைக்கலப் படலம், அங்கதன் தூதுப்படலம், முதற்போர்ப்படலம், கும்பகருணன் வதைப்படலம், நாகபாசப் படலம், பிராட்டி களங்காண் படலம், மாயாசீதைப் படலம், இந்திரசித்து வதைப் படலம், இராவணன் வதைப் படலம், மீட்சிப் படலம் என வரும் ஒவ்வொரு படலமும் ஒரு நாடகமாம் தகுதியுடையது," என 33 படலங்களைக் குறிப்பிட்டு, இவற்றிலுள்ள நாடகப்

பண்புகளைத் தேடியறியும் வேட்கையை நம்முள் கிளறிவிடுகின்றார். *(க.109)*

இலக்கணமாயினும் இலக்கியமாயினும் இங்ஙனம் நுனித்து நுனித்து நுட்பங்களைக் கண்டறிதலிலேயே கருக்கடையாயிருக்கிறார்.

## இலக்கணம்

'இதுவரை சொல்லி வந்தோமே அவையனைத்தும் பிழை' என இவர் மனத்திண்மையோடு கூறுமிடங்கள் பலவாகும்.

"இலக்கணத்தில் வழுவமைதி என்ற குறியீடும் பிழை; வழுவை நீக்கிக் காத்தல் என்ற கோட்பாடும் பிழை... எவ்வளவு உரைகளோடும் எவ்வளவு உரைவிளக்கங் களோடும் எவ்வளவு வழிவழிச் சிந்தனைகளோடும் என் ஆயுரை முட்ட வேண்டி வரும் என்று எண்ணுங்காலை, மனம் அழுங்குகின்றது.'' (தொ.160) இவ்வாறு 'வழுவமைதியா? மயக்கமா?' என்ற கட்டுரை தொடங்கு கிறது. ஏழு வழுக்கள் எனும் அனைத்தும் 'மயக்கங்களே' யாம். ஆணோ, பெண்ணோ என்று தெரியாத நிலையில், 'அவர்' என்று கூறவேண்டும் என்பது தொல்காப்பியம். *(506)* பால் இதுவென அறியாது மயங்குமிடத்தில், 'அங்கே நிற்பவர் யார்' எனல் வேண்டும். ஆண் என அறியின் 'நிற்பவன் யார்' எனவும் பெண் என அறியின் 'நிற்பவள் யார்' எனவும் கூறலாம். இரண்டுமற்ற நிலையில் 'நிற்பவர் யார்' எனல் வேண்டும். இது 'பால் மயக்குற்ற ஐயக் கிளவி.' இதனைப் பன்மையால் கூறிவிடின் தவறாகாது. இதைப் 'பால் மயக்கம்' எனல் வேண்டுமே தவிரப் 'பால் வழு' எனல் கூடாது. இங்ஙனம் தொடர்ந்து வழு ஏழெனவும் கூறி, அவற்றுக்கு வழுவமைதியும் கூறி வரும் வழிவழிக் கருத்தை மறுத்துத் தம் கருத்தை நிலைநாட்டுகிறார்.

"மயக்கம் என்ற பண்டைச் சொற்கு வழு என்ற இடைக்காலப் பொருள் கொண்டதால் ஆயிரம் ஆண்டுகளாக ஏற்பட்ட இலக்கணத் திருப்பங்

களையும் நெறியல்லா நெறிகளையும் தொடக்கமாக இக் கட்டுரையிற் காட்டினேன். இலக்கண நெறிஞர்கள் இத்தடத்தின்வழி மேலும் ஏகுவராயின், சொல்லதிகாரத்திலேயன்றிப் பொருளதிகாரத்திலும் உரையாசிரியர்கள் வழுவமைதிகள் என்று எழுதிய வற்றை நூற்பா தோறும் மீண்டும் ஆராய முந்துவர் என்பது என் எதிர்பார்ப்பு."

இவ்வாறு தமது மறித்து நோக்கி - எதிர்வினாத் தொடுத்து - பயன் கொள்ளும் 'நோக்குப்' பார்வையால் இவர் வழிவழிப்பட்ட பல பிழைபாடுகளை அகற்ற முயன்றுள்ளார். அகத்திணையில் கைக்கிளை, பெருந்திணை பற்றித் தவறாக எண்ணி, இலக்கணங்களும் எழுதிவிட்டதை அறவே மாற்றி அவை அகத்திணைக்குள் அடங்குவனவே; பிற்காலத்தார் கருதியதுபோலப் பொருந்தாதவை - பண்பாடு அற்றவை அல்ல என நிறுவியுள்ளார்.

சங்க கால உண்மைகள் இன்று முழுமையாகக் காணப்பட வேண்டுமேல், இடைக்காலப் புராண, இதிகாச, வைதிகச் சார்புள்ள விளக்கங்களை நீக்கி, மக்கள் வாழ்க்கையொடு ஒட்டிய பார்வை செலுத்த வேண்டும். இடைக் காலத்தோரால் நன்மையும் விளைந்துள; தீமையும் மிகுந்துள.

நச்சினார்க்கினியரும் பரிமேலழகரும் வடநூன் மரபும் வைதிகச் சார்புங்கொண்டு உரையெழுதிச் சென்றனர். எனினும் அவர்களால் அவ்விரு நூல்களும் இடைக் காலத்திற் காக்கப்பட்டு இன்று நம் கைக்கு எட்டியுள்ளன. மூலம் சிதையாமல் காத்த பெருமையும் இப் பெருமக்களுக்குண்டு. எனவே அவர்களை எவ்வளவு கடுமையாக மறுத்தாலும் தந்தையை மறுக்கும் தனயன் போலவே காணப்படுகிறார்.

**கரணம்**

உரையாசிரியர்களை எல்லாம் ஒருமனப்பட்டுக் கற்றதால் இவர்தம் உண்மைப் பொருள்காணும் நெஞ்சம்

தெளிவுற்றிருக்கிறது. இன்றுவரை பிழையாக எண்ணப் பட்டவற்றைத் திருத்துவதும் புதுமைகாண்பதும் எவ்வாறென இவர்தம் ஆய்வுகள் வழிகாட்டுகின்றன. சங்கப் பாடல்களைக் கற்றுத் 'தமிழ்க் காதல்' கண்ட இவர், அன்றைய மகளிர் திருமணமானதின் அறிகுறிகளாகக் காலில் கட்டியிருந்த சிலம்பை நீக்குவதும் மலர் சூடுவதும் ஆகிய இரண்டையும் இயல்பான கரணங்களாகக் கொண்டிருந்தனர் எனச் சான்றுடன் நிறுவுகின்றார். பெண் தாலி அணிவது அவள் திருமணமானவள் என்பதைக் காட்டுகிறதா? அடிமை என்பதை உணர்த்துகிறதா? அங்ஙனமாயின் ஆணுக்கும் தாலி அணிவிக்காதது ஏன்? இவ்வாறு புரட்சிச் சிந்தனைகள் எழும் காலம் இது.

இதை விட்டுவிடுவோம். ஆணும் பெண்ணும் யார் யார் திருமணமானவர்கள் என்னும் அடையாளம் இருப்பது நல்லதன்றோ? அமெரிக்க நாட்டில் ஆணும் பெண்ணும் திருமண மோதிரம் அணிவதால் அடையாளம் காட்டுகின்றனர். இன்றைய நடைமுறை அது. மோதிரம் அணியும் போதே, 'நீ என்னுடையவர்' என ஒருவரை ஒருவர் 'வரித்துக்' கொள்கின்றனர்; வரைந்து கொள்கின்றனர். பிறரின் நீக்கித் தமதாக்கிக் கொள்ளுதலே வரைதல். வரைதல் – நீக்குதல், எல்லை வகுத்தல், திருமணம் என்பன சொற்பொருள்கள்.

பழந்தமிழர் திருமண முறையில் 'சிலம்பு கழி நோன்பு' ஒன்றும், கூந்தலில் மலரணிதல் ஒன்றும் கரணங்களாய் நிலவியதைப் பல்வேறு சான்றுகளால் நிறுவுகிறார். ஒன்று இருந்தது நீக்கப்பட்டது; மற்றது இல்லாத ஒன்று புதுவதாகச் சேர்ந்தது. இரண்டும் நல்ல அடையாளங்கள்!

ஆணுக்கும் வீரக் கழல் அல்லாத, அழகுக்கணியப் பட்ட கழல், திருமணநாளில் அகற்றப்பட்டதாகக் கொள்ள இடமுளது. ஆனால் சிலம்புகழி நோன்பு போல அது கழல் கழி நோன்பாகக் கொண்டாடப் படவில்லை. ஆணுக்கு நீக்கப்படும் ஒன்று என இதைக் கொண்டால்,

சேர்க்கப்பட்ட மண அடையாளம் ஒன்றும் இருந்திருக்கலாம். இவை ஆராயற்பாலன.

முதலில் ஆணும் பெண்ணும் சேர்ந்தால், உடன் போய்விட்டால் திருமணம் என்ற இயற்கை நெறியே முன்பு இருந்தது. பின்பு எப்போது கரணம் வந்தது?

பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப (1090)

என்பது தொல்காப்பியம். காதலர்கள் முதலில் காதலித்து விட்டுப் பிறகு 'தெரியாது' என மறுப்பதைப் 'பொய்'யென்றும் அவ்வாறு செய்து, தாம் திருமணம் ஆகாதவர் போல் நடித்து வேறு ஒருவரைத் திருமணம் செய்துகொள்வது 'வழு' என்றும் இதுவரை விளக்கம் கூறப்பட்டு வந்துளது.

இதை மறுத்துப் புதிய விளக்கம் தரும் மதிநுட்பமே மாணிக்கத் தமிழின் மாண்பாகும்.

கரணம் சமுதாயப் பொதுநலன் கருதியது. ஒரு பெண் திருமணப் பக்குவம் அடைந்தாளுக்கும் அண்மையில் மணமானாளுக்கும் வேறுபாடு தெரியாவிட்டால், மற்ற ஓர் இளைஞன் அவளை மணமாகாதவளோ என உண்மையில் எண்ணிக் காதலாட முற்படலாமன்றோ? 'இனி யார் எண்ணுதற்கும் உரியாளில்லை' என்று சட்டென அறிதற்குச் சமுதாயம் ஒரு புறததோற்றத்தை அளித்தாலன்றி, அவள் பொய்யாக உணரப்படும் கட்டங்களும் கூடி, மணம் பேசும் வழுக்களும் பல்கிவிடும். எனவே சமுதாயம் பொதுநன்மை கருதி அளித்த புற அடையாளமே இவை என அறிதல் வேண்டும். பொய்யும் வழுவும் காதலிரிடை நிகழ்வன அல்ல; சமுதாயத்தில் நிகழ்வன. அதனால் குடியில் மூத்தோரால் இக் கரணங்கள் வகுக்கப்பட்டன. இவ்வாறு 'பொய்யும் வழுவும்' என்பதற்கு நுட்பமான உரை காணப்பட்டுள்ளது.

'தமிழ்க் காதல்' நூல் அகத்திணைக் கல்வியில் ஒரு திருப்பத்தை ஏற்படுத்தியது. அதுபோல் வள்ளுவம் என்ற

மா.11.

செயல்நூல் ஒரு விளைவை ஏற்படுத்தவில்லை. காரணம், தமிழனைச் செயலூக்கியாக அசைக்க முடியா தென்பது தெளிவு.

## ஒப்புரவும் ஈகையும்

செம்மல் அவர்களின் கூரிய மதிநுட்பத் திறனுக்கு, எளிய சில காட்டுக்களே போதும். அரியன அவரவர் தாம்தாம் கற்றுணர வேண்டியவை. திருவள்ளுவர் இரண்டு அதிகாரங்கள் வகுத்ததால் ஒப்புரவு வேறு, ஈகை வேறு என்பது கூறாமலே பெறப்படும். ஒப்புரவு பொதுவாக அனைவருக்கும் பயன்படுமாறு மருத்துவமனை அமைத்தல், கல்விச் சாலைகள் கட்டுதல் போல்வனவாம். ஈகை பசித்தார்க்கு உணவளித்தலும் இல்லை என வந்தார்க்கு ஈதலும் போல்வனவாம். குறள்களின் வழி இவற்றை வேறுபடுத்திக் காட்டுதல் சிறப்புடைப் பகுதியாகும்.

| ஒப்புரவு | ஈகை |
|---|---|
| பொதுக்கொடை | தனிக்கொடை |
| பல்லுயிர்க்கும் பயன்படும் பெருங்கொடை | தனிஉயிர்த் துன்பம் நீக்கும் சிறப்புக்கொடை |
| கல்வி நிலையம், நூல் நிலையம், ஏழைவிடுதி, தண்ணீர்ப் பந்தல், ஊருணி, பூங்கா அமைத்தல் | அற்றார் அழிபசி தீர்த்தல், வறியார்க்கு ஒன்று ஈதல் |
| தோட்டத்துக்குப் பாத்திகள், கால்வாய் வழி நீர்பாய்ச்சுதல் | செடிதோறும் நீரூற்றுதல் |
| ஒப்புரவு பெருஞ்செல்வர்க்கு உரியது | ஈகை எல்லோரும் செய்ய வேண்டுவது |
| ஒப்புரவு நாட்டைக்காக்கும் | ஈகை தனி வீட்டைக் காக்கும் |
| ஒப்புரவு நீடித்து நிற்பது | ஈகை பசிநீக்கும், வறுமை போக்கும் அவ்வளவிற்று |

இவை இரண்டும் ஒரு நாட்டு வளர்ச்சிக்கு வேண்டுமென்பதே வள்ளுவர் உள்ளக் கிடக்கை.

## இகலும் பகலும்

இகல் – மன மாறுபாடு, மனப்பூசல். அதுவே புகைந்து பகை நெருப்பாகிறது. 'பகை' அதிகாரங்களுக்கு முன்னதாக 'இகல்' என ஓர் அதிகாரம் உளது. பகல் – பிரித்தல், ஒற்றுமை கெடுதல். இதுவே பொருளாகத் தோன்றுகிறது.

ஆனால் இப் பேராசான் "விடுக்ககில்லாப் பிறப்பியல்பைக் காரணமாக மயங்கி மக்கள் கொள்ளும் பகை 'இகல்' எனப் பெயர் பெறும்" என்று விளக்குகின்றார். (வ.150) சாதி, மதம், நிறம், மொழி காரணமாக இடும் பூசல்களே இகலாகும்.

பகல் சிறுசிறு சண்டைகள்; பிரிந்துநின்று அடித்துக் கொள்ளுதல். ஒருவன் மற்றவனை இகழ்ந்ததற்காகச் சினந்ததற்காக அடித்ததற்காக வரும் சண்டைகள் – பூசல்கள் இவை. இவை பிறகு திருந்தவும் மாற்றிக் கொள்ளவும் கூடியது. இகலோ பிறப்பால் ஏற்படும் மாற்றிக்கொள்ள இயலாத காரணங்களுக்காகப் பகைப்பது. இது மிகுந்த அறியாமைப் பாற்பட்டது.

இகல், பகலுக்குத் தரப்பட்டுள்ள விளக்கங்கள் மேலும் ஆராய்தற்குரியவை.

## கடவுட் கொள்கை

திருவள்ளுவர்தம் கடவுட் கொள்கை யாது?

திருவள்ளுவர் கடவுள் என்ற சொல்லை யாண்டும் ஆளவில்லை. இறைவன் என்ற பெயரையே இருமுறை ஆள்கின்றார். அதற்கு எங்குமிருப்பவன், எப்பொருளிலும் உடனாய் உறைபவன் என்பது பொருள். (வ.293)

உலகிலுள்ள உயிர்களும் வாழும் உயிராம் மனிதர்களும் இறைக்கூறு உடையவரே. எவ்வாறு? இறை எங்கும் எதிலும் எப்போதும் உடனுறைதலால்!

திருவள்ளுவர் இவ் இறைமையுண்மையை முதற்குறளில் கூறினார். ஏனைய ஒன்பது குறள்களிலும் நாம் நம்முள் இறைமையை வளர்த்துக் கொள்ளும் வழிகளைக் கூறியுள்ளார்.

நம்மிடமுள்ள இறையொளியை அறிவின்மையால் நாமே மறைப்பது தவறு. ஏனைய உயிர்கட்குத் தம் இறைமையை வளர்த்துக் கொள்ளும் ஆற்றலில்லை. மக்கட்பிறப்பே அதைப் பெருக்கிக் கொள்ளும் ஆற்றலுடையது. நினைத்து நினைத்து - எண்ணியெண்ணி அவ் இறைமையை நாம் வளர்த்துக் கொள்ள வேண்டும். மனமாசு அகற்ற இறை வலிமையை - உள்ளொளியை நாம் பெருக்கிக் கொள்ள வேண்டும்.

இறைமை என்பது என்ன?

இறைமை என்பது குணமற்ற தனிப்பொதுப் பேராற்றல். மக்கள் வாழ்க்கையை உயர்த்தாத இறைக் கொள்கை பயனற்றது. வாலறிவனாக, வேண்டுதல் வேண்டாமை இலானாக, அறவாழி அந்தணனாக, எண்குணத்தானாகப் பண்புருவம் மட்டுமே காட்டினார். இத்தகைய இறையைத் தொழும் - இடைவிடாது நினைக்கும் - இப்பண்புகளையே உருவகப் படுத்தித் தியானிக்கும் - நினைக்கும் நாமும் வாலறிவராக, பற்றற்றவராக, ஐந்தவித்தவராக, அறவாழி அந்தண்மைய ராக வளர வேண்டும். இதுவே வள்ளுவ இறைக் கோட்பாடு; இறைவழிபாடு.

இறை நெறி விளங்கா நெறியன்று; வாழ்க்கைக்குப் பின்னிகழும் நெறியுமன்று.

அது அறிவு நெறி, வாழ்க்கை நெறி, ஒழுக்க நெறி! திருவள்ளுவர் இறைவனைக் குணத்தவனாகவும் அவன் நெறியை ஒழுக்க நெறியாகவும் காட்டியுள்ளார்.

எவ்வுருவையும் வணங்கு, போற்று; அது உன்னை உயர்த்துமேல், வாழ்விக்குமேல் அதுவே உன் மனஒருமை

ஆகட்டும். குறிகள் எல்லாம் அவரவர் நினைவுப் பற்றுக்கோடேயாகும். "நெஞ்சம் பற்றுதற்கு ஒரு குறி வேண்டும் என்ற கல்வியறிவைக் காட்டிலும், அக் குறியைக் குறிதான் என வைத்து, ஊடுருவிக் காணும் பகுத்தறிவு இன்றியமையாதது என்பது என் துணிபு".

ஒரு குறியை வைத்து வழிபடுதலெல்லாம், குணவழிபாடாக மலர வேண்டும்.

வள்ளுவம் வினை அறுப்பைக் கூறவில்லை; அவாவறுப்பைக் கூறுகிறது. அரிய வினையாற்றத் தூண்டுவதே இறைவழிபாடு.

கோயில் வலம் வந்து கும்பிடுதலே வழிபாடாய் நின்றுவிடுவது கூடாது. நாம் பற்றற்றுச் செய்யும் கடமையெல்லாம் வழிபாடே; இத்தகைய கடமை தவறாத ஒழுக்கம் மிக்க வாய்மையாளர்கள் அனைவரும் இறையன்பர்களே.

ஒழுக்க நெறியைப் பற்றுக என, அகத்தூய்மையே வழிபாடென நம் 'ஆன்மிகம்' வற்புறுத்தி இருக்க வேண்டும். அந்தி முதலில் நிறை வேற்றாதானுக்குப் புறச்சார்பால் பயனில்லை.

அடிசேர்தல் - இடைவிடாது நினைத்தல். இறையை எண்ணத்தால் - ஓர்மையால் - நம் நெஞ்சில் குடியேற்றி வழிபடவேண்டும்.

எனவே வாழ்க்கை முழுவதும் நினைக்கத் தகும் - பெருக்கத் தகும் - வளர்க்கத் தகும் இறைப்பண்புகள் யாவை?

வாலறிவன் நற்றாள் தொழுதல் - தூய எதிர்கால அறிவை நினைத்தல்.

வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்தல் - பற்றற்று நினைத்தல்.

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய் தீர் ஒழுக்க நெறிநிற்றல் - புலனைந்தும் அடக்கி வஞ்சகமின்றி ஒழுகுதல்,

அறவாழி அந்தணன் தாள் சேர்தல் – அறமும் அருளும் நினைதல்

இறைவன் அடி சேர்தல் – உள்ளுறை முதல்வனை நினைதல்.

இவ்வாறு இறைமையை விளக்கும் இதனை, நமது சமய மெய்யியலுடன் கூட்டிக் கற்று நடக்கும் நாளே நாம் உய்யும் நாளாகும்.

## ஊழ் – மாணிக்கச் சிந்தனை

திருவள்ளுவரின் ஊழ்க்கொள்கை பற்றிய சிந்தனை, வள்ளுவத்தில் மிக நுட்பமாக விளக்கப்பட்டுளது. எதிர் காலத்தில், சைவ சித்தாந்த வினைக் கோட்பாடு, சமண பௌத்த ஊழ்க் கோட்பாடு, இளங்கோவடிகள் சிந்தனை இவை அனைத்தும் மாணிக்கச் சிந்தனையோடு ஒருங்கு வைத்து எண்ணப்படவேண்டும்.

வள்ளுவரின் ஊழ் அதிகாரப் பத்துக் குறள்களிலும் முற்பிறப்புக் குறிப்போ, பழவினைக் குறிப்போ, மேலுலகக் குறிப்போ தினையளவும் இல்லை; யாதொரு குறிப்புச் சொற்கூட இல்லை என்பதை இவர் சுட்டிக்காட்டிய பிறகுதான் 'ஆமாம்' என்று தலையாட்டத் தோன்றும். ஏனெனில் பரிமேலழகர் தவிர்த்த பிறரெல்லாம் இக்குறிப்பு உள்ளது போலவும் எழுதியுள்ளனர். மூலக் குறள்களை ஓதுவார்க்கே உண்மை புலனாகும்.

எவ்வளவு பெரிய பகுத்தறிவாளராயினும் குறள் மூலத்தோடு, பழைய உரைகளையும் படித்துவிட்டே எழுதப்புகுவதால், பழைமைப் போக்கினின்றும் விடுபடாமல் தடுமாறுவதை உணர முடிகிறது செம்மல் மாணிக்கனார் திருக்குறள் மூலத்தையே முழுவதும் ஏற்கும் மனம் கொண்டவராய், உரைகளினின்றும் முற்றும் விடுதலை பெற்று நிற்கிறார்!

'ஊழ்' என்பது என்ன?

அஃதோர் உலகமுறை, உலகச் சூழ்நிலை. ஊழ் - முறை. அஃது ஓர் ஒழுங்குக்கு உட்பட்டே இயங்குகிறது. ஆயினும் அதைக் கணிப்பது எளிதன்று.

நமக்குத் தோன்றுவது, வானுலகெங்கும் கோள்களும் உடுக்களும் கோடிகோடியாக ஒரு வரன்முறைக்குட்பட்டு இயங்குவதுபோல, இவ்வுலகிலும் எத்தனையோ செயல்கள் - நிகழ்வுகள் - வினைகள் இயங்கிய வண்ணம் உள்ளன. இவற்றின் இயக்கத்திலும் ஒரு நுட்பமான முறை - ஒழுங்கு உளது. இவற்றை நாம் துல்லியமாய்க் கணிக்க முயல்கின்றோம்; ஆனாலும் எளிதில் முடிவதில்லை.

"இடத்தானும் காலத்தானும் அரசானும் சமூகத்தானும், சுற்றுப் புற மக்களானும் வரும் புறநிலைப் பாங்கனைத்தும், முடிவில் ஞாலத்தியற்கையாய், ஊழாய் மாறி நிற்கும். காரணப் பன்மை சான்ற ஊழ் நுண்ணிய பல விரிவுகளாய்க் கிளைப்பது; தூய பேரறிவு இல்லா மக்கள் பலரின் கணிப்பிற்கு அப்பாற்பட்டது," என்று ஊழை விளக்குகிறார். *(வ.321)*

ஊழ் செய்யும் நல்ல தீய தாக்குகள் பலவாகும். ஊழ் என்பது புறவுலகச் சூழ்நிலை. ஊழ் அதிகாரத்தில் பல குறள்கள் செல்வம் பற்றியன. சில சூழல்களில் ஒருவன் பெருஞ் செல்வனாகின்றான்; சில சூழல்கள் ஒருவனுக்குப் பேரிழப்பைத் தந்துவிடுகின்றன. எல்லாம் இவ்வுலகப் புறச் சூழல்கள்.

சிலபோது வருந்தியழைத்தாலும் வாராத வருவதில்லை. சில சூழ்நிலைகளில் வீசி எறியினும் நம் பொருள்கள் கைவிட்டுப் போவதில்லை. சில சூழ்நிலைக் காரணங்களினால் ஒருவன் செல்வமோ, அறிவோ ஒன்றுதான் சேர்த்துக்கொள்ள முடிகிறது. இரண்டினையும் பெறுவது மிகமிக அரிய சூழ்நிலை. செல்வம் ஈட்டும்போது நல்லவும் தீயவையாகிப் போவதுண்டு; தீயவை நல்லவையாகிப் போவதும் உண்டு. ஒருவனது நூற்கல்வி பரந்துபட்டதாயினும், அச்செயற்கை யறிவைவிட,

அவனுடைய இயற்கையறிவாம் உண்மை அறிவே மிகுந்து நிற்கும். பிறப்பால், சூழலால், வளர்ப்பால் அவனிடம் இயல்பாக உள்ளிருந்து ஊறும் அறிவென்பதே கருத்து.

ஒருவனது செயலழுத்தங்கள் உலகையும் தாக்கும்; உலகச் சூழல் அழுத்தங்கள் தனிமனிதனையும் தாக்கும்.

ஆகூழ், போகூழ் என்று நிலையாக எதுவுமில்லை. ஒருவனுக்கு ஆகூழ், மற்றவனுக்குப் போகூழாகும். ஒருவனுக்கே முன்பு போகூழாயிருந்தது, ஆகூழாக மாறக் கூடும். ஒருவனுக்கு ஒரு துறையில் செல்வம் குவிவது கண்டு, மற்றவனும் அதிற்புகுந்து உள்ளதையும் இழக்கக் கூடும். எல்லாம் சூழற்சுழற்சியின் பயன்; காலச் சுழற்சியின் விளைவு.

உலக மாற்றங்கள் பிறகு ஊழாய் விடுகின்றன. நம் முயற்சியால் பல புதியவற்றை உண்டாக்குகிறோம்; மாற்றங்கள் கொண்டு வருகிறோம். காலம் செல்லச் செல்ல இப் புதிய மாற்றங்களும் பழைய ஊழாய்ச் சுழலத் தொடங்குகின்றன.

ஊழிற் பெருவலி யாவுள ? மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்

நுணுகிப் பரந்த பொதுப்பேரியல்பை, நம் சிறுசிறு முயற்சிகள் - அவற்றை மாற்றப் போராடும் முயற்சிகள் - தடுக்க முடிவதில்லை. நம் முயற்சிகளும் அவ் ஊழின்படி சுழலத் தொடங்கிவிடும். அதற்காகச் சூழலுக்கு - ஊழுக்கு அடிமை ஆகலாமா? உலையாத முயற்சியாலும் கலங்காத அறிவாலும் அவ்வாற்றல் மிகு ஊழை நீ உன் வயப் படுத்திக்கொள்க என்பதுவே வள்ளுவர் தரும் ஊக்கவுரை.

"ஏனைய பிறப்பெல்லாம் ஒத்த சூழ்நிலையாயின் வளரும்; ஒவ்வாச் சூழ்நிலையாயின் அழியும்... சூழ்நிலை ஒப்பின், பயன் நிரம்பக் கொள்ளும் ஆற்றலும் ஒவ்வாவிடின் ஒவ்வுமாறு முயற்சி என்னும் புரட்சி செய்து

ஊழைவணக்கும் அறிவுத் துணிவும் மக்கட்பிறப்பிற்கு உண்டு என்பது வள்ளுவம்." (வ. 324)

ஊழ் - பழவினை என்பர்; அதுவும் முற்பிறப்பிற் செய்த வினை என்பர். அது தவறு.

ஊழ் என்பது உலகச் சூழ்நிலை. உலகத்தோடு ஒட்டி உறைக என்பதும்; உலகத்து இயற்கை அறிந்து செய்க என்பதும் (426,637) எல்லாம் 'ஆகூழோடு இயைந்து ஒழுகுக' என அறிவுறுத்துகின்ற முறையேயாம். ஆகூழ்நேரின் காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்ள வேண்டும்; வெயில் உள்ள போதே உலர்த்திக் கொள்ள வேண்டும். ஆகூழும் முயற்சியும் கூடினால் ஒன்று பத்தாக நலம் பயக்கும்.

தீயூழ் எதிர்ப்பட்டால் என் செய்வது? அதனை எதிர்த்து வெல்ல முயலவேண்டும். 'ஊக்கம் வேண்டும்; மடியின்மை கைக்கொள்ள வேண்டும்; ஆள்வினை, அறிவு, இடுக்கண் அழியாமை, வினைத்திட்பம் எல்லாம் வேண்டும். முயன்றால் ஊழை வெல்லலாம். 'உலைவின்றித் தாழாது உஞற்றுதல்' - ஊழை எளிதில் வெல்ல முடியாது; சோர்வின்றி இடையறாது அரும்பாடு பட்டால், சூழலை மாற்றிச் சாதகமாக்கிக் கொள்ள முடியும்.

**ஆகூழால் தோன்றும் அசைவின்மை; கைப்பொருள்**
**போகூழால் தோன்றும் மடி**

**பேதைப் படுக்கும் இழவூழ்; அறிவகற்றும்**
**ஆகலூழ் உற்றக் கடை**

முன்னைய விளக்கப்படி, ஊழ் இவ்வாறெல்லாம் ஒருவனை ஆட்டிப் படைக்கும் என்பதே பொருள். இதற்கு மாணிக்கவுரை மிகநுட்பமானது; நுழைபுலநுண்ணறிவு காட்டுவது; மேலாய்வுக்கு உரியது. இவை ஆகூழ், போகூழின் இயல்பைத் தெரிவிப்பன. அசைவின்மை - அழியா ஊக்கம் தோன்றினால் ஆகூழ் வந்தது என்பதாகும். மடி - சோம்பல் தோன்றினால் கைப்பொருளை இழக்கும் போகூழ் புகுகின்றது என்பதாகும். எனவே போகூழ்ச்

சூழலைப் புறக்கணித்து, ஆகூழ்ச் சூழ்நிலையோடு இயைந்து வாழ்க என்பது கருத்து.

இக் குறள் இரண்டிலும் 'ஊழ்' தலைமை தாங்குவது போலவும் அதுவே மனிதனைச் செயற்படுத்துவது போலவும் தொனிக்கின்றன. இவற்றை அவ் விரண்டு ஊழையும் 'இன்னவென' விளக்கும் குறள்களாக இவர் காண்கின்றார். இதனால் போகூழ்ப் பக்கம் போகாதே; ஆகூழ்ப் பக்கம் இணைந்து செயற்படுக எனச் சொல்லாமற் சொல்வதாகக் கொள்ள வேண்டும். மனிதனை எஞ்ஞான்றும் முயற்சிப் படுத்தி, வாழ்க்கையில் வெற்றிகொள்ள வழிகாட்டுவதே வள்ளுவ மாண்பாகும்.

ஊழ் வலிதேயாயினும், முயற்சியின் பயன் எஞ்ஞான்றும் மறுக்கப்படுவதில்லை. ஊழ் கூடிவரின் முயற்சிக்கு மேலும் பலமடங்கு செல்வம் திரளும்; ஊழ் கூடிவராவிட்டால், முயற்சிக்கு உள்ள அளவு பயன்கிட்டும். ஏனெனில் அம் முறைக்கே - விதிப்படியான சுழற்சிக்கே 'ஊழ்' எனப் பெயர்.

உலகப் புறச் சூழல் மாற்றங்கள் - ஊழாய் - மனிதனைப் பாதிக்கின்றன; மனித முயற்சியை வளர்க்கின்றன அல்லது தளர்த்துகின்றன. அச் சூழல் மாற்றம் நிகழப் பழவினைகளே காரணம் என்பது போலச் சிலர் கருதுகின்றனர். வள்ளுவத்தில் அதற்கான குறிப்பு இல்லை. எனவே கடவுளையும் கண்டவர் விண்டிலர்; விண்டவர் கண்டிலர். ஊழின் கதையும் அதுதான். எனவே உலக நிகழ்வுகளால் உலகிற் காணும் ஊழின் தன்மைகளையே திருவள்ளுவர் சிந்தித்து நமக்கு வழிகாட்டும் வகையில் எழுதியுள்ளார்.

## பன்மணித் திரள்

பேருண்மைகளைத் தேடுங்கால், சில சிறிய அரிய கருத்துக்கள் தாமே தோன்றுகின்றன. கல்வியின் ஆழமும் பரப்பும் காரணமாக, சீனிக் கட்டியினின்றும் உதிரும்

துகள்களும் இனிப்பதுபோல், ஆங்காங்கு எழுதப்படும் சிறிய தொடர்களும் அரிய கருத்துச் செல்வத்தை வழங்குவனவாய்த் தோற்றுகின்றன. அவற்றுட் சில மிகப் பெரிய, பரந்த ஆய்வுக் களங்களாய் விரிதல் கூடுமெனத் தோற்றுவன. அவற்றை மணிமொழிகள் என்பதை விட மாணிக்க மொழிகள் எனலும் சாலும். இங்ஙனம் நூல்தோறும் கட்டுரைதோறும் பரவிக் கிடப்பனவற்றில் ஒரு சில மட்டும் முன்மாதிரியாய்க் காணத்தகும்.

## உயிரினங்களின் காதல்

இவர்தம் 'தமிழ்க் காதல்' நூல், நுண்ணிய ஆய்வுத்திறம் சான்றது என்பது பலரும் ஒப்பியவுண்மை. அதன்கண் "அற்றைத் தமிழினர் அஃறிணை உயிர்களின் இன்பச் செய்கைகளை உயர்திணைக் காதற்கண்ணோடு பார்த்தனர்," *(27)* எனவும்; "அகப் பாடல் இயற்றுவதற்கு அஃறிணை உயிர்களின் இன்பப் புணர்வை, மக்களின் இன்பப் புணர்வோடு தரஞ் செய்து பார்க்கும் சீர்மை வேண்டும்," *(12)* எனவும் இடையிடையே ஓடிக் கிடக்கும் ஒரு செய்தி உளது.. மக்களின் புணர்தல், பிரிதல் முதலாய உரிப்பொருளைப் பாடுவதுபோல, சங்கப் புலவர்கள் அஃறிணை உயிர்களின் இன்பப் புணர்வு, வாழ்க்கை முறைகளையும் புனைந்துள்ளனர். மாந்தர்தம் இன்ப வாழ்வுக்குப் பின்னணியாய், அவை உந்துதல் தருவன. இதுவே 'இறைச்சி' எனவும் 'உள்ளுறை' எனவும் அகப்பாடல்களில் இடம்பெறும் அணி அழகுகட்கு அடித்தளம் அமைத்தது. இங்ஙனம் மிகவிரித்தும் நுட்பமாய்ச் சிந்தித்தும் ஆய்ந்து பார்க்கக்கூடிய செய்தி இது. ஒரு பொருளைத் தேடும் பொழுது, மறந்துபோன பிறசில பொருள்களும் தட்டுப்படுவது போல, இவை ஆய்வுப் போக்கில் தாமே ஓடிவருகின்றன.

## துறைக் குறிப்பாளர் அறிவு நுண்மை

அகப் பாடல்களுக்குத் துறை வகுத்தவர், கூற்று எழுதியவர் யாரென அறியோம். இப் பெயரறியாப் பெரும்

புலவர்கள் எத்துணை மரபறிவும் இலக்கிய அறிவும் திறனுமிருந்திருந்தால், சுருங்கிய அளவில், செறிவாகத் துறைகண்டு, கூற்று வகுத்திருப்பர். நாம் காணத் தவறும் ஒன்றை, கண்டும் நுட்பமறியா ஒன்றை ஒருவர் கண்டு கூறும்போது, நம் மனம் அவர்மீது உவகை கொள்கிறதல்லவா? இது கைதேர்ந்த எழுத்தாண்மையர்க்கு இயல்பான ஒன்றேயெனினும் இனியதொன்றல்லவா?

"குறுந்தொகைச் சுவைக்கு ஐங்குறுநூறு ஈடாகாது" (த.கா. 19) என்னும் போது, இரண்டனையும் இலக்கியப் பதம் பார்க்கும் ஆர்வம் எழுகிறது.

"அகநானூறு நற்றிணை குறுந்தொகை ஐங்குறுநூறு கலித்தொகை என்ற அகத்தொகை ஐந்தனுள்ளும் ஐங்குறு நூற்றுக்குத்தான் தக்கார் ஒருவரால் துறைகளும் நுண்மைகளும் நயம்படக் காட்டப்பட்டுள." (த.கா. 19) என்னும் வரிகளைப் படிக்கும்போது இவை அனைத்தின் துறைக் குறிப்புக்களைப் பார்க்கும் படிக்கும் ஒப்பிடும் உண்மைகாணும் வேட்கை, உண்மையான ஆய்வுநாடிக்குத் தோற்றாமல் போகாது. இவரே பின்பு ஒருகால், "துறையாசிரியர்களின் உரைநடை" (சு. 179) பற்றி மட்டும் ஒருதனிக் கட்டுரை வரைந்திருப்பக் காண்கிறோம்.

## இலக்கியத்தில் நடப்பியம் / எதார்த்தம்

இலக்கியம் சுவைப்படுத்தினால் போதாது; நெறிப்படுத்தவும் வேண்டும். சொல்லும் முறை சுவையாக வேண்டும்; சொல்லும் பொருள் நெறிப்படவே அமைய வேண்டும். சிறுகதை முதலாக இன்று படைப்புக் கலையாளர் பலரும், இத்திறனற்ற தன்மையினால் கண்டதை எழுதிச் சுவைப்படுத்துவதாய்க் கருதி மானுடத்தைச் சீரழித்து வருகின்றனர். இவர்களுக்கு உணர்த்தத் தக்க செய்தி ஒன்று, சங்க இலக்கியத்து உளது.

"தமிழ்ச் சான்றோர்கள் தீயனவற்றை விலக்கி நல்லனவற்றைத் தெரிந்து இலக்கியப் படுத்தி இலக்கணம் வகுத்தனர். சமுதாயத்தில் இல்லாத

ஒழுகலாற்றை அன்னோர் யாண்டும் கூறிற்றிலர்." (த.கா. 236)

"ஐந்திணையில் வரும் காதற்பான்மைகள் தனி யொருவர் வாழ்க்கையில் அப்படியே நிகழாதவை: சமுதாய முழுமை நோக்கின் எல்லாம் நிகழ்புவை. எனவே ஐந்திணைக் காதல் உள்ளது என்று பெறப்படும்." (மேற்படி 291)

"தீய முடிவுகளைச் சொல்லித் துன்பியலாக முடிவதுமட்டும் நடப்பியல் ஆகாது. எப்படி நடக்கவேண்டும் என்பதும் நடப்பியலுள் அடங்கும்."

"எழுத்தாற்றல் என்பது யாது? அதன் பயன் என்ன? வாசகர்கட்கு மனமெலிவைத் தாராதது, மெலிந்த மனத்தை நிமிர்த்துவது, புதுத்தெம்பு மின்னலைப் போல் பாய்ச்சுவது, தற்சிந்தனையைக் கிளறுவது - இதுவே எழுத்தின் அறுவடையாகும்." (இ. 16)

இன்று ஒரு புதினமாயினும் திரைக் கதையாயினும் வில்லன் ஒருவன் அனைத்துச் சூழ்ச்சியும் செய்கிறான்; அனைத்து அட்டகாசமும் நடக்கிறது; தொடர் அட்டூழியம் கடைசிவரை தொடர்கிறது; கடைசி ஒரு சில கணப் பொழுதில் அவன் சாவதாக – கைதாவதாக முடிகிறது. இதனால் கொலை, கொள்ளை, கற்பழிப்புக் காட்சிகள், 'கெய்ம் முறைப் பயிற்சி தரும்' காட்சிகளாய் நீள நடக்கின்றன; பச்சையாய்ச் சிவப்பாய்க் காட்டப் படுகின்றன. இதன் பயன்? சமுதாயத்தில் கொலை செய்பவர், களவாடுபவர், கற்பழிப்பவர் தொகை கூடி வருகிறது. இச் சம்பவங்களே செய்தித்தாட்களில் பேரிடம் பெறுகின்றன. இதுவா நடப்பியல்?

சினிமா எடுப்பவன் இதை 'தத்ரூபமாக' அப்படியே கண்கொள்ளாக் காட்சியாக எடுக்கின்றானே? அவன் மனைவி, மகள்கள், பேரன்பேர்த்தியர், பரம்பரை இங்ஙனம் பின்னாளில் அழிதலை அவன் கண்ணாற்

காணவும் நேரும் - அல்லது அவன் கண் மூடியபிறகு தொடரவும் கூடும். இதனால் குலமும் குடியும் அவன் பிறந்த சமுதாயமும் அழியும் என்பதை இச்சிறுமதியாளன் ஏன் மறந்துவிடுகின்றான்? அன்று கிடைக்கும் பணத்தை எண்ணுமிவன், நாளைப் பலர் தூற்றும் படியான தன் பிணத்தை எண்ணிப் பார்க்காமல் ஒழிகின்றானே? இவை நடப்பியல் அன்று; நாட்டைக் கெடுக்கும் 'நடைப் பிணவியல்' என்று எண்ண வேண்டும்.

## தொல்காப்பியத் துறையும் ஆண்டாள் காதலும்

"தமிழிலக்கிய வரலாற்றில் கடவுள் மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த துறைக்கு ஒரேயொரு எடுத்துக்காட்டுத் தான் உண்டு. அஃது ஆண்டாள் காதலாம்?" (இ. 142) சங்கப் பாடல்களின் சாயலை ஆண்டாள் பாசுரங்களில் காணலாம் என விளக்குமிடத்து, இத்துறையமைப்பும் பொருத்திக் காட்டப்படுகிறது.

## யாப்புக் கண்டுபிடிப்பு

இடைக்காலத்தார் புதுப்புது யாப்பு வடிவங்களைக் கண்டு, இலக்கிய வகைமையைப் பெருக்கியுள்ளனர். அவர் தம் கண்டுபிடிப்புக்களுள் சிறந்த ஒன்று காரிகை என்னும் கட்டளைக் கலித்துறையாகும். இது வெண்பாவும் வெண்பாவினமும் கலந்தது. எழுத்தெண்ணிப் பாடவல்ல இதன்கண் மக்கட்குக் கவர்ச்சியிருந்தமையால் கோவை நூல்களே யன்றி, இலக்கண நூல்களும் இவ் யாப்பில் எழுதப்பட்டன.

திருமந்திரச் செய்யுட்களுக்குக் கலி விருத்தம் என்று பெயர். இவை சீரும் தளையும் சிதையாத வெண்பாத் தன்மையன. இதைப் புதுக் கண்டுபிடிப்பு எனப் போற்றுகிறார்.

**என்பே விறகா இறைச்சி அறுத்திட்டுப்**
**பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்**

அன்போடு உருகி அகங்குழைவார்க் கன்றி
என்பொன் மணியினைக் காண வொண்ணாதே

"இவ்வாறு சீர் தளை அடி முதலியவற்றை மாற்றியமைத்து இனியும் புது யாப்புக்களைப் படைக்கலாமா என்பது பற்றிச் சிந்தனை செய்ய வேண்டும். இத்தகைய இலக்கியக் கண்டுபிடிப்புக்கள் தமிழின் மேல் வளர்வுக்குத் தேவை," (இ. 45) என்று கூறும் கருத்து மனங் கொளத் தக்கது.

## மதிப்புப் பன்மை 'ர'கர ஈறு

அவன் வந்தான், அவள் வந்தாள் எனத் தலைவன் தலைவியை ஒருமையில் ஆள்வதே பழம் மரபு. பெரிய புராணத்தில் சேக்கிழார் சிவ நெறித் தொண்டர்களை 'அவன்' என அழைக்கத் தயங்கி, 'அவர்' என மரியாதைப் பன்மை ஈறு கொடுத்து அழைத்தார்.

"பெரியபுராணமே முதன்முதல், தலைமை மாந்தர்க்கும் அவர் பற்றிய வினைச் சொற்களுக்கும் 'ரகர' வீறு கையாண்டு சிறப்பித்தது." (கா. 12) பின்னர் வந்த சீறாப் புராணமும் ஒரு தெய்வப் புராணமாதலின் பெரிய புராணத்தைப் பின்பற்றி, 'முகமது நபி நடந்தனர்', 'முகம்மது வந்தார்' என்றிவ்வாறு ஆண்டுளது எனக் குறிப்பிடக் காண்கிறோம்.

## இலக்கியம் வாழ்க்கைக்கே

காப்பிய நோக்கம் மக்கள் வாழ்வேயாகும். அதில் தெய்வக் கூறுகள் வரலாம். சமயக்காப்பியங்களில் அவ்வுலகத் தொடர்புகள் மிகுத்துக் கூறப்படலாம். எவ்வாறாயினும் இவ்வுலக வாழ்வை நெறிப்படுத்துவதே காப்பியப் பயனாகும். எனவே காப்பியத்திலுள்ள மனிதக் கூறுகளை வேறு பிரித்தறிய வேண்டும். அதில் வரும் 'அப்பாற்பட்ட' மேலுலகக் கூறுகள் அனையவை, மனிதக் கூறுகளைச் சிறப்பிக்கவும் சுவைப் படுத்தவும் வருவனவே.

திருநீலகண்ட யாழ்ப்பாணர் பரத்தைமையில் ஈடுபட்டதால் அவருக்கும் அவர் மனைவியாருக்கும் பெரும்பிணக்கு ஏற்பட்டது. பரத்தைபாற் சென்று வந்த நாயனாரைப் பார்த்து, அவர் மனைவியார், 'எம்மைத் தீண்டுவீராயின் திருநீலகண்டம்' என இறைவன் பெயரைச் சொல்லித் தடுத்தார். இக் குடும்பச் சிக்கலில் இருவரும் பிரிந்து வாழ்ந்தனர். ஒரே வீட்டில்தான் எனினும் தங்களுக்குள் பிணக்கு இருப்பதைப் பக்கத்தவரும் அறியாதபடி நடந்துகொண்டனர். அவர்களுக்குள் எவ்விதப் பிரிவும் பிணக்கும் இல்லையென உலகம் நம்பும்படி, அத்துணை நாகரிகமாக நடந்துகொண்டனர் என்னுமிதுவே மனிதக்கூறு.

இற்புறம் பொழியா தங்கண்இருவரும் வேறுவைகி
அற்புறு புணர்ச்சியின்மை அயலறியாமை வாழ்ந்தார்.

இங்ஙனம் உணர்ச்சி ஒழுங்குடன் நாகரிகமாக வாழவேண்டுமென்ற இதற்கே அழுத்தம் தரவேண்டும். இறுதியில் சிவன் வந்து காட்சி தந்து இருவரையும் இணைத்து வைத்தார் என்பது உலகக் காப்பியத்துக்கு அப்பாற்பட்டது. நாம் முதன்மை வாய்ந்த மனிதக் கூறுகளையே அழுத்தமாய்க் கொள்ள வேண்டும். பிணக்கிருந்தபோதும் வெளித் தெரியாமல் நாகரிகமாக வாழ்ந்ததையே நாம் அழுத்தமுறக் காட்சியாகக் காட்டியும் படித்தும் நினைத்தும் பயன் கொள்ள வேண்டும். (கா. 11) அவர்கட்குச் சிவன் வந்து அருள்செய்தமையும், அம் மானுடப் பண்பாட்டுச் சிறப்புக்குக் கிடைத்த பரிசேயன்றோ?

## இலக்கியப் பேச்சு

இலக்கியத்தில் வரும் உரையாடல்கள் உலக வழக்கை ஒட்டியன. காப்பியங்களை அணிசெய்வன இரண்டு. ஒன்று இயற்கை வருணனை; மற்றொன்று பேச்சுப் பகுதி.

"உலகப் பேச்சு காப்பியப் பேச்சிற்கு அடிப்படை என்றும், தமிழ்க் காப்பியம் வழக்கொடு ஒட்டியது என்றும் உணர்ந்துகொள்ள வேண்டும்." *(கா. 24)*

சங்க அகப் பாடல்கள் கூற்று வடிவன. அவை உலகப் பேச்சு நடையைத் தழுவி அமைந்தவை. ஆனால் செழுந்தமிழ் நடையாலும் காலப் பழமையாலும் அவற்றிலுள்ள உரையாடல் தன்மை உணரப்படாமல் இருக்கிறது.

காவியப் பேச்சு என்ற தம் கட்டுரையில், உலகப் பேச்சு நடையை விளக்குகின்றார். பின் வருவதை முன்னுணர்த்தும் உத்தி உட்படப் பேசும் முறைகளைச் சுட்டிக் காட்டுகிறார். அவை கலைத்திறம் படக் காப்பியங்களில் அமைவதையும் செம்மல் எடுத்துக் காட்டுகின்றார். இம் முறை தழுவிய ஆய்வுகள் நம் இலக்கியக் கலை வன்மையை உலகறியக் காட்டவல்லன.

## தாயின் மணிக்கொடி

இன்று நாம் 'ஜன கண மன" எனத் தொடங்கும், தாகூரின் வங்காளிப் பாடலை நம் தேசிய கீதமாக ஏற்றுள்ளோம். அதிலுள்ள தேச ஒற்றுமை, நாட்டுப் பகுதிகள் ஆறுகள் மலைகள் பற்றிய கருத்துக்கள் என இவை கருதியே அது தேசப் பாட்டாகிவிட்டது. வேறு ஒருவகையில் பார்த்தால் "தாயின் மணிக்கொடி பாரீர்" என்ற பாரதி பாட்டு, உண்மையில் அதனையும் விஞ்சியது. பல மொழி மாநிலம் தழுவிய இந்திய நாட்டையே மணிக்கொடிக் கீழ் சூழ்ந்து நிற்க வைப்பது. தேச ஒற்றுமைக்குச் சிறந்த பாடல். அதனையும் இந்தி, ஆங்கிலம், பிற மாநில மொழிகள் அனைத்திலும் மொழி பெயர்க்க வேண்டும் என்று வற்புறுத்திக் கூறுகின்றார்.

முக்கிய சுதந்திர நாள் போலும் கூட்டங்களில் எல்லாம் பாடவைக்கக் கூடியது; பாடவேண்டியது அது.

இதனை நாம் பலமுறை உணர்ந்ததுண்டு. பாரதியும் தமிழனாகப் பிறந்ததால், தாகூரை உலகறிந்திருப்பது போல உலகிற்கு அறிவிக்கப்பட வில்லை; தமிழரால் உணரப் படவுமில்லை.

“பாரதிப் பா இந்திய நாட்டுப் பொது என்பதனை எல்லோரும் அறியச் செய்தல் தமிழர் கடன், அது தமிழ் மொழியில் இருத்தலின். ‘தாயின் மணிக்கொடி’ என்னும் கொடி வாழ்த்து இந்திய மொழிகளில் பெயர்க்கப்பட்டு எங்கும் இசை பெறுதல் வேண்டும்.” *(இ, 206)*

மாணிக்கத் தமிழில் அடியெடுத்து வைப்பார்க்கு, இங்ஙனம் ஆய்வுப் புலங்களும் நெறிகளும் வழிகாட்டும் தடங்களாய் விரிந்து பரந்து கிடக்கின்றன. தமிழ்ப் புலமையாளனை, எந்நிலையிலும் மேன்மேலும் ஆய்வுத் துறைகளில் சிறக்க வழிகாட்டுவதே அவர்தம் உள்ளக் கிடக்கையும் உணர்ச்சி வெளிப்பாடுமாம். தமிழ்க் கல்விகற்கும் இன்றைய நல்லிளையோர், நாளைய மாணிக்கங்களாக இவை வழிகாட்டும்.

# 8

# வழித்தடம் அமைத்த வளர்தமிழ்ப் புலவர்

ஆராய்ச்சி என்பது அடிவானம் போன்றது. அதற்கொரு முடிவில்லை. அதன் தொடக்கமும் ஒன்றிலிருந்து ஒன்று தோன்றிய தொடர்கதையாயிருக்கும். எனவே அடிமுடி காணாத பெருமை அறிவுவழிப்பட்ட ஆராய்ச்சிக்கும் பொருந்தும்.

செம்மல் மாணிக்கனார் தாம் தொட்ட இடங்கள் பலவற்றைத் தொடர வேண்டுமென்றே எண்ணியுள்ளார். தாம் மட்டுமன்று; தமக்குப் பிறகும் அது தொடரவேண்டு மென்பதில் அவருக்குத் தணியாத ஆர்வம் இருந்துளது. தமிழ் இலக்கிய இலக்கண ஆய்வுகளும் தமிழின ஆய்வுகளும் தழைத்துச் செழிக்க வேண்டும்; செவ்விய நெறியில் செல்ல வேண்டும்; இடைக்காலத்தே நுழைந்து விட்ட பிழைபாடுகள் அகற்றப்படவேண்டும். தமிழ்க் கல்வி என்பது இன்று வடநூன் மரபுகளும் வைதிகக் கருத்துக்களும் ஊடாடி, உண்மை தெரியாமல் மேகத்தால் மூடப்பட்டுவிட்ட இருள் வானம்போல் உளது. இங்கு ‘உலகம் உவப்பப் பலர் புகழும் ஞாயிற்றைக் கடலிற்கண்டாங்கு,’ தமிழ் ஆய்வும் கல்வியும் தமிழ்மை தழுவி ஒளிபாய்ச்சித் திகழ வேண்டும்.

அதற்கு நேரிய வழிகாட்டிகளாய் அமைந்த இன்றைய ஆய்வுகளில், முதன்மையாய் நம் தமிழ்மாணவர்கள்

கைக்கொள்ள வேண்டியது 'மாணிக்கத் தமிழ்' என்று கூறுவோம். தமிழனுக்கு "நிமிர்ந்த நன்னடை, நேர்கொண்ட பார்வை, நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகள், திமிர்ந்த ஞானச் செருக்கு" - இவற்றை நல்க வல்லதாய் அஃதுளது. அவர்பால் கொண்ட பற்றாலோ, பாசத்தாலோ இதைப் பகரவில்லை. உண்மை; வெறும் புகழ்ச்சியுமில்லை.

இன்று கம்பனைப் பற்றி ஆயிரம்பேர் பேசுகிறார்கள்; பட்டிமன்றம் ஏறுகிறார்கள். இவர்களில் கம்பனை முற்றும் கற்றவர்கள்; கம்பனை நன்கு முழுமையும் விளங்கிக் கொண்டவர்கள் யார் யார்? "ஆழ்ந்திருக்கும் கவியுள்ளம் காண்கிலார்" என்ற கூட்டத்தைச் சேர்ந்த சிலரே, கம்பன் கம்பனென ஆரவாரிக்கிறார்கள். இதை யான் யார் மீதும் வெறுப்புற்றுச் சொல்லவில்லை. உண்மையில் முழுமை யாகக் கம்பனை விளங்கிக்கொள்ள நேர்ந்தால், இன்று பாராட்டும் பலர் விலகிப் போய்விடுவார்கள்! அந்த அளவு தமிழ் நெறி போற்றியவன் கம்பன்; தமிழ் மரபு காத்தவன் கம்பன். அவன் போற்றிய தமிழ் ஒலி மரபு, மொழி மரபுபற்றிக் கூட அறியாத இப்பேரறிஞர்கள், ஒரு வேளை அறிய நேர்ந்தால் கம்பனைத் தனித் தமிழ்ப் பற்றாளனோ என எண்ணிக் கைவிட்டு விடுவார்கள். அவர்கள் அறியாமையும் ஒரு வழிக்கு நல்லதாயிற்றுப் போலும்!

ஒரு கட்டடம் எத்தனை மாடி எழுப்பப்படுகிறதோ, அந்த அளவுக்குக் கீழே கணக்கிடப்பட்டு அடித்தளம் அமைக்கப் படுகிறது. ஆலமரமும் அரசமரமும் பரந்து கிளை பரப்ப, அவற்றின் அடிமரமும் வேர்ப்பன்மையும் அவை நிலத்தை ஊடுருவிப் போயுள்ள தன்மையுமே காரணங்களாகும். தமிழ்க் கல்வி அவ்வாறு வேரூன்றி யிருந்தாலன்றி நலம் பயக்காது. செம்மல் மாணிக்கனார் தொல்காப்பியக் கல்வியில் வேரூன்றியவர்; சங்க இலக்கியத்தில் திளைத்தவர்; திருக்குறளைப் பழுதறப் படித்தவர்; இரட்டைக் காப்பிய அறிவு மிக்கவர். அதனால் இன்றைய பாரதி, புதுமைப் பித்தன், மௌனி, கு.ப.ரா.

பிச்சை மூர்த்தி, சண்முகசுந்தரம் வரை அவரால் நன்முறையில் திறனாட முடிகிறது. இதனை இன்றைய வளரும் தமிழறிஞர்கள் நல்ல வழிகாட்டுதலாய்க் கொள்ள வேண்டும் என்பது எம் வேணவா.

கம்பன் சங்க இலக்கியத்தைக் கற்றுத் துறைபோய உத்தமக் கவிஞன். 'சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவரியை' மனக்கண்ணால் கண்டு களித்தவன். தமிழ்ப் பண்பாட்டை நிலைநிறுத்தியவன். நாடெங்கும் ஊரெங்கும் வடமொழி வான்மீகி இராமாயண ஆர்வம் சூழ்ந்து கிடந்த காலத்தில், அதையே 'தமிழ் அமிழ்தமாக' மாற்றித் தமிழை எல்லோரும் படிக்க வைத்தவன்; கேட்கவைத்தவன்; அதனால் என்றுமுள தென்தமிழை இயம்பி இசை கொண்டவன். வடமொழி வெறுப்பாகவோ, வான்மீகி மறுப்பாகவோ அன்று, அவற்றை மதித்து, உள்வாங்கிக் கொண்டு, தமிழில் ஓர் ஒப்பற்ற காப்பியத்தைப் படைத்தான். அதனால் தமிழை நிலைக்க வைத்தான். இந்த உண்மை தெரிய வேண்டுமென்றால் தொல்காப்பியப் பயிற்சி வேண்டும்; சங்க இலக்கியக் கல்வி வேண்டும்; திருக்குறள் அறிவு வேண்டும்; சிலம்பும் மேகலையும் வழிவழி வளர்ச்சிகளும் தெரிந்திருக்க வேண்டும். இவ்வளவும் கற்று வருவது கடினமென்று தோற்றலாம்; நாளாகுமே எனத் திகைக்கலாம். அதற்கு இடமின்றி, வழித்தடத்தை எளிமையாக்க, தமிழ்த் தென்றல் திரு.வி.க., பேரறிஞர் மு. வரதராசனார், மூதறிஞர் வ.சுப. மாணிக்கனார், கணக்காயர் ச.சோ., பாரதியார், மொழி ஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர், பெரும் புலவர் கா. அப்பாதுரையார் போல்வார் தம் நூல்களை முதலில் கற்றுக் கொள்ள வேண்டும். மற்றவர் தம் நூல்களை எல்லாம் படிக்கவேண்டாமென்பதன்று நம் கருத்து. நல்ல தொடக்கம் நல்ல முடிவுக்கு வழி நடத்தும். தமிழ்க் கல்வி தடம்புரண்டு விடாதிருக்க வேண்டும். பல்கலைக் கழகங்கள் வைக்கும் பாடங்களைப் படிப்பது ஒருபுறம் நடக்க, மறுபுறம்

தனிக்கல்வியாக இவற்றைத் தாமே விரும்பி வாங்கிக் கற்று மகிழ்வோரே ஆர்வமும் ஆற்றலும் மீதூரப் பெறுவர்.

நிலைத்த தமிழ்ப் பணி செய்ய நினைப்பார்க்கென எழுதப்பட்டவை இவை. ஒரு பிறவிதான் எடுத்துள்ளோம்; மறு பிறவி பற்றி நாமறியோம். எடுத்த பிறவி பயனுளதாகவேண்டுமென எண்ணுவோர் சிலரேனும் நம்மிடையேயுளர். அத்தகு தமிழர்களுக்கு - தமிழ்ப் புலவர்கட்கு என யாம் தலைதாழ்த்தி வைக்கும் வேண்டுகோள் இதுவாகும்.

தமிழ் தமிழ் என்று முழங்கி விட்டுத் தமிழையே கைவிடுவது; தமிழறிஞர் என்ற பெயரால் தன்னலவேட்டை யொன்றே ஆடுவது; தமிழில் இதழ்நடத்தி, கதை எழுதி, படம் எடுத்து வாழ்ந்தாலும் அந்தத் தமிழுக்கே படுகுழி தோண்டுவது; பிறதுறை போனார் முழுமையான தமிழறிவுமில்லாது, தமிழ்ப்பற்றுமில்லாது தமிழியக்கத்திற் புகுந்து விளையாடுவது; மேடையில் தமிழ்வளர்த்து வாழ்க்கையில் புறக்கணிப்பது எனப் பெருகிவிட்ட இன்றையச் சூழலில், முறைப்படி தமிழ்கற்ற தமிழ் மாணவர்கள், மறவர்கள் தொகை பெருகவேண்டும். அதற்கு இம் மாணிக்கத் தமிழும் ஓர் அணிசேர்க்கும் என்பதுறுதி.

## படைக்கும் நோக்கோடு படிப்பிக்க வேண்டும்

இன்று நம் தமிழ்க் கல்வி அறிவதாய், ஆராய்வதாய் மட்டுமே அமைந்துளது. புதியன படைக்கும் சிந்தனையே போய்விட்டது. பழந்தமிழ் நூல்களையும் எவ்வாறு கற்பிக்க வேண்டும்? அவற்றைக் "கற்றுத் திளைத்துக் கற்பிப்பதோடு அமையாது, அவற்றின் அமைப்புக்களை வாங்கிக்கொண்டு தமிழ்ப் புத்துலகத்தைப் படைக்கவும் முயலவேண்டும்," என்பது இவர் கருத்து. (க. 69) "ஒரு சிலருக்காவது படைக்கும் நோக்கோடு படிப்பிக்க வேண்டும்." 'கம்ப நாடனொடு கவிதை போயிற்று' என்று கையறுநிலை பாடிவிடக் கூடாது. அதை ஒரு விழிப்புணர்ச்சி தரும் தொடராகக் கொள்ள

வேண்டும். அங்ஙனமெனில் நம் ஆய்வுகள் அறி ஆய்வுகளாய் இல்லாமல், ஆக்கும் ஆய்வுகளாய் மலர வேண்டும். தொல்காப்பியத்தையும் நன்னூலையும் அவற்றின் கட்டமைப்புக்களை உள்வாங்கிக் கொள்ளுமாறு கற்றால், புதிய இலக்கணம் படைக்க அது உந்துதலாகும். சங்க இலக்கியப் பாடல்களை, அவற்றின் அமைப்பு, வெளிப்பாட்டு உத்திகள், புலப்பாட்டுத் திறன்கள் எனப் படைப்பாக்க நோக்கில் கற்கவும் கற்பிக்கவும் செய்தால் இன்றையப் புதிய கவிதையுலகம் செழிக்கும்.

நாம் இன்று எதை எழுதினாலும் நம் புலமையை வெளிப்படுத்தும் நோக்கோடும் நம்மை வெளிப்படுத்திக் கொள்ளும் நோக்கோடும்தான் எழுதுகிறோம். படிப்பவனின் திறமையை வெளிக் கொணரும் நோக்கோடு எழுதப்படுவன மிகச் சிலவே. இந் நுட்பத்தையுணர்ந்து, நம் ஆய்வுப் போக்குகள் 'பயன்பாட்டு ஆய்வுகளாய்த்' திசை திரும்பினால் தமிழ் இலக்கியம் மீண்டும் வெற்றி பெறும்! இன்றேல் 'சாக இருக்கும் கிழவன் பழம்பெருமை பேசுவதுபோலவே' நம் அழகிய மேடைப் பேச்சுக்களும் ஆய்வுக் கட்டுரைகளும் அமையும்.

## நாண் முகக் கேள்வி முறை

இன்றைய நம் கல்வியனைத்தும் நெட்டுருக்கல்வி; மனப்பாடக்கல்வி. தேர்வுக்காகவே படிக்கின்றோம். ஆண்டு, பருவ இறுதியில் வரும் தேர்வில் எவ்வாறேனும் தப்பிவிட, முதன்மை பெற்று விட முயல்கின்றோம். "தப்பும் உணர்ச்சியே கள்வனுக்கு முந்துறுமாப் போல், தேர்ச்சி தாண்டும் துடிப்பே மாணாக்கர்க்கு முற்படுகின்றது." *(வ. 179)* இதனால் பாடநூலையே பார்க்காமல் குறுக்குவழி உரைநூல்களைக் கற்றலும் ஞானத்தால் இவையிவை வருமென நம்பிப் படித்தலும் தேர்வுக்கு எனவே பிறப்பெடுத்த போலிக் கல்வி நிலையங்களை நாடித் தனிப்பயிற்சி தேடலும் போகப் போகப் பள்ளிக

,

ளெல்லாமே போட்டியிட்டுக் கொண்டு இவ்வாறு தனிப் பயிற்சி மையங்களாக மாறுதலும் காண்கின்றோம். இதனால் மேலைநாட்டார் நம் கல்வியை அறிவுக்கல்வி என்னாது 'நினைவுக் கல்வி' எனக் கிண்டலடிக்கின்றனர். இதற்கு ஒரு மாற்று, மாணிக்கச் செம்மல் கூறுகிறார்.

வகுப்பிற்கு இருபது, இருபத்தைந்து பேரே இருக்க வேண்டும். முதல் நாள் சொல்லிக் கொடுத்ததை மறுநாளே படித்துவரப் பணிக்கவேண்டும். மறுநாள் கேள்விகேட்டு, ஐயந்தீர்த்து, வீட்டுப்பாடம் எழுதிவந்தது பார்த்து, தரம் குறியிட்டுப் புதுப் பாடம் தொடங்கவேண்டும். அமெரிக்கா போலும் வெளிநாடுகளில் இக்கல்விக்கு ஐம்பது விழுக்காடும் கூடுதலாகவும் மதிப்பளிக்கிறார்கள். இவ்வாறு நாள்தோறும் படித்து வருவதை **'நாண்முகக் கேள்விமுறை'** என்பார் இப்பேராசான். இன்றைய தேர்வு முறைக்குப் பல இலட்சம் செலவழிக்கப்படுகிறது. அதைப் பெரும்பகுதி குறைத்துவிட்டால், இந் 'நாள்முறைக் கல்வி' கைகூடும் என்பது இவர் கருத்து.

இம் முறை மாற்றம் அண்மையில் வருமென நம்ப வழியில்லை. ஆயினும் தமிழ்க் கல்வி பயில வருவார்க்குத் தமிழ்க் கல்வி நிலையங்கள் இம் முறையை ஓரளவேனும் பின்பற்ற முயலுதல் நலம்பயக்கும். அதுவும் அமையாதேல், தமிழில் முழுத் தேர்ச்சிபெற ஆர்வமுள்ள இளைஞர்கள் இந் நாள்முறைக் கல்வியை மனத்திற்கொண்டு, தாமாகக் கற்று முழுமை பெற முயல வேண்டும். கோடி பல தொகுத்தவனுக்குப் பிறந்த பிள்ளைகளுக்குப் பொறுப்பு அதிகமன்றோ? மூவாயிரமாண்டு இலக்கிய இலக்கணச் செல்வம் பெற்றுள்ள தமிழ்க் கல்வி எளிதிற் கடைபோகாது தான்! ஏனைய எத்துறைக் கண்ணுமில்லாத அளவு பெரும் பொறுப்புத் தமக்கு வாய்த்திருப்பதாகத் தமிழ் கற்க வருவோர் எண்ணுதல் வேண்டும்.

## தொல்காப்பியம்

"இன்றுவரை தமிழன்னை, தன் முதல்மகனுக்குப் பொருளகராதி, சொல்லகராதி என்ற பார்வை நூல் எதுவும்

தோன்றவில்லையே, தமிழறிஞர்களின் ஆய்வுநிலை என்னே என்று கவல்கின்றாள்." *(தொ. 95)*

தொல்காப்பியம் கற்பாரும், கற்க விழைவாரும் மாணிக்கனாரின் 'தொல்காப்பியக் கடலில்' நீந்தப் பழகுதல் முறைப்படியான பயிற்சியாகும். 'திருக்குறள் சொற் பொருளகராதி' எனக் கழகப் பதிப்பாக, வா. மார்க்க சகாயஞ்செட்டியாரும் சு.அ. இராமசாமிப் புலவரும் தொகுத்தளித்திருக்கும் நூல் திருக்குறட் கல்விக்கு மிகச் சிறந்த பார்வை நூலாகும். அதுபோல, தொல்காப்பிய மூலப் பதிப்பு ஒன்று, சொல்லகராதி, பொருளகராதியுடன் வெளிவரத் தமிழ்த் தாயே கவலையுடன் விழைந்து காத்திருக்கிறாள். இவ்வாறு குறித்திருப்பதன் கருத்து என்ன? தமிழறிஞர்கள் சிந்திக்க வேண்டும்.

'தொல்காப்பிய உரைநெறிகள்' பற்றிய கட்டுரையில் பாடம் சொல்லிய முறை, எழுதி வைத்த முறைகளுடன் மூலபாடம் ஒழுங்கு செய்த நெறி, உரைக் குறியீடுகளாகச் சில வகுத்துக்கொண்டு அதனடிப்படையில் உரைவிளக்கம் செய்த நெறி, உரையாசிரியர் தத்தம் கால வழக்குகளை உதாரணமாகக் காட்டியுள்ள நெறி ஆகியவை விவரிக்கப்படுகின்றன. கட்டுரை இறுதியில் இரண்டு வழித் தடங்களைச் சுட்டி, எதிர்கால ஆய்வாளர்களைத் தூண்டுகின்றார், இப் பேரறிஞர்.

> "உரையாசிரியர்களின் எடுத்துக்காட்டுக்கள் என்ற தலைப்பிட்டு ஒரு நூல் வடிவில் பெரிய ஆராய்ச்சி செய்யத்தகும் என்பதனை என் சொற்பொழிவு மறைமுகமாகப் புலப்படுத்தும்." *(தொ. 275)*

இன்று தொல்காப்பியத்திற்கு நம் கால எடுத்துக் காட்டுக்களையே தரவேண்டும். அப்போதுதான் தொல் காப்பிய நிலைபேறு நம்மவரால் நன்கு உணரப்படும்.

இதற்கு இடைக்கால எடுத்துக்காட்டுக்கள் பற்றிய ஆழமான கல்வி பயன்படும்.

தொல்காப்பிய உரைநெறிகளில் சிலவற்றை எடுத்துமொழிந்த இப் பேராசான், முடிவில் "உவமைகள், வினாவிடைகள், உத்திகள், ஐயத்தெளிவுகள், ஒப்புமைகள், மாட்டேறுகள் என்றின்ன உரை நெறிகள் பலவுள்ளன. அவற்றை அறிந்து அவற்றின் வழி கற்றால், கற்பித்தால், ஆராய்ந்தால், ஆராய வழிவகுத்தால், உரைகள் நெறிக்களஞ்சியங்கள் என்ற நன்மதிப்பைப் பெற்று விளங்கும்," *(தொ.296)* என்று மேலும் ஆராயத் தடங்காட்டி வழிவகுப்பார்.

## சிலப்பதிகாரம்

செம்மல் மாணிக்கனார் உள்ளக் கிடக்கை அதுவாதலின், சொல்லாமற் சொல்லியுணர்த்தும் வழித் தடங்களைப் போல, வெளிப்படச் சொல்லிக் காட்டும் தடங்களும் பலவாகும். அங்ஙனம் வெளிப்படச் சொன்ன சில இவண் நினைவுபடுத்தப்படுவதன் நோக்கமே, வண்டியைத் தடத்தில் முடுக்கிவிட்டால் அதுதன் வழிநோக்கிச் செல்லும் என்பதாலேயாம்.

'சிலப்பதிகாரத் திறனை' வரையும்போது, அதன் அடிப்படையான சில நாடகப்பண்புகள் விளக்கப் படுகின்றன. முடிப்புரையில், "தமிழ் இலக்கியவுலகில் இன்றுகாறும் நாடக இலக்கியமாக விளங்குவது சிலப்பதிகாரம் ஒன்றே. அதனால் இக் கட்டுரைக்கண் இளங்கோ கண்ட நாடக அமைப்புக் குறித்து விரித்துரைத்தேன். இம் முன்னறிவு சிலப்பதிகாரத்துள் நுழைவார்க்கு நல்ல துணையாகுக. காதை அமைப்பையும் கூற்றுக்களையும் புனைவுகளையும் நாடகக் குறியில் காணச் செய்யும் தூண்டுகோலாகுக." *(கா. 74)* இதன்வழி அவருக்கு இவ் ஆய்வுகள் தொடரப்படவேண்டு மென்பதிலிருந்த பேரார்வம் புலனாகும். இன்றுள்ள நாடகங்களை வைத்துக்கொண்டு, சிலப்பதிகாரம் எவ்வாறு நாடகமாகும் என்று எண்ணக் கூடாது. அதன்கண் உள்ள நாடகப்

பண்புகள், தொடக்க காலத்தில் பலர் கூடியாடும் ஆடல் பாடலாக இருந்து படிப்படியாகப் பாத்திரங்கள் நடிக்கும் நாடகமாக வளர்ந்தவை; இடையிடையே கதை கூறிக்கொண்டு காட்சிகளைத் தொடரும் உத்திகள் கையாளப்பட்டவை. இவற்றை நினைவிற் கொண்டு சிலம்பின் நாடகக் கூறுகளைக் கண்டறியவேண்டும்.

சிலம்பு, நாட்டன்பை ஊட்டும் காப்பியம். மூன்று நாடுகள், மூன்று தலைநகரங்கள், முப்பெரும் வேந்தர்கள் எனச் சமநிலை போற்றி, ஒன்றுபட்ட தமிழகத்தைக் காண விழைந்த காப்பியம். முதன் முதல் தோன்றிய நமது தேசியக் காப்பியம்; தமிழக வரைபடத்தைக் காட்டுவது போல் எழுதப்பட்ட சுவை மிகுந்த நாடகக் காப்பியம்.

இளங்கோவின் நாட்டுப்பற்றைத் தேடிக் கண்டால் தான், கம்பரின் நாட்டுப்பற்று, மொழிப்பற்றைக் கண்டறியும் ஆர்வம் பிறக்கும். இளங்கோ அரசத்துறவி யாதலின் அவரிடம் நாட்டன்பும் நடுவுநிலையும் ஒருங்கிணைந்த தமிழகக் காட்சியும் ஊடுருவி நின்றன. இன்றைய நிலையில், இத்தகைய காப்பியப் பண்பைக் கண்டறிவது பயன்பாடுடையது. "எவ்வெக் கருத்தால், இசையால், புனைவால், உவமையால், மரபால் நாட்டன்பினைக் காட்டுகின்றார், ஊட்டுகின்றார் இளங்கோ என்று காணச் சிலப்பதிகாரத்தைக் கற்பது எம்போல்வாரால் வரவேற்கப்படும்," என்று தூண்டுவதன் நோக்கம் அறியற்பாலது. (கா. 52) சங்க இலக்கியம் பல மரபுக்கட்டுப்பாடுஉடையதாகலின், ஒரு சோறு கொண்டு உலைச் சோற்றைப் பதம்பார்ப்பது போன்றது அது. அதனுடன் சிலப்பதிகாரமும் கிடைத்தது நாம் பெற்ற பேறு. இதில் திணை இலக்கியச் சாயல்கள் படிந்திருப்பினும் நாட்டை, நாட்டுநிகழ்வுகளை, பல்வேறு வாழ்க்கை மரபுகளை, அரசியல் நடப்புக்களை, தெய்வ வழிபாடுகளை, விழாக்களை விரிவாகப் பாட இடந் தந்தமையால் - இவை இரண்டையும் - சங்க இலக்கியத்தையும் சிலப்பதி

காரத்தையும் உடன் வைத்து, ஒப்புநோக்கிக் கற்பார் தமிழகத் திணைப் படத்தையே காணலாம்; தமிழ் மக்கள் வாழ்க்கை மரபுகளை உய்த்தறியலாம்; அரசியல் நடப்புக்களை அறிந்து வரலாறு தொகுக்கலாம்.

முன்பு பொது நிகழ்ச்சியாயின் அரசவாழ்த்தொடு முடிப்பது ஒரு மரபாக இருந்துளது. இன்று 'ஜனகணமன' பாடி முடிப்பது போன்றது அது. சங்கப் பாடல்கள், தமக்குள்ள கட்டுப்பாட்டால் இதனைச் சுட்ட இடமில்லை. ஆனால் சிலம்புவழி இம் மரபை அறிகிறோம். "பல்வேறு மக்களும் களியாட்டெய்தும் கானல்வரியாயினும், பாலை மறவர்கள் கொண்டாடும் வேட்டுவவரியாயினும், முல்லை நிலத்தோர் பாடிப் பரவும் ஆய்ச்சியர் குரவையாயினும், குறிஞ்சி மக்கள் போற்றித் தொழும் குன்றக் குரவையாயினும், வஞ்சிமகளிர் கூடியாடும் வாழ்த்திய லாயினும் விழா அரச வாழ்த்தோடு நிறைவெய்தல் பண்டைத் தமிழ் மரபு," என, இம்மரபு வெளிப்பட்ட இடங்களையெல்லாம் சுட்டிக்காட்டி, இத்தடத்தின் வழி செல்க என வழிகாட்டுவதுபோல எழுதுவதும் மாணிக்கத் தமிழின் மாண்பாகும். *(கா. 52)*

## உரை நெறிகள்

பேராசானின் 'உரை நெறிகள்' என்ற கட்டுரை, நல்ல வழிகாட்டும் கட்டுரையாகும். பழம் பாடல்களுக்கு எவ்வாறு விளக்கம் காண வேண்டும் என்பதை இது நான்கு எடுத்துக்காட்டுக்களால் விளக்குகிறது. நூல் தோன்றிய காலம், அக்காலச் சொற்பொருள் நிலை, அன்றையப் பழக்கவழக்கம், பாடலில் உள்ள தொடரமைப்பு இவற்றை அறிந்திருப்பதுடன், நாட்டின் வரலாற்றறிவும் பல துறையறிவும் உடையவராலேதான் பொருந்திய பொருள் காண முடியும் என விளக்குகின்றார்.

செல்லா நல்லிசை அமரர் காப்பின்
நீரின் வந்த நிமிர்பதிரப் புரவியும்

என்ற பட்டினப்பாலை யடிக்கு என்ன பொருள்? "தேவர்கள் காப்பாற்றக் கடல்வழியாகக் கப்பலில் குதிரைகள் வந்தன" என்பது நச்சினார்க்கினியர் உரை. அன்று கடல் வாணிகத்தின்போது, காலாட்படையும் கூடவே போவதென்பது நடைமுறை. பகைவர்கள், கடற்கொள்ளைக்காரர்களிடமிருந்து காப்பதற்காக, இங்ஙனம் செல்வர். ஜாகர்த்தாவிலுள்ள செப்பேடு ஒன்றில், "நகரத்துச் செட்டிகள் கடல்வழியாகப் பாய்மரக்கப்பலில் வாணிகம் செய்யச் சென்றதையும், அவர்கட்குத் தனிக்கொடியும் தனிப்படையும் இருந்ததையும்" பற்றிய செய்திகள் குறிக்கப்பட்டுள்ளன. இதை ஜப்பானியக் கல்வெட்டியல் அறிஞர் நொபுரு கரசிமாவும் தமிழ்ப் பல்கலைக் கழகப் பேராசிரியர் சுப்பராயலுவும் கண்டுபிடித்துக் கூறியுள்ளனர். எனவே அமர் - போர்; அமரர் - போர் வீரர் என்ற அடிப்படையில், முற்கூறிய பட்டினப்பாலை அடிகட்கு, "புகழ்வாய்ந்த வீரர்கள் காத்துவரக் கடல்வழியாகக் கொண்டுவரப்பட்ட குதிரைகள்" என்றே பொருள் காண வேண்டும். இங்ஙனம் இடைக் காலத்தே அக் காலச் சூழலில் எழுதப்பட்ட புராணவுரைகளையும், வைதிக சமயச் சார்பு உரைகளையும் கண்டு, களைநீக்கி, முற்பட்ட சங்ககாலத்திற்கு ஒத்த புத்துரை காணவேண்டுமென்பதை மிகப் பல இடங்களில் இவர் வற்புறுத்தியுள்ளார்.

எதனையும் மறித்துப் பார்த்து, வினா எழுப்பி, ஒரு முடிவுக்கு வந்து விடைகாண்பது இவரியல்பு. அதனால் சிறுகதை முடிவுபோல, இவரது ஆய்வு முடிவுகள் புதுமையுணர்வை விளைப்பனவாகவும் பொருத்த முடையனவாகவும் வழிகாட்டுவனவாகவும் அமைந் திருக்கும்.

**பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்**

எல்லா உயிர்களுக்கும் பிறப்பு ஒக்கும்; ஆனால் மேற்கொள்ளும் செயல் வேற்றுமை காரணமாக ஒவ்வொன்றும் வெவ்வேறு சிறப்புப் பெறும். அவரவர் வினைக்கேற்பப் பெருமையும் சிறப்பும் பெறுவர். இவ்வாறுதான் குறளைப் படித்ததும் பொருள் தோன்றுகிறது. அனைவரும் அவ்வாறே எழுதியுள்ளனர். ஆனால் அக்கால மொழிநடையும், இக்குறளில் தொடர் ஓடிக் கிடக்கும் முறையும் நுனித்தறியத்தக்கன. 'பிறப்பொக்கும்படியான எல்லாவுயிர்க்கும்' என்று இதை எச்ச நடையாகக் கொள்ள வேண்டும்; எல்லாவுயிர்க்கும் பிறப்பொக்கும் என்று முற்றுநடையாகக் கொள்ளக்கூடாது. "பிறப்பால் ஒப்புமையுடைய உயிர்களுக்குப் பெருமையால் ஒப்புமை இல்லை. அப் பெருமை மேற்கொள்ளும் வினை வேற்றுமையால் வெவ்வேறாக அமையும்." "பிறப்போரன்ன உடன் வயிற்றுள்ளும் சிறப்பின் பாலால் தாயும் மனம் திரியும்' (183) என்ற புறநானூற்றடியை இதனுடன் ஒப்பிட்டுக் காட்டும்போது, பேராசிரியர் கருத்து உறுதிப்பட்டுவிடுகிறது.

## திருக்குறள் நடை

திருக்குறள் நடை பற்றிய வள்ளுவக் கட்டுரை மிகு பயனுடையது; வள்ளுவர் உள்ளங் காணத் தெள்ளிய நெறிகாட்டுவது. இதில் பதினேழுவகை நடைகளை ஆசிரியர் எடுத்துக் காட்டுகிறார்.

**தன்னுயிர்க்கு இன்னாமை தானறிவான் என்கொலோ**
**மன்னுயிர்க்கு இன்னா செயல்.**

இதனைத் 'தற்சுட்டு நடை' என்பார். தன்னைச் சான்றாகச் சுட்டி அறம் கூறும் இதுபோல்வன ஒரு தொகுதிப்படும்.

**தன்னைத்தான் காதலன் ஆயின் எனைத்தொன்றும்**
**துன்னற்க தீவினைப் பால்**

**தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்**
**தன்னையே கொல்லும் சினம்**

இவை 'தற்காப்பு நடை' உடையன என விளக்கப்படுபவை. எறிபந்து திரும்புமாப் போல் நீ செய்த தீது உன்னிடமே திரும்பி வரும் என்ற நடை காண்க.

எண்ணிய எண்ணியாங்கு எய்துப, எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்

விரைந்து தொழில் கேட்கும் ஞாலம்; நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்

இவற்றைச் செம்மலார் 'செயலுய்ப்பு நடையன' என்பார். அதாவது ஊக்க உணர்வூட்டிச் செயற்படுத்துவன. இவற்றைப் பலகால் ஓதின், ஒருநாள் அரியவற்றுள் அரியதொன்றைச் செய்ய முற்படுவோம் என்பது தம் துணிபு எனச் சுட்டுகின்றார்.

"இதற்கு எடுத்துக்காட்டுப்பல வேண்டுதலின், ஓரினக் குறள்களைத் தொகை தொகையாகச் சொல்லிச் சென்றேன். இப் பதினேழுந்தான் திருக்குறட் பனுவலின் நடைகள் என்று முற்றுப்புள்ளி இடவேண்டா. ஆராய்ந்து காண விழைபவர், இன்னும் அளவிறந்த நடைக் கூறுகள் உண்மையைத் தெரிந்துகொள்வர்," என்று இக்கட்டுரையை முடிப்பதன் கருத்து யாது? 'ஈதல் இயையாக் கடை' *(230)*, 'இல்லவள் மாணாக் கடை' *(53)*, 'நிலையின் இழிந்தக்கடை' *(964)*, தந்நோய்போல் போற்றாக் கடை' *(315)*, 'பலர் நாண நீத்தக் கடை' *(1149)*, 'தாம் காதல் கொள்ளாக் கடை' *(1195)* எனக் 'கடை' யொடு முடியும் ஒருவகைச் 'சொன்னடை' யுள்ளதையும் சுட்டி முடிக்கின்றார். இவ்வாறு சொன்னடை, தொடர்நடை, கருத்து நடை, உணர்ச்சி நடை என்றாங்கு பல்வேறு நடைப்படுத்திப் படிக்கப் படிக்க, உரை வேண்டாது, குறளைக் கொண்டே குறளுக்குப் பொருள்காணும் ஆர்வம் பிறக்கும். இவ்வாறு குறள் முழுவதும் கற்க முனைய வேண்டும் என்ற ஆர்வத்தை, இக் கட்டுரை தூண்டவில்லையெனில், கற்பாரிடத்து ஏதும் குறையுளதோ என ஐயப்பட நேரும். அந்த அளவு

'ஆராய்ந்து காண விழைபவர்க்கு' அடியெடுத்துக் கொடுக்கின்றது இவ் ஆய்வுரை!

## திருக்குறள் உத்திகள்

திருக்குறள் ஒன்றேமுக்காலடியில் மிகச் சுருங்கக் கூறவேண்டி இருந்தமையானும், திருவள்ளுவர்க்கு அணியழகுடன் தொடைநயம்படக் கூறும் விருப்பு இருந்தமையானும் பல இடங்களில் பொருள் தெளிவுபடவேண்டிய சூழல் ஏற்பட்டுவிட்டது. பலரும் நினைத்தவாறு பொருள்கொள்ளவும் சில குறள்கள் தாமே இடந்தந்துவிட்டன. இக்குறை நீங்க என்ன செய்யலாம்?

முன்பு சுட்டியதுபோல, திருக்குறள்களை நடையடிப் படையில் பிரித்து வள்ளுவர் உள்ளத்தைக் காணலாம். அதை விட, குறளின் பொருந்திய பொருளைத் தெளியும் வழி, குறளனைத்திலும் உள்ள உத்திகளை வகுத்தும் தொகுத்தும் காண்பதுதான். வள்ளுவர் பல்வேறு 'எழுத்துஉத்திகளை' வகுத்துக்கொண்டு குறள்நூல் படைத்துள்ளார். இவ்வாறு குறிப்பிட்டுவிட்டு, நான்கு உத்திகளைச் சிந்தனைக்கு வைக்கின்றார் மாணிக்கச் செம்மல்.

*(1)* நடை நிறைந்த ஒரு கருத்து, நடைகுறைந்த இன்னொரு கருத்தினைத் தெளிவாக்கும்.

சுருங்கச் சொன்னால் நிறைநடை குறைநடையையும் நிறைவிக்கும்.

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்

இறைவனடி சேராதார் பிறவிப் பெருங்கடல் நீந்தார் - நிறை நடை. நீந்துவர் - யார்? - குறை நடை. சேர்ந்தார் நீந்துவர் என உய்த்துணர இடமுளது.

உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்
கடையரே கல்லா தவர்

கடையரே கல்லாதவர். உடையார் முன் இல்லார் போல் ஏக்கற்றும் கற்றார் தலையாயவர். நிறை நடையின் ஆற்றலால் குறைநடைப் பொருள் முற்றுப் பெறுகிறது.

(2) அளவை முறையில் ஒரு கருத்து நிறுவப்படும்.

நீரின்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வானின்று அமையாது ஒழுக்கு

உலகிற்கு நீர் இன்றியமையாதது. அவ்வாறாயின் எல்லோர்க்கும் அந்நீரொழுக்கைக் கொண்டு வருகின்ற வானம் - மழை - இன்றியமையாததல்லவா? வான் சிறப்பு இவ்வாறு வற்புறுத்தப் படுகிறது. 'ஒழுக்கம் மழை இன்றிஅமையாது' என்றெல்லாம் கூறும் பிற உரைகள் அடிபட்டுப் போகின்றன.

தினற்பொருட்டால் கொல்லாது உலகெனின் யாரும்
விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல்

என்ற குறளிலும், இதுபோன்ற அளவை - தருக்க வழி நிறுவும் உத்தியைக் காணலாம்.

(3) உலகத்தார் நடைமுறையில் கொண்டிருக்கும் கருத்தினை மறுத்தல்.

உலகம் தவறாக நம்பியிருப்பதை மறுத்தல் இது.

அறத்தாறு இதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை

மிகுந்த கருத்து வேறுபாடுகளை உண்டாக்கிய இக்குறட் கருத்தையும் தெளிய இவ்வுத்தி பயன்படுகிறது.

இதே போன்ற உத்தியும் நடையும் அமைந்த குறள்களை மாணிக்கச் செம்மல் ஒருங்குவைத்துக் காட்டுகின்றார்.

மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின்

அஞ்சாமை யல்லால் துணைவேண்டா எஞ்சாமை
எண்ணி இடத்தாற் செயின்

**மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது**
**அற்றது போற்றி யுணின்**

இதனால் குறளே சான்றாக உரை தெளியப்படுகிறது. சிவிகை - பல்லக்கைத் தூக்குபவனையும் ஏறி அமர்ந்து செல்பவனையும் வைத்து, 'அறத்தாறு இது என்று கூறாதீர்!' எனும் புரட்சிக் கருத்தே குறட்கருத்தெனத் தெளிந்து நிறுவ முடிகிறதன்றோ?

*(4)* இதுபோல, அறமும் சான்றும் வரிசைப்பட அமைத்தல் எனும் உத்தியின்படி, 'ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார் கோமான், இந்திரனே சாலும் கரி' என்ற குறளின் கருத்தும் தெளியப் படுகிறது.

**அல்லல் அருளாள்வார்க்கு இல்லை வளிவழங்கு**
**மல்லல்மா ஞாலம் கரி**

**இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்பிடும்பை**
**தானேயும் சாலும் கரி**

இவை படித்ததுமே, உண்மை தெளிவாகுமளவு அத்துணை எளிமையாகி விடுகின்றன. பாவம் எய்திய இந்திரனைக் காட்டும் பரிமேலழகர் உரை தவறென்றும் தேவருலகத் தலைமையாகிய இந்திரன் போலும் பெரும்பதவி ஐந்தவித்தவர்க்குக் கிடைக்கும் என்பதே பொருத்தம் என்பதும் புலப்படுகின்றன.

இவ்வாறு மிக நுட்பமாக வழிகாட்டும் திறத்தை மாணிக்கத் தமிழிலன்றி, வேறு எங்கு காணப் போகின்றோம்? "1330 குறள்களையும் தொகுத்து வகுத்து ஆராயுங் காலை அவை சில எழுத்துத்திகளில் அல்லது சில வாய்பாடுகளில் வடிவொருமை பெற்று அடங்கிவிடக் காணலாம். அப்போது எது பொருள் என்று மயக்கந்தரும் குறள்கட்கு அவ்வுத்திகள் தேற்றாவிதைகளாக, தெளிநீர் களாக உதவுகின்றன." (தி. 74) திருவள்ளுவர் இங்ஙனம் சில உத்திகளைப் படைத்துக்கொண்டு, சுருங்கச் சொல்ல முயன்றுள்ளமையும் அங்ஙனம் அவர் படைத்தவற்றைச்

சில உத்திகளுக்குள் அடக்க முடியும் எனவும் அவ்வுத்திகளைப் பயன்படுத்தினால் ஐயத்திற்கு இடமான - பெரும் விவாதத்திற்குரிய குறள்களுக்கும் மயக்கமற்ற பொருள் மணல்நீர்போல் தோன்றுமெனவும் அறிகிறோம். "ஏனைக் குறட்களுக்கும் உரிய உத்தி நெறி கொண்டு, தெளிபொருள் காணும் புதிய வேட்கையை இக் கட்டுரை தூண்டுமென நம்புகின்றேன்,'' என *(தி. 78)* இவ் ஆய்வுரையை முடித்துள்ளமையும், ஒன்றைத் தொடங்கி வைத்து மற்றவர்களைத் தொடரவைக்கும் பேரார்வமே அவர் உள்ளத்துள் குடி கொண்டிருந்தது என்பதை வெளிப்படுத்தும். அவருடைய தொல்காப்பிய மாணிக்கவுரை நூன்மரபு மொழி மரபுகளோடு முடிந்துபோய் நிற்பதும், அவர் மனப்படியே நடந்து விட்டதைத்தான் காட்டுகிறது. தொல்காப்பியத்திற்கும் பொருந்திய உரைகாணும் சில நெறிமுறைகளை, இவர்தம் கட்டுரைகளில் கண்டு கொள்ளலாம். *(தொ. 309)*

## இலக்கண வளர்ச்சி வரலாறு

தமிழில் இலக்கண நூல் வரலாறு எழுதப்படுகிறது; இலக்கண உரை வரலாறு விளக்கப்படுகிறது. ஆனால் 'தமிழ் இலக்கண வளர்ச்சி வரலாறு' என்பது மேலே கூறிய இரண்டையும் உள்ளடக்கியது. இலக்கண நூலாசிரியர், இலக்கண உரையாசிரியர் தவிரத் தாமே இலக்கணமும் எழுதி உரையும் எழுதியவர்களை இலக்கண நூலுரை யாசிரியர் என இவர் வகைப் படுத்துவார். இவர்களை முறையே தொல்காப்பியர், புத்தமித்திரனார், பவணந்தியார் எனவும் இளம்பூரணர், பெருந்தேவனார், மயிலைநாதர் எனவும் வைத்தியநாதர், சுப்பிரமணியர், சுவாமிநாத தேசிகர் எனவும் சுட்டிக் காட்டுவார். புதிய பார்வையில் தமிழ் இலக்கண வளர்ச்சி வரலாறு எழுதினால், அது தமிழ்மொழி வளர்ச்சி வரலாறாக அமையுமன்றோ? "இலக்கண வரலாற்றில் முதலெழுத்து, சார்பெழுத்து, புணர்ச்சி, வேற்றுமை, தொகை, தொடர் என்றின்ன

இலக்கணக் கூறுகளின் நிலைகளைக் கால முறைப்படி காணும் இலக்கண வளர்ச்சி வரலாற்றில் தொல்காப்பியம், வீர சோழியம், இளம்பூரணம், நேமிநாதம், பவணந்தியம், பேராசிரியம், சேனாவரையம், தெய்வச்சிலையம், நச்சினார்க்கினியம், கல்லாடம், மயிலைநாதம், இலக்கண விளக்கம், பிரயோக விவேகம், சுவாமிநாத தேசிகம், சங்கரநமச்சிவாயம், சிவஞான முனிவம், தென்னூல் விளக்கம், முத்து வீரியம் என்ற ஒரே முறையை, இலக்கண மூலாசிரியம் என்ற பேதமற்ற வரிசையைப் போற்ற வேண்டும் என்பது என் எதிர்ப்பார்ப்பு," என்று 'இலக்கண ஒருமைப்பாடு' காட்டுமிவர், "இக்கட்டுரைக்குப்பின் எழுத்தாளர் தம் இலக்கணச் சிந்தனையில் ஒரு புதிய பார்வை பிறக்கும் எனக் கருதுகின்றேன்" என்றும் வெளிப்படக் கூறுகின்றார்.

இவை போல்வனவாம் வழிகாட்டுதல்கள் பல இவர்தம் நூல்களுள் விரவிக் கிடக்கின்றன. இவை தமிழாய்வை, காலகாலத்திற்கு வளர்க்க உதவும் பெற்றியன. இவை சில இங்கு நினைவுபடுத்தப் பெறுவதன் நோக்கமே, இன்றையத் தமிழாய்வர்கள், மாணவர்கள், இளையோர் இவற்றைக் குறிக்கொண்டால், உலகம் போற்றுமாறு நம் ஆய்வுகள் தழைத்துச் செழிக்கும் என்பதாலேயாம்.

## இலக்கியச் சுவை தரும் ஆய்வுகள்

இவர்தம் நூல்களில் அறிவாராய்ச்சிகள் மட்டுமன்றி, இலக்கியச் சுவை தரும் ஆய்வுகளும் சிலவுள. பாடலின் வடிவம் பற்றி, 'வரிசைப் பாட்டு' எனவும் *(ச. 82)*, 'கம்பன் இறுதியடிகள்' என்வும் *(கா. 160)* இவர் எழுதியுள்ளவை சுட்டிக் காட்டத்தக்கன.

ஒரு பாடல் தனக்கென ஒரு வடிவம் உடையது. தலை, முகம், கை, கால், அடி என்பது போலவும் தோற்றம் வளர்ச்சி முடிவென்பது போலவும் பகுத்துக் காணலாம். ஒரு பேருந்தின் உறுப்புக்களைப் பகுத்துப் பிரித்துப்

பார்ப்பதுபோல் ஒரு பாடலைப் பார்க்கலாம்; அவ் வுறுப்புக்களை இணைத்தால் மீண்டும் பேருந்து தன் வடிவம் பெறுதல் போல இப் பகுப்புப் பார்வையும் இணைப்புப் பார்வையும் அமையுமென மேலை ஒப்பிலக்கிய அறிஞர் விளக்கிக்காட்டுவர். ஒரு பாடலில் பல கருத்தலகுகள் இடம் பெறும். மையக் கருத்தும் தலைமைக் கருத்தும் துணைக் கருத்துமென அவற்றைப் பகுத்துக் காண்பர். இவை ஒரு பாடலில் இடம் மாற்றி அமைக்கப் பெறுதலுமுண்டு. தொல்காப்பியர் அகப்பாட்டு வண்ணம், புறப்பாட்டு வண்ணம் எனக் குறிப்பன சிந்திக்கற்பாலன. அவை இன்னும் தெளிவுபடவில்லை. இவ் வகை ஆய்வுகளுக்கு ஊக்கம் கொடுப்பதுபோல, முற்கூறிய இரண்டு கட்டுரைகளும் உள.

'வரிசைப் பாட்டு' என்பதில், சொல்லவந்த செய்திகள் ஏறுமுகமாக அமைவதை, பிசிராந்தையாரின் 'யாண்டு பலவாக' என்ற புறப்பாடலை வைத்து விளக்குகிறார். படைப்பாளி எதனையும் ஒரு காரணங்கருதியே சொல்கிறான். இப்புறப்பாடலில் தமக்கு ஆண்டு பலவாகியும் நரைதிரை தோன்றாமைக்குரிய காரணத்தைப் பிசிரார் எடுத்துரைக்கிறார். ஏதோ இன்று நேர்காணும் இதழாசிரியர்க்கு விடை சொல்வதுபோல் உளது.

**யாண்டுபல வாக நரையில வாகுதல்**
**யாங்கா கியரென வினவுதி ராயின்**
**மாண்டஎன் மனைவியொடு மக்களும் நிரம்பினர்;**
**யான்கண்டனையர் என் இளையரும்; வேந்தனும்**
**அல்லவை செய்யான் காக்கும் அதன்தலை**
**ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்**
**சான்றோர் பலர்யான் வாழும் ஊரே** **(புறம். 191)**

மனைவியும் மக்களும் உடன்பிறந்தோரும் நெருங்கிய தொடர்பினர்; நேரடித் தொடர்பினர்; வேந்தனும் சான்றோரும் பொதுத்தொடர்பினர். நெருங்கியவர்களில் மனைவி முதலிடம் பெறுகிறாள். பொதுத் தொடர்பில்

வேந்தன் முதலிடம் பெறுகிறான். இவ்வாறு கூறி, வரிசைமுறைச் சிறப்பு விளக்கப்படுகிறது. எவ்வகைப் பாட்டுக்கும், இவ்வடிவ அமைப்புப் பற்றிய ஆய்வு சுவையாவதுடன், படைப்பாக்க முறை ஆய்வாக - பயன்பாட்டு ஆய்வாகவும் அமையும்.

பாடல்களில் பொதுவாக இறுதியடிகள், பாட்டின் மொத்தப் பொருளைக் கூட்டி முடிப்பனவாயுள்ளன. செம்மலவர்களின் வாக்கில் சொல்வதானால், 'உடற் பாரத்தைக் காலடி தாங்குவதுபோல' பாத்திரக் கூற்றுக்களின் உணர்ச்சி வன்மைகளை, செய்யுளின் ஈற்றடிகள் தாங்கி நிற்கின்றன. கம்பனில் தோய்ந்து படிக்கும்போது, எதிர்பாராது பற்பல இறுதியடிகள் பாடற் கருத்துக்கு முத்தாய்ப்பு வைத்ததுபோல் சிறந்து நிற்றலைக் கண்ட இப் புலவர் பெருமான், கம்பனின் இறுதியடிகள் பற்றி, இனியதொரு கட்டுரை வரைந்துள்ளார்.

**கோதைகள் சொரிவன குளிரிள நறவம்**
**பாதைகள் சொரிவன பருமணிக் கனகம்**
**ஊதைகள் சொரிவன உறையுறும் அமுதம்**
**காதைகள் சொரிவன செவிநுகர் கனிகள்**

இதில் மாலைகள் தேன் சொரிவதும் நாவாய்கள் பொன் சொரிவதும் குளிர் காற்று நீர்த்துளி வீசுவதும் படிகளாய் அமைந்து, மக்கள் செவிகளில் தமிழ்க்கனிகள் சொரிவதை ஏற்றம் செய்ய வந்தன என இதன் நயம் காட்டப்படுகிறது.

**பரிவி கந்த மனத்தொடு பற்றிலாது**
**ஒருவு கின்றனை ஊழி அருக்கனும்**
**எரியும் என்பது யாண்டையது ? ஈண்டுநின்**
**பிரிவினுஞ் சுடுமோ பெருங்கா டென்றாள்**

(அருக்கன் - சூரியன்) புறச் சூட்டை விட அகச்சூடே தணிக்கவியலாச் சூடு எனச் சீதை, பிரிய நினைக்கும் இராமனிடம் பேசும் இது, ஈற்றடியில்தான் அழுத்தம் பெறக்

கூறப்பெற்றுள்ளது. இதுபோல் தமிழின் சிறப்பைக் குறிப்பிடும் அடிகளெல்லாம், கம்பனில் பாடலின் இறுதியடியாய் இருப்பதையும் அறியச் செய்கிறார். கீழ்வருவன இறுதியடிகளே.

'நீண்ட தமிழால் உலகை நேமியின் அளந்தான்'

'தழற்புரை சுடர்க்கடவுள் தந்த தமிழ் தந்தான்'

'என்றுமுள தென்தமிழ் இயம்பிஇசை கொண்டான்'

'முத்தும் முத்தமிழும் தந்து முற்றும்'

"இவ்வெல்லாம் கலி விருத்தத்தின் ஈற்றடிகள், ஈறில்லாத் தமிழுக்கே கம்பன் பாடிய இசையடிகள்; தமிழின் பேராற்றல் அறியாதவர்க்கு அறிவூட்டும் நல்லடிகள்," என்பார் இம் மூதறிஞர்.

சங்க இலக்கியப் பாடல்களில் முதலடிகளும் இறுதியடிகளும் பொருள் பொதிந்திருக்கும். பல பாடல்களில் முதல் அடியிலேயே சொல்ல வந்த செய்தியின் சாரமிருக்கும். தனி உதிரிப் பாடல்களின் கட்டமைப்பை ஆராய, இவை போல்வன நல்ல வழிகாட்டியாகும்.

### இடைக்கால இலக்கியங்களை இக்கால வாழ்விலக்கியங்களாக்குதல்

இடைக்காலக் கோவை, கலம்பகம், உலா, பிள்ளைத்தமிழ் போல்வன யாவும் நல்ல இலக்கிய வடிவங்கள். அவை சில "கடவுளர்களைத் தலைவர்களாக்கி உலகம் தழுவாவாயின; சில தெய்வத் தலைமை பெற்ற இலக்கியங்கள், நிலந்தீண்டா இலக்கியப் பறவைகள்! அத்தகைய இலக்கியங்கட்கு இவ்வுலக வாழ்வுண்டா? பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லையென்றால், மக்கட்பொருளில்லா இலக்கியங்கட்கு இவ்வுலக வேர் உண்டா? எடுத்துக்காட்டியவற்றிலிருந்து, இடைக்கால இலக்கிய வகைகள் பிழைபட்டனவல்ல எனவும்

இவ்வுலகியலுக்குரிய இடங்களிலும் அவ்வுலகம் புகுந்து கொண்டதனால், இலக்கியப் பாழ் ஏற்பட்ட தெனவும் தெரியலாம். பொடிமட்டையிலும் பொன்துகள் வைப்பாருண்டோ? இடைக்கால நல்ல இலக்கிய அமைப்பைச் சமய வல்லவர்கள் முழுதும் பற்றி அவமாக்கிவிட்டனர். மீண்டும் மக்கள் மேலாக இவற்றைப் பாடி உயிர்ப்பித்தல் தமிழிலக்கிய வளர்ச்சிக்கும் பாவளர்ச்சிக்கும் நல்லது." *(இ. 47)*

இன்றைய மன்னாயம் ஊழல்கள் மலிந்துபோனது. அரசியல் தீயோர் கூடாரமாகிவிட்டது. நாடு தந்நலக்காரர் களிடம் சிக்கித் தவிக்கிறது.

எத்தனையோ நகைச்சுவை தழுவிய அங்கத இலக்கியங்களை, இச்சிறு நூல் வரிசையில் படைத் தளிக்கலாம் என்ற உந்துதலைத் தருகிறது மூதறிஞர் எழுத்து!

இங்ஙனம் ஆராயலாம், படைக்கலாம் என இம் மூதறிஞர் வெளிப்படச் சுட்டிய சில இடங்கள் இங்கு காட்டப் பெற்றன. பொதுவாக இவர்தம் மனப்போக்கும் மனப் போக்கிற்கேற்ற இவர்தம் எழுத்துப்போக்கும் முற்றுப் புள்ளி வைக்காமல் காற்புள்ளியிட்டு நடத்தும் நடைப்போக் குடன் திகழக் காண்கிறேன். "இங்ஙனம் யான் தொடுகிறேன்; இவ்வாறு தொடர்கிறேன்; இனியும் இவ்வழி தொடர்வேன்; நீங்களும் இதன்படி தொடர்வீராக - தொடரவேண்டும். தொடர்வீராயின் மகிழ்வேன்" - இம் மனப்போக்கு நிலையே இவர்தம் எழுத்துக்களின் ஊடு பா இழையாக ஓடிக் கிடக்கிறது.

**9**

# பா நலம் படைத்த பண்பாளர்

பிரஞ்சு நாட்டறிஞர் பிலியோசா பாணினி பற்றி ஒருமுறை குறிப்பிடும் பொழுது, அவர் இலக்கணி யாகாதிருந்தால், கணிதப் பேராசான் ஆகியிருப்பார் எனக் கூறினார். தொல்காப்பியர்க்கும் கணக்குத் திறமை மிகுதி என்பதை, அவர்தம் செய்யுளியலால் உணரலாம். மூதறிஞர் செம்மல் மாணிக்கனார்தம் பாப் புனைதிறன் வளமானது. ஆய்வுலகில் அவர்தம் நுண்மாண் நுழைபுலம் அனைத்தும் பயன்பட்டுப் போயினமையின், அவருள்ளிருந்த பாட்டுப் புனையும் படைப்புத் திறன் உள்ளடங்கிப் போனது. வெளிப்பட்ட சிலவும், போதிய அளவு உணரப்பட்டில. இன்றேல், இன்று அவர் கவிஞர்கோ, பாவலர் பெருமகன், படைப்புக் கலைஞன் எனப் பாராட்டப் பெற்றிருப்பார்.

தமிழில் இன்றையப் போக்கில் நாடகங்கள் இல்லையென உணர்ந்ததனாற் போலும் நான்கு நாடக நூல்களை எழுதினார். மனைவியின் உரிமை முதலாவதும் முதன்மையானதுமாம். 'அஞ்சவந்த உரிமைக்கண்ணும்' என்ற தொல்காப்பியத் தொடரே (1092) அவருக்கு அடியெடுத்துக் கொடுத்தது. தொடர்ந்து நெல்லிக்கனி, உப்பங்கழி, ஒரு நொடியில் என்பன வெளிவந்தன. இவை செழுந்தமிழ் நடையின; கற்பனைச் செறிவு மிக்கன.

பழைய துன்பியல் முடிவுடைய கதைகளை இன்ப முடிவுடன் மாற்றிப் பார்ப்பதை **'மனமாற்ற உத்தி'** என்று இவர் குறிப்பிடுகின்றார். தீய முடிவுகளைச் சொல்லித்

துன்பியலாக முடிவதுமட்டும் நடப்பியல் ஆகாது. "எப்படி நடக்கவேண்டும் என்பதும் நடப்பியலுள் அடங்கும். இன்பியலாகவே முடிக்க வேண்டும் என்பது என் கருத் தன்று. துன்ப நிறுத்தமாக மனமாற்றவுத்தியைக் குடும்ப வுறவில் பெரிய அளவில் கடைப் பிடிக்கலாமே என்பது என் கருத்து," (இ. 16) என இவர் சுட்டும் இது, மிக நீளநினைதற்குரிய படைப்பிலக்கியக் கூறாகும். இதனை விளக்கும் வகையில் சில காட்டுக்களையும் இவர் தருகின்றார். வீடணனும் கும்பகருணனும் கூறியவற்றை இராவணன் ஏற்றுத் திருந்தினான்; தயரதனின் முதுமையையும் தளர்ச்சியையும் பார்த்துக் கைகேசி வரங்கேட்கவில்லை; கண்ணன் தூதை மதித்துத் துரியோதனன் பாண்டவர்க்குச் சில ஊர்களை விட்டுக் கொடுக்க முன்வந்தான்; கடற்கரையில் மாதவியைப் பிரிந்த கோவலன் மனம் செம்மைப் பட்டுக் கண்ணகியுடன் புகார் நகரில் இனிய இல்லறம் நடத்தினான் என இவ்வாறு பேரிலக்கியங்களில் நிகழ்மாற்றம் செய்வது மன்பதைக்கு வழிகாட்டுமல்லவா என்று செம்மல் வினவுகின்றார்.

"எழுத்தாற்றல் என்பது யாது? அதன் பயன் என்ன? வாசகர்கட்கு மனமெலிவைத் தாராதது, மெலிந்த மனத்தை நிமிர்த்துவது, புதுத்தெம்பு மின்னலைப்போல் பாய்ச்சுவது, தற்சிந்தனையைக் கிளறுவது. இதுவே எழுத்தின் அறுவடை யாகும்," என முடிவுரைக்கும் நற்கருத்து, இன்றைய படைப்புக் கலைஞர்கள் சிந்திக்கவேண்டியதாகும். (இ.16) இவற்றுக்கு ஏற்ப இரண்டு நெடுங் கவிதைகளையும் இவர் படைத்து வழிகாட்டுகின்றார். 'புரட்சி மண்டோதரி' - இராவணன் அசோகவனத்தில் சீதையைச் சந்திக்கப் போய்நின்ற நேரத்தில், வெளிப்பட்டு அறிவுரை கூறவே, அவன் திருந்திவிடுகிறான். 'கொல்லாச் சிலம்பு'ம் அவ்வாறமைந்ததே. பொற் கொல்லன் மனைவி, கணவனின் களவை வெளிப்படுத்தி, கோவலன் கொலையுண்ணாமல் தடுத்துக் காப்பாற்றுகிறாள். சோற்றுப் பதம், உப்புப்

பதம்போல இவை இரண்டையும் எழுதினார் என்றுதான் நாம் கருதவேண்டும்.

இன்று வெளிவரும் திரைப்படங்கள் காதலில் ஏற்படும் மாறாட்டங்களையே கருவாகக் கொண்டவை. பெண்ணை ஏமாற்றுதல், பலரைக் காதலித்தல், பல ஆண்கள் ஒருத்தியைச் சூழ்ந்து தாம்தாம் அடைய நினைத்தல், பெண் தனியளாக ஒரு மோசமானவனிடம் சிக்கித் தவித்தல் என்றினையனவும் கற்பழித்தல், களவாடுதல், கொலை செய்தல், ஒருவன் இருபது பேருடன் சிலம்பம் ஆடி வெல்லுதல், ஒருத்தி பரக்கப்பரக்க வெருட்டப் பட்டுச் சித்திரவதை செய்யப்படுதல் என்றினையனவும் பிற கேடுகளுமே சுவை, விறுவிறுப்பு, கவர்ச்சி என்ற பெயரால் கதையாக்கி, காட்சியாக்கி நாடெங்கும் வீடெங்கும் மூலைமுடுக்கெங்கும் காட்டப்படுகின்றன.

அரசியலில் நிசவாழ்வில் மனிதனின் ஊழல், பித்தலாட்டம், கோடி கோடியாகக் கொள்ளையடித்த வனும் நாணமின்றித் தலைநிமிர்ந்து நடத்தல், வழக்கு வழக்கென்று நீதி மன்றங்கள் அரசியலாரின் பழிக்கஞ்சா நாடக மன்றங்களாகக் காட்சியளித்தல் என்பன மனித மனத்தை மரத்துப் போகச் செய்துவிட்டன. திரைப்படங்கள் மற்றொரு வகையில், முன்பு சுட்டியதுபோல மனித மனங்களைத் தடிக்கச் செய்து வருகின்றன. இவை இரண்டாலும் பாரதம் சீரழிந்து, சிதைந்து, அழிவை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறது.

பாவலர் பெருமான் மாணிக்கம் தம் உலகப் பாயிரத்தில் விழிப்பூட்டுவதைக் கருத்திற் பதித்தல் கட்டாயமாகும்.

இனிய உலகம் இன்னா உலகா
அளிய உலகம் அடிதடி உலகா
பெரிய உலகம் பின்னிய உலகா
நல்ல உலகம் நம்பா உலகா

மாறி வருவதை மாற்றல் வேண்டும்!
மாற்றம் இன்றேல் கூற்றம் வருமால்!
இற்றைப் போக்கே இன்னும் வளரின்
நாளைய உலகம் நன்றா காதே!
மக்கட் குள்ளே சிக்கல் மலிந்து
தலைவர்க் குள்ளே கொலைவர் தோன்றிப்
படையோ ரெல்லாம் கடையோ ராகி
அரசுக் குள்ளே ஐயம் பெருகி
அறிவியல் எல்லாம் அரசியல் ஆகி
உலகம் என்பது கலகம் ஆகி
இன்றோ நாளையோ என்றோ அறியோம்
வாரா அழிவுகள் வருவபோலும்!

'மா'மலர்களை அருளிய 'மா'வன்னா அவர்கள் விரித்துக் கூறிய இக் கேடுகள் நாளுக்குநாள் நம்மை நோக்கி நெருங்கி வருவதையே கண்டுவருகிறோம். இது மாறவேண்டுமேல் அறிஞர் அண்ணா, பெருந்தலைவர் காமராசர், லால் பகதூர் சாத்திரி போலும் முழுவதும் அப்பழுக்கற்ற தலைவர்கள் வரவேண்டும். படைப்புக் கலையில் - கதை, திரைப்படம், தொலைக்காட்சி அனைத்திலும் - மனித நேய உத்திகளைக் கண்டு, படைத்துத் திருப்பம் ஒன்றை உண்டாக்க வேண்டும். படைக்கப்படுவன சுவையாகவும் விறுவிறுப்பாகவும் இருப்பதுடன் வருமானம் தரக்கூடியன வாகவும் அமைய வேண்டும். வெறும் உபதேசம் பயன் படாது. இதற்கான அனைத்து முயற்சிகளும் உடனடித் தேவை என்போம்.

ஒரு மாதிரியான நிகழ்வுகளின் கூட்டமைப்பே, நம் திரைக்கதைகளின் கட்டமைப்பாயிருப்பது உலகறிந்த உண்மை. ஊரும் பேரும் வேறுபடும் அவ்வளவே!

பரமசிவன் அருள்புரிய வந்துவந்து போவார்!
பதிவிரதைக்கு இன்னல் வரும், பழையபடி தீரும்!
சிரமமொடு தாளம் எண்ணிப் போட்டியிலே பாட்டுச்
சிலபாடி மிருதங்கம் ஆவர்த்தம் தந்து
வரும் காதல், அவ்விதமேதுன்பம் வரும், போகும்!

என்ற பாவேந்தன் பாட்டு, இன்றும் பொருந்தும்! ஒரு திரைக் கதையில் ஒருவன் செய்யும் கொடுமைகள் அனைத்தும் அங்குலம் அங்குலமாகக் காட்டப்பட்டு, முடிவில் ஒரு கணப்பொழுதில் அவன் கண்டுபிடிக்கப் பட்டுத் தண்டிக்கப்பட்டதாக முடித்தால் போதுமா? ஒரு பெண்ணைக் கற்பழிக்கும் காட்சியைச் 'செய்முறைக் காட்சி' போல, எவ்வாறு கற்பழிக்கப் படுகிறாள் - எவ்வெவ்வாறு ஊர்ப்புறத்தே கூட்டிப் போய் ஏமாற்றப் படுகிறாள் . எவ்வாறு அவள் உடைகள் கிழிய ஓட ஓட விரட்டிச் சித்திரவதை செய்யப்படுகிறாள் என்பதை ஒரு மணி நேரம் காட்டிவிட்டு, அவள் தப்பித்ததை அல்லது செத்ததை - அல்லது காப்பாற்றப்பட்டதை ஒரு நிமிடம் மட்டும் காட்டினால் எது மனத்தில் தங்குகிறது?

முன்பு பக்தர்களுக்குச் சோதனைமேல் சோதனை வரும்; கடைசிக் காட்சியில் கடவுள் தோன்றி அருள்புரிவார்; கதை முடியும். அதனால் பெருந்தீங்கு இல்லை. தன் ஈகம், தியாகம், உறைத்த பத்திமை உணர்வு இவை மேலோங்கி நிற்றலால், சோதனைகளை நீளப் புனைந்ததில் சமுதாயச் சீரழிவுக்கு இடமில்லை. இன்று, கயவன் ஒருவனின் காலாடித் தனங்களே படம் முழுவதையும் அடைத்துக்கொள்ள, அவன் திருந்துவதோ, தண்டிக்கப்படுவதோ ஒருசில நிமிடத்தில் முடிவதாகக் காட்டுவது, பழைய தடத்தின் மறுபதிப்பேயாகும். ஆனால் சமுதாயத்தில் மனிதர்கள் காட்டுமிராண்டிகளாக - விலங்குகளாக மாற இவை உதவுகின்றன. தம் பணப்பெட்டி நிரம்புவதையே நினைக்கும் பட முதலாளிகள், நாளை தம் தாய், சகோதரி, மகள், வாரிசாக வரும் எதிர்காலச் சந்ததி இவ்வாறு கற்பழிக்கப்படக் கூடும் - கொல்லப்படக் கூடும் - சித்திரவதை செய்யப்படக்கூடும் என்பதை நினைப்ப தில்லை.

மாணிக்கனார் குறிப்பிட்டிருப்பதுபோன்ற, பல படைப்பிலக்கிய உத்திகளைக் கண்டு பாராட்டவும்,

புதிதாகக் கண்டு கூறவும் வேண்டும். ஒரு பெண் தன்னைப் பெற்றவர் கொன்றுவிட முயல, அதில் தப்பித்துப் படித்து, மருத்துவராகி, அங்ஙனம் கொல்ல நினைத்தவர்க்கே மருத்துவம் பார்த்து உயிரைக் காப்பாற்றிய கதை ஒன்று. இதைப் 'பழிதுடைக்கும் உத்தி' வகைப் படுத்தலாம். ஒருவன் மிக அமைதியானவன், அடக்கமானவன், அறிவுடையவன். அதே ஊரில் கொடியவர் கூட்டம் அவனைப் பலவாறு துன்புறுத்த முயல, ஒவ்வொன்றையும் அவன் வெல்வதாக - முதலில் தொடங்கி வென்று தன் சிறப்பை நிலை நாட்டுவதாக விறுவிறுப்பான கதை ஒன்று படைக்கலாம். இதனைத் 'தடை களையும் உத்திப்' பாற்படுத்தலாம். ஒருவன் தீயவனாய் வளர்ந்து அடிபட்டு அடிபட்டுத் தானாகவே, படிப்படியாகத் திருந்துவதை, நல்ல விறுவிறுப்போடு காட்டலாம். இது 'தானே உணர்ந்து திருந்துதல்' எனும் உத்தி எனலாம்.

இவ்வாறு கருத்தரங்குகள், ஆய்வரங்குகள், திறனாய்வுகள் நடத்தி நூற்றுக் கணக்கில், **'படைப்புக் கலைகளில் மனிதநேயம்'** பற்றிய உத்திகளைத் தொகுப்போ மெனில், நம் படைப்புலகம் திருந்த அது வழிவகுக்கக் கூடும்.

## வெண்பாவில் புகழேந்திய மாணிக்கம்

'வெண்பாவில் புகழேந்தி' என்பர். தமிழில் 'வெண்பா வரலாறு' ஒன்று எழுதலாம். கலிப்பாடல்கள் ஆடல், பாடல், இசையோடு கூடியவை. குழுப்பாடல்கள் எனத்தகும் அவை, நாட்டுப்புறப் பாடலின் இலக்கிய வடிவங்கள். அதில் காணத்தகும் வெண்பாக்கள், அவற்றின் இசை - ஓசைத் தன்மைக்குச் சான்றாவன. நேரிசை, இன்னிசை, சிந்தியல், குறள் என்ற அனைத்து வெண்பா வடிவங்களும் இசையோடு, இடையிடையே பாடப் பட்டதை இவை மெய்ப்பிக்கும்.

அவனுந்தான்,

ஏனல் இதணத் தகிற்புகை உண்டிலங்கும்
வானூர் மதியம் வரைசேரின் அவ்வரைத்
தேனின் இறாலென ஏணி இழைத்திருக்கும்
கானகல் நாடன் மகன்

அவரும்,

தெரிகணை நோக்கிச் சிலை நோக்கிக் கண்சேந்
தொருபகல் எல்லாம் உருத்தெழுந் தாறி
இருவர்கட் குற்றமும் இல்லையால் என்று
தெருமந்து சாய்த்தார் தலை (கலி. 39)

பின்னர் முத்தொள்ளாயிரம் முத்துமுத்தான வெண்பாக்களைத் தருகிறது. பதினெண் கீழ்க்கணக்கு பல வெண்பா வடிவ நூல்களைத் தருகிறது. திருவள்ளுவரே குறள் வெண்பாவைத் தேர்ந்தெடுத்தாரெனில் அதன் பெருமைக்குச் சொல்லவும் வேண்டுமோ? காரைக்காலம்மையார், முதலாழ்வார் மூவர் யாவரும் வெண்பா யாப்பில் தோய்ந்து நின்றனர் அன்றோ? புகழேந்தி வெண்பாவில் காப்பியம் படைக்கமுடியும் எனக் காட்டினார். அதனால் வெண்பாவுடன் இணைத்து, கம்பர் விருத்தப்பாவுடன் இணைத்துப் புகழப்படுவது போல், புகழப்பட்டார். இங்ஙனமே எண்ணிப் பார்த்தால், கவிமணிவரை எத்தனை புலவர்கள், எத்தனை நூல்கள், எத்தனை பொருளுக்கும் உணர்வுக்கும் ஏற்ற வடிவமாற்றங்கள்! கலிவெண்பா முதலிய இன மாற்றங்கள், வளர்ச்சிகள்! எல்லாம் தனிவரலாறு - திறனாய்வுக்குரிய அளவு மிக நீண்டவை. உலகில் எந்தப் பாவடிவங்கட்கும் இல்லாத வளர்ச்சி வரலாறு நம் சில பாக்களுக்குரியன. அவ்வகையில், மூதறிஞர் வ.சுப. மா. அவர்கள் வள்ளல் அழகப்பரைப் போற்றிப் புகழ்ந்த 'கொடைவிளக்கு' நூலில் பதித்துள்ள வெண்பா முத்திரை இலக்கிய வரலாற்றில் இடம் பெறத்தக்க தாகும்.

பொட்டுத் திகழும் புகழ்சான்ற நெற்றியனைச்
சிட்டுக் குருவிகாள் சேர்மினோ – வட்டினால்

நொந்தாடி நும்மை நொடிப்படுத்தும் பிள்ளையரைப்
பந்தாடச் செய்தான் படித்து

'வெண்பா இருகாலிற் கல்லானை' என்றார் ஔவையார். இருமுறை படித்தால், வெண்பா மனத்தை விட்டுப் போகாதாம். செம்மல் மாணிக்கனார் பாடியுள்ளவை முத்துமுத்தாய்ப் பொட்டுப் பொட்டாய்க் குத்துவிளக்குப்போல் ஒளிவீசி நிற்கின்றன.

அழகப்பர் பல்கலைக் கழகம் காண விரும்பியதை, ஒரு வெண்பாவிற் பாடி, 'அழகப்பா பல்கலைக்கழகத்தைக் காண்பது தமிழர் கடனாகும்' எனக் குறிப்பும் எழுதி 1957 லேயே வெளியிட்டிருந்தார்.

பல்கலை தேர்கழகம் பற்றாய் நினைத்தான்தன்
நல்ல குறிக்கோளை நாட்டுமினோ – தொல்லைச்
செடிநின்ற காட்டகத்துச் சில்லென்று பூக்கும்
கொடிநிற்க வைத்தான் குறித்து

கவிஞர் வாக்குப் பலிக்கும் என்ற நம்பிக்கைக்கும் ஏற்ப இன்று பல்கலைக் கழகம் தோன்றிச் சிறப்புற்று விளங்குகிறது.

'வள்ளல் தமிழ்ச்சொல் வணங்கித் தவம்செய்து, கொள்ளப் பிறந்த கொடையழகன்' எனச் சீராட்டும் இக் கொடைவிளக்கு, என்றும் அணையாத் தமிழ் விளக்கு. அழகப்பர்க்கு எடுக்கப்பெற்ற அழியாத் தமிழ் நினைவுச் சின்னம்!

கோடி கொடுத்த கொடைஞன்; குடியிருந்த
வீடுங் கொடுத்த விழுச்செல்வன் – தேடியும்
அள்ளிக் கொடுத்த அழகன்; அறிவூட்டும்
வெள்ளி விளக்கே விளக்கு

இந் நூலில் உள்ள ஒவ்வொரு வெண்பாவும் ஒரு புகழ் விளக்கு! பள்ளிப் பிள்ளைகட்குப் பாடமாக வைக்கலாம். வரப்பண்ணச் சொல்லி ஒப்பித்து எழுதும் போட்டி

வைக்கலாம். அத்துணைத் திட்பநுட்பமும் கட்டமைப்பும் கருத்துச் செறிவும் கொண்டவை. “விரைவின் வந்தது விரைவிற் போகும்; அரிதின் வந்தது அரிதிற் போகும்” என்பார் இவர். இந்நூல் அரிதின் வந்தது; நெஞ்சத்தின் ஆழத்திலிருந்து வந்தது. அதனால் இன்று உதட்டளவில் வந்து உதிர்ந்துபோம் புகழ்ப்பாடல்கள் போலாது, நின்று நிலைக்கும் நிகரற்ற வலுவுள்ளது.

## தமிழ்க் குறள்

குறள் யாப்பில் யாரும் நீதிநூல் பாடினால், எனக்கு ‘ஒவ்வாமை’ தோன்றும். சுத்தானந்த பாரதியார் இல்லறம் துறவறம் பற்றிப் பாடிய குறள் யாப்பு வடிவ நூல் வெளிவந்தபோது, திருக்குறளுடன் குழப்பம் ஏற்படுமே என எண்ணியதுண்டு. கம்பன் பாடலைப்போல் பாடியவர்கள் - பாடி நூலில் நுழைத்தவர்கள் நினைவிற்கு வந்தனர். அன்னைக் குறள் என்றும் அருட் குறள் என்றும் பலர் எழுதியுள்ளனர். அவற்றை என் மனம் ஏற்பதில்லை. குறள் யாப்பை, வள்ளுவர் போலவும் அவர் சொன்ன அதே அறங்கள் போலவும், அதே நடை போலவும் எழுதுவன போலியாகிவிடுமன்றோ? அறம், நீதி தவிர வேறு பொருள்களில் குறள்வெண்பா யாப்புப் பயன்படுமேல் வரவேற்கத் தக்கதாகும்.

மாணிக்கக் குறளைப் பார்த்தபோதும் இவ் ஒவ்வாமை என்னைப் பற்றிக் கொண்டது. உட்சென்று படித்தபோது, அதில் பெரும்பான்மையானவை ‘தமிழ்’ பற்றியே அமைந்திருந்தமை கண்டு, மகிழ்ச்சி ஏற்பட்டது. தமிழ் பற்றிய செம்மல் மாணிக்கனாரின் கருத்துக்கள், கொள்கைகள், குறிக்கோள்கள் யாவும் அவர்தம் பல்வேறு நூல்களில் பரவிக் கிடக்கின்றன. அவை அனைத்தும் இங்கு குறளுருவில் வாமன அவதாரம் எடுத்துள்ளன. தமிழியக்கம், தமிழ்வழிக்கல்வி இயக்கத்திற்கான மொழிப்போர் முழக்க வாசகங்களாகப் பல குறள்கள் காணப்படுதல், இன்று

அவ்வியக்கம் வலுப்பெற உதவுவனவாகும். இவற்றை இயக்கப் போராட்டங்களில் அச்சடித்து வழங்கலாம்; மேற்கோளாய் ஆளலாம்; கூடிநின்று முழங்கலாம்!

தமிழிற் சிறந்ததோர் தாய்மொழி இல்லை
இமிழ்கடல் ஞாலத் தெமக்கு

உயர்த்துவோம் நந்தமிழை ஊர்ப்பள்ளி தோறும்
துரத்துவோம் அல்மொழியைத் தூர்த்து

தூக்கிய தில்லையான் சொற்றமிழை அம்பலமேல்
நீக்கிய சூழ்ச்சி நினை

போர்த்தும்பை கண்ட புகழ்மறவர் தாய்மொழியின்
தேர்த்தும்பை விட்டார் சிறுத்து

பாரெங்கும் வீசும் பசுந்தமிழ் நம்நகர்
ஊரெங்கும் இல்லை உணர்

இன்னும் நெஞ்சில் தைத்து ஊடுருவி உணர்வூட்டும் தமிழ் மாணிக்கக் குறள்கள் பலவுள.

தமக்கென 'தமிழ்க்கொள்கை' ஒன்றைக் கடைப் பிடிக்க வேண்டுமென்றும், அதனால் தேர்தலில் தோல்விகண்டாலும் கொள்கையை விடாது, அதுவே தமிழ்த் தொண்டெனக் கொள்ளவேண்டுமென்றும் இவர் அரசியல் கட்சிகளுக்கு அறிவுறுத்துகின்றார்.

தேர்தல் களத்தில் செழுந்தமிழ்க் கொள்கையால்
தோல்வி கிடைப்பினும் தொண்டு

விடுதலைப் போராட்டம், இந்தி எதிர்ப்புப் போராட்டம் போல, ஆங்கில எதிர்ப்புப் போராட்டமும் கட்டாயம் என இவர் உணர்ந்து, தமிழ் இயக்கங்கள் இனிப் போராட்டக் களத்தில் குதிக்க வேண்டுமென வழிகாட்டு கின்றார்.

போராட்டம் இன்றிப் பொருவில் தமிழுக்குத்
தேரோட்டம் இல்லை தெளி

## தமிழாட்டு

தாலாட்டு இவர் பாடலில் தமிழாட்டு ஆகிறது; ஆத்திசூடி தமிழ்சூடி ஆகிறது. குழந்தைப் பாடல்களும் எழுத முயன்றுள்ளார். இவர்தம் பல்வகைப் பாடல்களின் தொகுதியே மாமலர்கள் ஆகும்.

குழந்தை அழுவதற்கு இவர் கண்டுசொல்லும் காரணங்கள் இன்றுள்ள தமிழின் நிலையை விளக்குவன.

**அம்மாவோ என்னைநீ ஆங்கிலவாய்ப் பள்ளிக்குச்**
**சும்மாவும் விடாயென்று சொல்லவோ துடிக்கின்றாய் !**
**அப்பாநல் லம்மாவென்று அழகுதமிழ் கூறாமல்**
**எப்படியோ வாய்பிளக்கும் இழிவுகண்டு நாணினையோ ?**

இவருடைய தமிழ்சூடி இவர்தம் இயல்பு, பழக்க வழக்கம், உள்ளக்கிடக்கைகளையும், வெளிப்படுத்தும் நல்ல அழகிய சூடியாகும்.

ஓசிகேளேல், எச்சில் துப்பேல், நகத்தைக் கடியேல், சைவம் பிடி, என்பன நல்ல பழக்கம் கற்பிப்பன; பிள்ளைகட்கு ஏற்றன.

முத்தின் எழுது - மாணிக்கனார் கையெழுத்து மணிமணியாயிருக்கும்; விரைந்தெழுதினாலும் அவர் தம் எழுத்துக்கள் முத்துமுத்தாக இருக்கும். பொய்யை விடு - அவர் வாழ்வியல் அது. சுண்டைவளர் - சுண்டைக்கறியில் விருப்பம் போலும். நூல்கள் எழுது - அது தானே அவர் விட்டுச்சென்ற தமிழ்ச் சொத்து, செல்வம். மிதியடி குறை - அவர் பெரிதும் காலில் நடையன் அணியாமலே நடப்பவர். வானொலி கேள் - அவர் பழக்கம். விசிறியின் கீழ்ப்படுக்க வரும்பாத அவர் 'வேர்க்க உழை' என்பார்... உடம்பிற் கழிவுகள் வெளியேற வேண்டுமாம். தமிழ் பற்றியும் பொதுநலம் பற்றியும் அவர் பாடியுள்ள தமிழ் சூடிகள் பயன்பாடு மிக்கவை.

## வாழ்த்து, பாராட்டு

அவர் யாரையேனும் வாழ்த்திப் பாராட்டியுள்ளாரெனில், அவை அரியவையாகக் கருதப்பட வேண்டும். பணச் சிக்கனத்தை விடப் பாராட்டுச் சிக்கனத்தைக் கடைப்பிடிப்பவர் அவர். உதட்டிலிருந்து வருவன அல்ல அவை; உள்ளத்திலிருந்து புறப்படுவன. சான்றோர் மெ. திருநாவுக்கரசு அண்ணனின் திருமணத்தை வாழ்த்தியும் தம் தம்பி வ.சுப. சொக்கலிங்கம் அவர்களின் திருமணத்தின் போதும் மடல்வடிவில் எழுதியவை சிறந்த 'தன்னுணர்ச்சிப் பாடல்களுக்குச்' சான்றாவன.

## பல்வகை

'தாய்காட்டும் தாய்மொழிக்கே முதன்மை வேண்டும்
தாராத அரசினையாம் மதிப்பதில்லை'

என்பது அவர் கருத்துமுடிவு. இயற்கையெலாம் பிறர் வாழத் தொண்டு செய்கின்றன; யானும் அதுபோல் தொண்டுசெய்து வாழவேண்டுமென்ற பாடல் நினைவிற் கொள்ளத் தக்கது.

நல்லாவின் பால் முழுதும் கன்றுக் கில்லை
நறும்பூவின் மண முழுதும் சோலைக் கில்லை
நெல்லாகும் கதிர் முழுதும் நிலத்துக் கில்லை
நிறைகின்ற நீர்முழுதும் குளத்துக் கில்லை
பல்லாரும் கனிமுழுதும் மரத்துக் கில்லை
பண்ணரம்பின் இசைமுழுதும் யாழுக்கில்லை
எல்லாமே பிறர்க் குழைக்கக் காணுகின்றேன்
என்வாழ்வும் பிறர்க்குழைக்க வேண்டும் வேண்டும்

'ஊற்றுக் கோல்' தலைப்பில் மையூற்றி எழுதும் பேனாவைப் பற்றியும், நகைச்சுவையாகச் சிறு பாடல் உளது. வெயில் காலத்தில் 'நுங்கு' மிகக் குளிர்ச்சியாயும் இனிமையாயும் இருக்கும். "நுங்குவும் வெயிலும் போன்ற நுகர்ச்சியே இன்பமாகும்" என்று பாடுகிறார் இவர்.

'வாய்மை'யைப் போற்றி வாழ்ந்த இவர் அவ் வாய்மையைத் தங்கப் 'பவன்' எனப் போற்றுகிறார்.

பணங்களுள் ஞாலம் ஏற்கும்
பவன் எனும் மாற்றுப் போலும்
வணங்கியாம் தெளிந்து கொண்ட
வாய்மைப்பே ரொளிய தாமே

என்பது அவர் வாக்கு. 'தமிழ்க் காதல்' மாணிக்கச் செம்மலார்க்கு 'டாக்டர்' பட்டம் பெற்றுத்தந்த, மிகுசிறப்புடைய அகத்திணை ஆய்வாகும்.

அது நூல்வடிவில் வந்தபோது, மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே. சாமிநாதையர்க்கு அதனை உரிமைப் படுத்திக் காணிக்கையாக்கிய பாடல், தமிழ்த் தாத்தா தமிழ் காத்ததை அழுத்தமாய்ப் புகல்கிறது. அதே பாடல் இன்று, மூதறிஞர், செம்மல் வ.சுப. மாணிக்கனார்க்கும் பொருந்துமாதலின், முடிவில் அதனை நாம் இங்கே நினைவு கூர்தல் தகும்.

பார் காத்தார் ஆயிரம்பேர்; பசித்தார்க் காகப்
பயிர் காத்தார் ஆயிரம்பேர்; பாலர்க் காக
மார்காத்தார் ஆயிரம்பேர் வாழ்ந்த நாட்டில்
மனங்காத்த தமிழ்த்தாய் 'என் உடைமை யெல்லாம்
யார்காத்தார்' எனக்கேட்க ஒருவன் 'அம்மா
யான் காப்பேன்' எனவெழுந்தான் சாமி நாதன்
நீர்காத்த தமிழகத்தார் நெஞ்சின் உள்ளான்
நிலைகாத்த மலைஇமய நெற்றி மேலான்!

தமிழ் நூல்களைக் காத்த சாமிநாதர் போலத் தமிழ், தமிழ் இலக்கியம், தமிழ்ப்பண்பாடு - இவற்றைக் காப்பதே நூலிழையாக ஓடிக் கிடப்பது மாணிக்கத் தமிழ்! சொல்லாக்கம், நடைச் செறிவு, ஆய்வு ஆழம், உவமை நலம், நுழைபுலம், கவிவளம் இவற்றால் தனித்தன்மைகள் பலகொண்டது மாணிக்கத் தமிழ்! மாணிக்கத் தமிழில் எதிர்கால வளர்ச்சிக்கான அடிப்படைகள், வழி

காட்டுதல்கள் உள; முன்னோடிச் சான்றுகள் பலவுள. சொற்றமிழ், நற்றமிழோடு காலமெல்லாம் கலந்தொன்றாய் மாணிக்கத் தமிழும் இந் நீள் நிலந்தன்னில் வாழும் வலுவுடையதாகும்.

10

# மொழிப்போர் தொடங்கிய தமிழ்ச் சான்றோர்

தமக்கெனச் சில அடிப்படைக் கொள்கைகளும் கருத்துக்களும் குறிக்கோள்களும் உடையவராக இருப்பதே சிறப்பு. எனினும் உலகில் பலருடனும் பழகும்பொழுது, நெகிழ்ச்சி ஏற்படலும் இயல்பே. ஆனால் செம்மல் மாணிக்கனார் தம் கருத்துக்களை எது கருதியும் மாற்றிக்கொள்ளா உறுதியுடையவர். பிடிவாதமானவர் என்பதனிலும் விடாப்பிடியாய் நிற்பவர் என்பதே பொருத்தம். பெரிதும் காலில் செருப்பணியாது நடக்க வேண்டுமென்ற கருத்துடையவர். அதனால் அதைப் பின்பற்றுவதில், மற்றவர் எது பேசினும் அசையாத மனமுடையவர். மனிதரை மனிதர் வணங்குவதில் விருப்பற்றவர். அதனால் பிறர் வணங்கினும், சற்றே முகம் மலர்தலோடு நின்றுவிடுவார். சிலருக்குச் சிலபோது இது வேற்றுமையாகப்படும். மின் விசிறியின்றி இருக்க வேண்டும். உடல் நன்கு வியர்க்க வேண்டும். அதைத் தடைப்படுத்தக் கூடாது. இவ்வாறு தமக்குரிய தனிக் கருத்துக்களை விட்டுக்கொடுக்கமாட்டார். உலகத்தோடு ஒட்ட ஒழுக வேண்டிய கட்டாயங்களில், பிறருடன் குளிர் அகங்களில் இருக்கவேண்டிய சூழல்களில் ஒத்துப்போனாலும் அதில் விருப்பின்றியே ஈடுபடுவார்; தாமரை இலைத் தண்ணீர்போல நடந்து கொள்வார்.

தமக்கெனச் சிறப்புடைய அழுத்தமான எண்ணங்களை உடையவர். அவர்தம் இறுதிக் காலக் குறிக்கோள் தமிழ்வழிக் கல்வி இயக்கமாகும். துணைவேந்தராக இருந்து ஓய்வுபெற்ற பிற்பாடு, அவர் ஒரு தமிழ்ப் போர் மறவராகவே மாறிவிட்டார். 1987இல் தில்லைக் கோயிலில் குடமுழுக்குவிழா நிகழ இருந்தபோது, அதற்கு முன்பே திருமுறைகளை அம்பலம் ஏற்ற அரும்பாடு பட்டனர். "தில்லைக் கூத்தப் பெருமானுக்கு மெய்யன்பர்களின் முதல் வேண்டுகோள்" என, 1986இல் வெளியிட்ட துண்டறிக்கை சிதம்பரத்தை ஒரு கலக்குக் கலக்கியது. பேராசிரியர் க. வெள்ளைவாரணர், பெரும்புலவர் த. முருகேசன், சிதம்பரம் மயில்வாகனன், பதிப்புச் செம்மல் ச. மெய்யப்பன் அனையார்தம் துணையோடு, போராடி, திருமுறைகள் அம்பலத்தின் மேலேறி ஒலிக்கச் செய்தார்.

அம்பலத்தில் தமிழை ஏற்றிய அதே பெருமையுடன், மழலையர் கல்வி முதல் பல்கலைக் கழகம் வரை தமிழ் வழிக் கல்வியை முறைப்படுத்தி, நடைப்படுத்த வேண்டி, இவர் 'தமிழ்வழிக் கல்வி இயக்கத்தைத்' தொடங்கினார். தமிழகத் தலைநகரங்கள் பலவற்றில், துண்டறிக்கைகள் வெளியிட்டும், சுவரொட்டிகள் ஒட்டச் செய்தும், பொதுமக்களுக்குக் கருத்து விளக்கக் கூட்டங்கள் நடத்தியும், தாமே தலைமையேற்று ஊர்வலங்கள் நடத்தியும் இயக்கத்தைத் தமிழறிஞரும் மக்களும் கூடிச் செய்யும் இயக்கமாக்கினார்.

காந்தியடிகள் வழியில், ஆங்கிலத்தை எதிர்த்து அறப்போர் தொடுத்தார். "காந்திய முறையும் வள்ளுவ நெறியும் கொண்டது நம் இயக்கம்" என அவர் வழிகாட்டினார்.

அன்னியத் துணிகளை விலக்கவேண்டிக் காந்தியடிகள் முழக்கிய போர் முரசென, இவர்தம் தமிழ்வழிக் கல்வி இயக்க முழக்கங்களும் தமிழகத் தெருக்களில் எதிரொலிக்கலாயின.

## அன்னைத் தமிழே வேலை பெறு; ஆங்கிலமே வெளியேறு!

'வெள்ளையனே வெளியேறு' என்றார் காந்தியடிகள், நாடு விடுதலை பெற இந்தியாவைவிட்டு 'வெள்ளையர் வெளியேற்ற இயக்கம்' (Quit India Movement) என அது உலகப் புகழ் பெற்றது. இவரும் 'ஆங்கில வெளியேற்ற இயக்கம்' (Quit English Movement) தொடங்கினார், மொழி விடுதலை பெற. ஏனெனில் மொழி விடுதலை பெறாது, நாடு மட்டும் விடுதலை பெற்றதென்பது செம்பாதி விடுதலையேயாகும்; மேலும் காலப்போக்கில் 'கெடுதலை' ஆகி முடியும். இந்த இயக்கம் தமிழுக்குமட்டுமன்று; இந்திய மொழிகள் அனைத்திற்கும் பொருந்துமென்றார் அவர். இந்த இயக்க முழக்கம் இந்தியா முழுவதும் பரவுமுன் அவர் காலமானது, இந்திய மொழிகளின் தவக்குறை என்றே கூறலாம். ஏனெனில் ஆங்கில வெளியேற்ற இயக்கம் மட்டும் தில்லியிலும் பிற மாநிலங்களிலும் பரவியிருக்குமாயின், மாணிக்கனார் தொடங்கியது பாரதப் பேரியக்கமாகி யிருக்கும். அங்கெல்லாம் இந்த உணர்வு முன்பே வேர்பிடித்துளது. 'புல்லுருவி' என்று கேள்விப் பட்டிருக்கலாம். தான் படரும் மரத்தின் சத்து முழுவதையும் தான் உறிஞ்சிக்கொள்ளுமாம் அது. அதே போல, ஆங்கிலம் மேலாண்மை செலுத்தும்வரை, இந்திய மொழிகளை அது வளரவிடாது. ஆங்கிலத்தை, அளவாக உலகத் தொடர்புக்குமட்டுமே பயன்படுத்த வேண்டும். சுருங்கச் சொன்னால் இந்தியர்களாகிய நாம் ஒரு இரசியனைப் போல், சீனனைப் போல், சப்பானியனைப் போல் மாற வேண்டும். அத்தகைய உணர்வு வேகத்தை உண்டாக்க முனைந்தார், இத் தமிழியக்கத் தானைத் தலைவர்.

தமிழ்வழி கற்பவர்கட்கு மட்டுமே தமிழகத்தில் வேலைவாய்ப்புத் தர வேண்டும். அப்போதுதான் தமிழ் ஆட்சி மொழி என்பதும் வெற்றி பெறும். சிலர் ஆங்கிலவழி

தான் எனக் கற்பாராயின், அவர்களை வெளிநாடுகட்கே அனுப்ப வேண்டும்; இங்கு வேலைவாய்ப்புத் தரவே கூடாது. தமிழ்வழிக்கல்வியை, ஒரே சமயத்தில் நாடு முழுவதும், அனைத்து நிலையிலும் கொண்டு வர வேண்டும். சோதனை செய்து பார்க்க, இங்கும் அங்கும் சிலசில இடங்களில், சில சில பாடங்களில் கொண்டுவருகிறோம் என்று சொல்வது தமிழ்த்தாயை அவமதிப்பதாகும். ஆங்கிலேயன் வெளியேறுங்கால், ஒரு சிறுபகுதியைத் தந்து 'உங்களுக்கு ஆளத் தெரிகிறதா' என்று சோதனை செய்து பார்க்கிறேன். அதன்பின் முழுவதும் தருகிறேன் என்றா கூறினான்? எனவே சோதனை முயற்சி, தடைகள் பலவுள என்றெல்லாம் காலங்கடத்துவது தவறு.

ஆங்கிலப் பள்ளிகள் அடிமைக் கடைகள் என்றும் வேலை ஆங்கிலத்துக்கு, வெட்டி தமிழுக்கா என்றும் வளம் ஆங்கிலத்துக்கு, வறுமை தமிழுக்கா என்றும் முழங்கினார்.

தாய் மொழிக் கல்வி தாய்ப் பாலாகும்
அயன் மொழிக் கல்வி அன்பைச் சிதைக்கும்

என்று இதுபோலச் சுவரொட்டிகள் அச்சிட்டு ஒட்டவேண்டும் என்றார்.

தமிழ் நாட்டில்
தமிழ் பள்ளி ஏறுக; தமிழ் கல்லூரி ஏறுக
தமிழ் பல்கலைக் கழகம் ஏறுக
தமிழ் ஒன்றே நம் பயிற்றுமொழி

என அவர் துண்டறிக்கைகளில் முழக்க வாசகங்களை எழுதி நாடெங்கும் பரப்பினார்.

தமிழ்வழிக் கல்வியே தாய்ப்பால் ஆகும்
தமிழ்வழிக் கல்வியே சமநிலை வழங்கும்
தமிழ்வழியோடு பிறமொழி கற்க

ஆங்கில மோகம் அறுக அறுக
ஆங்கிலக் கடைகள் அகல்க அகல்க

இவ்வாறு ஒரு பெரும் போராட்டத் தொடக்கம் அவர் வாசகங்களில் காணப்பட்டது. ஒரு வழக்கறிஞர் போல், அவர் தமிழ்வழிக் கல்விக்காக வாதிட்டார்.

சோதனை முயற்சி; படிப்படி முயற்சியெல்லாம் தாயை அவமானப் படுத்தும். ஒரே பயிற்றுமொழிதான் அமைதல் வேண்டும். இரண்டு பயிற்றுமொழிகள் என்ற போட்டியெல்லாம் கூடவே கூடாது.

> தமிழின் இடத்தைப் பிடித்திருக்கும் ஆங்கிலத்தை அறவே அகற்ற் வேண்டும்.
>
> மழலையர் பள்ளி முதல் பல்கலை வரை தமிழே பயிற்றுமெழியாதல் வேண்டும். நன்முறை மழலையர் பள்ளிகளை அரசு தொடங்கவேண்டும்.
>
> பிறநாடுகளில் வேலை வாய்ப்பு விரும்புவோர், ஆங்கிலம் மட்டுமன்றி, அவரவர் விரும்பும் மொழியைப் படிக்கலாம். தாய்மொழிவழி கற்றால், தொடர்புக்கான துணைமொழி ஆங்கிலமாக அமையட்டும்; பிறமொழி கற்கும் வாய்ப்பும் தரப்படட்டும்.
>
> தமிழ் பயிற்றுமொழி என்பது, வேலை வாய்ப்போடு கூடியதாதல் வேண்டும். தமிழக வேலை வாய்ப்பு, தமிழ்வழி கற்றவர்க்கே என்ற உறுதி ஏற்படவேண்டும். தமிழைப் பொருள் வருவாய் தரும் மொழியாக்கினாலன்றி, அதில் உண்மையான பற்று ஏற்படாது.

தமிழின் தகுதிப்பாடு பற்றி ஐயப்படுவோர் யாருமிருந்தால், அவர்களுக்குத் தமிழ்மொழியின் ஆற்றல்பற்றி விரிவாக எடுத்துரைக்கின்றார். தமிழகம் முழுவதும், அனைத்துத் தமிழமைப்புக்களும் ஒருங்கு திரண்டு தமிழ்வழிக் கல்விக்குப் போராடவேண்டும் என்பது இவர்தம் விருப்பம். தமிழகத்திலுள்ள ஆயிரம் சான்றோர்களை இணைத்துச் **'சான்றோர் அணி'** ஒன்றைத் தொடங்க இவர் எண்ணியிருந்தார்.

தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் தேவையற்ற கவைக்குதவாத புல்லிய வீண்வேலை என்பது இவர் கருத்து. ஆங்கிலம் 26 எழுத்துக்களில் 45 ஒலி வேறுபாட்டைத் தருவதையும், உலக மொழி ஒலிகளையெல்லாம் தன்னிடமுள்ள ஒலிவரம்பிற்குள் உள்ளடக்கிக் கொள்வதையும் மிக விரிவாக விளக்கியுள்ளார். தமிழில் உயிர் மெய்களில் இகர, உகரக் குறியீடுகளைச் சுருக்கவேண்டும் என்பது, இன்றைய எழுத்துச் சீர்திருத்தக்காரர்களின் கருத்தாகும். இன்றுள்ள இகர, உகர முறையே இடச்சுருக்கமும் காலச்சுருக்கமும் தருமென இவர் சான்றுடன், கணக்கிட்டு எடுத்துரைக்கின்றார். எழுத்துச் சீர்திருத்தம் வேண்டுவார் முதலில் தமது நூல்களைத் தாம் நினைக்கிறபடி எழுதி, வெளியிட்டால் உண்மை விளங்கிவிடும் என்பார் இவர்.

நம் பிள்ளைகளுக்குத் தமிழ் இலக்கியம் அறிமுகமாக வேண்டும். தமிழ் எழுத்துக்களை ஒலிப் பிழையின்றி உச்சரிக்கும் பழக்கம் வரவேண்டும். இதற்கொரு வழி இளமையிலேயே தமிழ்ப் பாடல்கள் பலவற்றை, மனத்தால் வரப்பண்ணி ஒப்பிப்பதாகும். ஆங்கில உரைநடை கைவரப் பெறவேண்டுமென்பார், சிறந்த உரைநடைப் பகுதிகளை நெட்டுருச் செய்து பழக வேண்டுமென அங்கு ஒரு கருத்துண்டு. காரைக்குடியில் தமிழ்ச் சங்கம் நிறுவி, தமிழார்வம் மிக்கவர்களைக் கொண்டு, மழலையர் முதல் பள்ளிப் பிள்ளைகட்கு, **'ஏழிளந்தமிழ்'** எனத் தமிழ் நீதி நூல்களைத் தொகுத்துத் தந்து, மனப்பாடம் செய்யச் சொல்லி, ஆண்டுதோறும் வட்டாரமனைத்திலும் மனனப் போட்டிகள் வைத்தார். பெரியவர்கட்குப் பெருந்தமிழ் நூல்களிலும் போட்டிகள் நடத்தினார். இம்முறை, தமிழகத்திலுள்ள தமிழ்ச் சங்கம், கழகம், பேரவை, மன்றம் அனைய அனைத்துத் தமிழமைப்புக்களும் ஆண்டுதோறும் நடத்தவேண்டிய ஒன்றாகும். இளம் பிஞ்சு நெஞ்சங்களில் அறமும் நன்னெறிகளும் அவற்றோடு தமிழும் பசுமரத்தாணிபோல் பதிய இஃது உதவும்.

பாரதப் பேரரசில், இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் குறிக்கப்பட்ட பதினான்கு மொழிகளும் ஆட்சிமொழிகளாக வேண்டுமென இவர் 'தலைவர்களுக்கு' என்ற நூலில் மிக அழுத்தமாக வற்புறுத்தியுள்ளார். இந்தி ஒன்றே பொதுமொழி என மிக வலியுறுத்தும் காலம் ஒன்று வரின் நாடு சிதறுண்டு போகும். இந்தியா பல மாநிலங்களின் நாடன்று; பல நாடுகளின் நாடு. அமெரிக்காவை ஒப்பிடுவதும் தவறு. அங்கும் 'ஸ்பானிஷ்' மொழி, எல்லா வகையாலும் இரண்டாமிடம் பெற்று வருகிறது. எதிர்காலத்தில் ஸ்பானிஷ் மொழி தெரியாமல் அங்கு எதுவும் நடைபெறாது என்ற நிலை உருவாகி வருகிறது. பல குடியரசுகளின் கூட்டிணைப்பாக இருந்த (U.S.S.R.) உருசியம் தனித்தனி பிரிந்துபோன வரலாற்றை உன்னிப்பாக அறிவது இந்தியர்க்கு நல்லது. பதினான்கு மொழிகட்கும் சமநிலை தர எல்லா வகையாலும் சிந்தித்து வழிவகை காண்பதே, எதிர்காலப் பாரதத்தைக் காக்க வழியாகும். அதற்கு இப் பேரறிஞர் காட்டும் நெறி முறைகள் அக்கறையோடு சிந்திக்கப்பட வேண்டும். இச்சிந்தனை களின் அருமை கருதியே இவை மீண்டும் நினைவு படுத்தப் பெறுகின்றன.

இன்று திராவிட முன்னேற்றக் கழகத்தினர், நடுவணரசின் ஆட்சிமொழியாகத் தமிழ் ஏற்கப்பட வேண்டும் என்று குரல் எழுப்பியிருப்பது, இம் மூதறிஞரின் குறிக்கோள் வெற்றிபெறும் என்பதற்கு முதற்படியான சான்றாகும். ஆட்சியிலிருந்து கொண்டு எழுப்பப்பட்ட இக் குரல் தில்லியில் எதிரொலிக்கும் என்பதுறுதி.

மழலையர் பள்ளி முதல் ஐந்தாம் வகுப்புவரை ஆங்கிலம் அறவே கூடாது. பயிற்று மொழியும் பாடமொழியும் தமிழாகவே இருக்க வேண்டும். என்னதான் ஆங்கில அறிவு வேண்டுமென்றாலும் ஆறாம் வகுப்புமுதல் அதைக் கற்றால் போதாதா? குழந்தை பிறந்ததுமுதல் தமிழையே கற்பியாமல், ஆங்கிலத்தை மட்டுமே திணிப்பது

எவ்வளவு அவமானம்? இதில் அரசு, பெற்றோர், மக்கள் அனைவருக்கும் பங்குண்டு. தமிழ்மக்களின் அறியாமை யையும் அடிமைப் புத்தியையும் சாடுமாறு இவர் 'அன்னை கொதிக்கிறாள்' எனப் பாடல் ஒன்று புனைந்து, அதில் தமது வயிற்றெரிச்சலைக் கொட்டியுள்ளார். எல்லோரும் படிக்க வேண்டிய தமிழ் விடுதலைப் பாடல் அது. தமிழ்த்தாய் தமிழர்களைப் பார்த்துப் பேசுகிறாள்:

என்னை வெறுக்கும் தொன்னை உளத்தீர்!
அன்னை பெருமை அறியாச் சிறியீர்!

. . . . . . . . . . . . . . . . . . . . . . . .
போய்வரு வேனா? போய்வரு வேனா?
தாய் மொழி விற்றுப் பிறமெழி நம்பும்
பேய்வழி மக்களைப் பெற்ற தற்காக
ஊழி முதலா உறைவிடம் விட்டு
வாழிய என்று வயிறோ எரியப்
போய்வரு கின்றேன்; போய் வருவேனா?

தமிழ்த்தாய், இந்த நாட்டையேவிட்டுப் 'போய் வரட்டுமா?' என விடைபெறுவதாகத் தொடங்குவரேல், இம் மூதறிஞர் பாவலர் கோமானின் நெஞ்சக்கொதிப் பன்றோ அது? நல்ல வேளையாக, புலமைத் தலைவர் ஒருவர் தாய் போவதைத் தடுக்கின்றார். அன்னை மக்களுக்கும் அரசுக்கும் அறிவுரை கூறித் தங்குகிறாள். இங்ஙனம் அப் பாடற்கற்பனை அமைகிறது.

தமிழ் உலகமொழி - உலகிலேயே பெரும்பான்மை யினர் பேசும் மொழி - பேசிய மொழி என்பதைப் புதிய உத்தியால் இவர் விளக்குகிறார். மற்ற செவ்வியல் மொழிகள் பலவும் எப்போதோ பேச்சு வழக்கற்றன; புதிய பல மொழிகள் தொன்மையுடையனவல்ல. தமிழ் ஒன்றே மூவாயிரம் ஆண்டுகட்கு மேலாகப் பேசப்பட்டு வருகிறது. அதனால் இம் மொழி பேசிய மாந்தர்களை மூவாயிரம் ஆண்டுடன் பெருக்கிக் கணக்கிட்டால், அத்தனை தொகை

வேறெம்மொழிக்கும் அமையாது. இது ஒரு தனிச் சிறப்பல்லவா?

அன்று முதலா இன்று வரையும்
என்னைப் பேசியோர் எண்ணப் படினே
எந்த மொழிக்கும் என்மொழித் தொகையோர்
விஞ்சுவ ரல்லது எஞ்சுவ ரில்லை...

இத் தகைய தமிழியக்கத் தலைவராக அண்மையில் விளங்கிய இச்சான்றோர்தம் இறுதிக் குறிக்கோளை நிறைவேற்றுவதே நம் கடமையாகும். தமிழமைப்புக்கள் அனைத்தும், எப்படிக்கும் முதற்படியாய் தமிழ்வழிக் கல்வி இயக்கத்தை வெற்றிபெறச் செய்தல் வேண்டும்.

கீழ்வானில் எழுகதிரோன் இருள்நீக்கல் உறுதி. 'உலகம் உவப்ப, வலன் ஏர்பு திரிதரு - பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டாங்கு,' எங்கும் புத்தொளி பரவக் காண்கின்றோம். இருபத்தொன்றாம் நூற்றாண்டு தமிழின் பொற்காலமாக அமையப் போகிறது. இந் நற்செய்தியை நமக்கு உணர்த்த வந்த 'விடிவெள்ளியே,' நம் மாணிக்கச் செம்மல். 'விடியும்' என்ற அவர் நம்பிக்கை அதோ நனவாகிக் கொண்டிருக்கிறது! தமிழோடு என்றென்றும் உடனுறையும் மாணிக்கச் செம்மலின் மனமும் மகிழ்கிறது!






## மாணிக்கனார் நூல்கள்

| | | |
|---|---|---|
| நாடகங்கள் | 1. | மனைவியின் உரிமை |
| | 2. | நெல்லிக் கனி |
| | 3. | உப்பங்கழி |
| | 4. | ஒரு நொடியில் |
| ஆராய்ச்சி | 5. | தொல்காப்பியக் கடல் |
| | 6. | திருக்குறட் சுடர் |
| | 7. | சங்க நெறி |
| | 8. | காப்பியப் பார்வை |
| | 9. | இலக்கியச் சாறு |
| | 10. | தமிழ்க் காதல் |
| | 11. | வள்ளுவம் |
| | 12. | கம்பர் |
| கவிதை | 13. | கொடை விளக்கு |
| | 14. | மாமலர்கள் |
| | 15. | மாணிக்கக் குறள் |
| பிறவகை | 16. | இந்திய ஆட்சி மொழிகள் (தலைவர்களுக்கு) |
| | 17. | இரட்டைக் காப்பியங்கள் |
| | 18. | திருக்குறள் தெளிவுரை |
| | 19. | நகரத்தார் அறப்பட்டயங்கள் |
| **English** | 20. | The Tamil Concept of Love |
| | 21. | A Study of Tamil verbs |
| | 22. | Collected Papers |
| | 23. | Tamilology |



## தமிழண்ணல்
## டாக்டர் இராம. பெரிய கருப்பன்

12.08.1928-ல் பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்ட நெற்குப்பையில் பிறந்த இவர் சங்க இலக்கியத்தில் மரபுகள் என்ற ஆய்வுக்காக முனைவர் பட்டம் பெற்றவர்.

உயர்நிலைப்பள்ளியில் 13 ஆண்டுகள், கல்லூரியில் 10 ஆண்டுகள், பல்கலைக் கழகத்தில் 18 ஆண்டுகள், பல்கலைக் கழக மானியக் குழுவின் (UGC) சிறப்பு நிலைப் பேராசிரியராக 2 ஆண்டுகள் என 43 ஆண்டுகள் ஆசிரியராகப் பணியாற்றிய பெருமைக்குரியவர்.

ஆய்வியல், ஒப்பியல், சங்க இலக்கியம், நாட்டுப்புற பாடல்கள், இலக்கியக் கொள்கைகள் போன்ற துறைகளில் 30 நூல்கள் படைத்த படைப்பாளர்.

தமிழக அரசின் பொற்கிழிப்பரிசு (மீனாட்சியம்மை கவிதைக்காக - 1973) நல்லாசிரியர் விருது (1983), திரு.வி.க. விருது (1989), சிறந்த நூல்கள் எழுதியமைக்காக இரண்டு பரிசு (1982), குன்றக்குடி அடிகளார் பாரி விழாவில் நல்கிய 'கணக்காயர்' என்ற மெய்க்கீர்த்திப் பட்டயம், பல்கலைக் கழக மானியக் குழுவினரால் 1981, 82-ம் ஆண்டுகளில் இந்தியா முழுவதுமுள்ள பல்கலைக்கழகத் தமிழ்த் துறைகளில் தொல்காப்பியம் பற்றி விரிவுரையாற்ற தேசியப் பேராசிரியராக நியமனம் பெற்றமை, சாகித்ய அகாதமியில் பல ஆண்டுகள் உறுப்பினராகவும், தமிழ்த்துறை ஆலோசனைக் குழுவின் இயக்குநராகவும் பணியாற்றியமை தமிழக அரசின் தமிழ் வளர்ச்சிக்குழு, தமிழகப் புலவர்குழு, வளர் தமிழ் மன்றம், தமிழ்ப் பல்கலைக்கழக செனேட் ஆகியவற்றில் உறுப்பினர் பணி, மேலைச் சிவபுரி சன்மார்க்க சபை செந்தமிழ்க்கல்லூரி நிர்வாகக் குழுத் தலைவர், அகில இந்திய பல்கலைக் கழகங்களின் தமிழாசிரியர் மன்றத்தின் தலைவர் எனப் பல பணியாற்றி வரும் திறமையாளர்.

"உங்கள் தமிழைத் தெரிந்து கொள்ளுங்கள்" என்று தினமணி நாளேட்டில் ஆறு ஆண்டுகள் தொடர்ந்து எழுதி இன்றையத் தமிழ் இனம் மீது இவர் கொண்ட அக்கறையைத் தெள்ளிதின் காட்டிய தமிழ்த் தொண்டர்.

பல்கலைக் கழக மானியக் குழு இந்தியாவிலேயே முதன்முறையாக இருபத்தி இரண்டு இலட்சத்திற்கும் மேற்பட்ட தொகையை இவர் துறைத் தலைவராக விளங்கிய காலத்து அளித்து இவர்தம் அருந்தமிழ்த் தொண்டு முயற்சியை இனங்கண்டு கொண்டமையும் தமிழ்த்துறை சிறப்புநிலைப் பேராசிரியர் என 1990-ல் பல்கலைக்கழக மானியக் குழுவினால் தமிழுக்காக முதன் முதலில் தேசியப் பேராசிரியராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றமையும் ஆகிய கீர்த்தி மிக்கவர்.

திரைகடலோடித் திரவியம் தேடிய பரம்பரையைச் சேர்ந்த இவர் இலங்கை, ஜப்பான், மொரீசியஸ், மலேசியா, சிங்கப்பூர் என்று பல கடல் கடந்த நாடுகளிலும் தேமதுரத் தமிழ் முழக்கம் செய்த பீடுடையவர்.

தமிழ் நலம் பாதி தன்னலம் பாதி என்ற எல்லையையும் தாண்டி தமிழ்நலமே தன்னலமாய்க் கொண்டு தமிழுக்காகவே தம் வாழ்நாளை அர்ப்பணித்துக்கொண்ட அருந்தமிழ்வாணர் - பெரிய கருப்பன் எனப் பேர் கொண்ட பெரும் பெயர்த் தமிழண்ணல் இவர்.

